# சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களும் வள்ளுவரின் அக உளவியல் கூறுகளும்



பாரதிதாசன் பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக

அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**ஜெ. ஆரோக்கிய எப்லின் லதா**
(பதிவு எண். : 042427/Ph.D.2/Tamil/P.T./ஜனவரி 2010)

நெறியாளர்

**முனைவர் ஆத. முத்தையா**
முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர்



**தமிழ்த்துறை**

**அ. வீரையா வாண்டையார் நினைவு திரு புட்பம் கல்லூரி (தன்னாட்சி)**

பூண்டி – 613 503, தஞ்சாவூர் மாவட்டம்.

**டிசம்பர் 2016**

**முனைவர் ஆத. முத்தையா**
முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர்
அ. வீரையா வாண்டையார் நினைவு திரு புட்பம் கல்லூரி (தன்னாட்சி)
பூண்டி – 613 503, தஞ்சாவூர் மாவட்டம்.

---

# நெறியாளர் சான்றிதழ்

"**சங்க இலக்கிய மருதத் திணைப் பாடல்களும் வள்ளுவரின் அக உளவியல் கூறுகளும்**" என்னும் தலைப்பில் திருமதி. ஆரோக்கிய எப்லின் லதா எழுதியுள்ள இவ்வாய்வேடு கல்லூரியில் 2010 – 2016ம் ஆண்டு கல்வியாண்டில் தமிழாய்வுத் துறையில் முனைவர் பட்ட ஆய்விற்காக எனது மேற்பார்வையில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வாகும். இந்த ஆய்வு ஆய்வாளரால் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்தவொரு பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

மேற்பார்வையாளர் கையொப்பம்

இடம் :

நாள் :

துறைத் தலைவர் கையொப்பம்

**ஜெ. ஆரோக்கிய எப்லின் லதா**
பதிவு எண். : 042427/பி.எச்.டி.2/தமிழ்/ப.நே./ஜனவரி 2010
தமிழாய்வுத்துறை
அ. வீரையா வாண்டையார் நினைவு திரு புட்பம் கல்லூரி (தன்னாட்சி)
பூண்டி – 613 503, தஞ்சாவூர் மாவட்டம்.

---

# ஆய்வாளர் உறுதிமொழி

கல்லூரி தமிழாய்வுத் துறையில் பணியாற்றி ஓய்வுபெற்ற முனைவர் ஆத. முத்தையா அவர்களின் நெறுப்படுத்தலில் "**சங்க இலக்கிய மருதத் திணைப் பாடல்களும் வள்ளுவரின் அக உளவியல் கூறுகளும்**" என்னும் தலைப்பில் உருவாக்கப்பெற்றுள்ள இவ்வாய்வேடு (முனைவர் பட்டம்) என்னுடைய முயற்சியின் வடிவமாகும். இதற்கு முன் வேறு எந்த ஒரு பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என உறுதியளிக்கின்றேன்.

இடம் :

நாள் :

ஆய்வாளர் கையொப்பம்.

# நன்றியுரை

'தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வார் பயன்தெரி வார்'

என்னும் வள்ளுவரின் வாய்மொழிக்கேற்ப பல வகையிலும் உதவி புரிந்தவர்களை நினைத்துப் பார்க்கும் களம் இதுவாக அமைகிறது. அந்த வகையில் பாரதிதாசன் பல்கலைக் கழகத்திற்கு என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்வுக் காலத்தில் எனக்கு ஆர்வத்தை ஊட்டி, இவ்வாய்வு செம்மையாக அமைய என்னை ஆற்றுப்படுத்திய கல்லூரி முதல்வர் மற்றும் தமிழாய்வுத் துறைத் தலைவர் முனைவர் வீ. சிவபாதம் அவர்களுக்கு முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுசார் கருத்துகளையும், தேவையான நூல்களையும், அறிவுரைகளையும் வழங்கி இவ் ஆய்வேடு செம்மையான முறையில் அமைந்திட ஆய்வு நெறியாளராக இருந்து பல ஆலோசனை நல்கி, வழி நடத்திய முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் ஆத. முத்தையா அவர்களுக்கும், மற்றும் தமிழ்த்துறையின் பிற பேராசிரியர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன் முகத்தோடு வரவேற்று, என் ஆய்வு சம்பந்தமான அனைத்து நிலைகளிலும் எனக்கு உளவியல் தொடர்பான நூல்களையும், தகவல்களையும் வழங்கி இவ்வாய்வேடு சிறக்க உதவிய முனைவர நா. சிவாஜி கபிலன் ஐயா அவர்களுக்கும் நன்றிகள் பல.

ஆய்வுக் குழுத்தலைவர்கள் முனைவர் ச. மணலி சோமசுந்தரம், பிஷப் ஹீபர் கல்லூரி அவர்களுக்கும், முனைவர் ச. ஈஸ்வரன், தமிழ்த்துறைத் தலைவர், தேசியக் கல்லூரி அவர்களுக்கும் நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

என்னுள்ளத்தில் பரிபூரணமாய் சங்கமித்திருக்கும் என் இனிய பெற்றோருக்கு எனது நன்றியைச் சமர்ப்பிக்கிறேன். எனது வாழ்வின் அனைத்து நிலைகளிலும் பங்குகொண்டு எனது வளர்ச்சியில் அக்கறைக் காட்டி ஊக்கப்படுத்தி வரும் எனது கணவர் சி. ஆரோக்கியதாஸ் அவர்களுக்கும், எனது மகன் சாம்ரிசாந்திற்கும், உடன் பிறந்தவர்களுக்கும், நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் எனது நன்றியைக் காணிக்கையாக்கிக் கொள்கிறேன்.

பலவகையிலும் நினைத்துப் பார்க்கும் களம் இதுவாக அமைகின்றது. ஆய்வு தொடங்கிய நாள்முதல் இன்று வரை ஆய்வுப் பணியில் உதவி புரிந்த என் தோழிகள், கவிஞர், நல்லாசிரியர், என பல விருதுகளை பெற்ற முனைவர் ரெ. மலர்விழி, எம். விஜயலெட்சுமி அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களை வழங்கி ஆய்வுப்பணி சிறக்க உதவிய அ. வீரையா வாண்டையார் நினைவு திரு. புட்பம் கல்லூரி நூலகத்திற்கும் நேரு நினைவுக் கல்லூரி நூலகத்திற்கும், தூய வளனார் தன்னாட்சி கல்லூரி நூலகத்திற்கும், ஊர்ப்புற நூலகத்திற்கும் நன்றிகள் பல கூறு விழைகிறேன்.

இவ்வாய்வேட்டை சிறப்புறத் தட்டச்சு செய்து கொடுத்த ஏஎஸ்பி கணினி நிறுவனத்தார்க்கும் எனது நன்றிகள்.

# முடிவுரை

*சங்க இலக்கியம் எனப்படுவன பத்துப்பாட்டும், எட்டுத் தொகையும் ஆகும். சங்க இலக்கியங்கள் சொல்லாட்சி, பொருள், நயம், உவமை நலன், கற்பனை என்னும் பல்வேறு சிறப்பியல்புகளைக் கொண்டு விளங்குகின்றது. இலக்கியச் சிறப்பு, இலக்கியத் தோற்றம் ஆகியவற்றை முதன்மையாகக் கொண்டு விளங்குகின்றது சங்க இலக்கியங்கள். அச்சங்க இலக்கியங்கள் ஐந்திணைகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. அகம் ஐந்திணைகளுள் மருதத் திணைப் பாடல்கள் மட்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. 'சங்க இலக்கிய மருதத் திணைப் பாடல்களும் வள்ளுவரின் அக உளவியல் கூறுகளும் என்னும் தலைப்பின் அமைந்த இவ்வாய்வேடு நான்கு இயல்களைக் கொண்டு விளங்குகிறது. மருதத் திணைப் பாடல்களோடு வள்ளுவரின் அக உளவியல் செய்திகள் பகுத்து ஆயப்பட்டுள்ளது.*

*உளவியல் உலகின் தந்தையெனப் போற்றப்படும் சிக்மண்ட் பிராய்டின் உளவியல் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு ஆய்வு செய்யப் பெற்ற வகையில், உளவியல் பற்றின செய்திகள் அனைத்தும் உளவியலார் சிக்மண்ட் பிராய்ட் கூறும் கருத்துகளும் பிற தத்துவாதிகளின் கருத்துக்களும் உளவியல் இன்றைய கலை, இலக்கியங்களில் கையாளப்பட்ட இடங்களையும் விளக்கி சொல்லப்பட்டிருக்கிறது. உளவியலின் வளர்ச்சியும் வரலாறும் பற்றியும் பேசப்பட்டுள்ளது.*

*மருதநிலத்தில் மருதம் என்ற சொல் எவ்வாறு வழக்கில் ஏற்பட்டது என்பது பற்றியும் மருதத் திணை மக்களின் வாழ்வியல் ஒழுகலாறுகள், வள்ளுவன் கண்ட அகம், பிரிவு ஆற்றாத தலைவி, பிரிவின் வருத்தம், ஆண்,*

பெண், காம வெளிப்பாட்டை உணர்த்தும் விதம் பிராய்டின் பாலியல் கருத்து, மன இறுக்கம் ஆகிய பற்றி விளக்கும் வகையில் அமைந்துள்ளது.

மனிதன் தோன்றிய காலந்தொட்டு உளவியலும் வளர்ந்துள்ளது. ஆயினும் உளவியல், மனம் குறித்த சிந்தனைகள் பதினாறாம் நூற்றாண்டில் இருந்து தொடங்குகின்றன. மருத்துவ இயலின் தந்தை எனப்படும் ஹிப்போகிரேட்டஸ் காலத்தில் மனநல மருத்துவம் தோன்றியதை அறிய முடிகிறது. உளவியல் ஓர் அறிவியல் துறையாகச் சிறந்த விளங்கியது. ஆல்பிரட் ஆட்லர், யூங், லக்கான் போன்ற உளவியல் அறிஞர்கள் காலத்தில் தோன்றிய சிக்மண்ட் பிராய்டு உளவியலின் தந்தையெனப் போற்றப்படுகிறார். அவரது உளப்பகுப்பாய்வுமுறை (Psycho Analysis) சமூகத்தில் காணப்படும் உளநோய்களைக் குணப்படுத்தக் காரணமாயிற்று.

திருவள்ளுவரும் சிக்மண்ட் பிராய்டும் எந்தெந்த இடத்தில் ஒத்துப் போயினர் என்பதை விரிவாக எடுத்தரைக்கப்பட்டுள்ளது. நனவு மனம், நனவிலி மனம் பற்றி சிக்மண்ட் பிராய்டின் கருத்தக்களம் திருவள்ளுவரின் உளவியல் செய்திகளும் ஒன்றோடொன்று தொடர்புடையன என்பவை பற்றியும் வேறுபட்ட தன்மைகள் பற்றியும் விரிவாக வகைப்படுத்திக் கூறப்பட்டுள்ளது.

இயற்கை வலியது, முற்றாக வெல்ல முடியாதது. சமூகப் பண்பாடு, வளர்ந்து வரும் விஞ்ஞானம், தொழில் நுட்பம் மூலம் பலவற்றைக் கட்டுப்படுத்த முயல்கின்றோம் காமம் உட்பட. காதல் என்ற பிரச்சாரம் மூலம், கலை இலக்கியங்கள் ஆக்கப்படுகின்றன. காமத்தை ‘காதல்’ உணர்வாகவே பண்பாடு என வெளிப்படுத்துகிறோம். காம உணர்வை வள்ளுவர், சிக்மண்ட் பிராய்டு தயக்கமின்றி வெளிப்படுத்தினர். சமூகப் பண்பாட்டு முறைகள் நம்மைக் கட்டுப்படுத்துகின்றன. நவீன கலை

இலக்கியம், சினிமா, டிவி போன்ற ஊடகங்கள், காம நோயைத் தணிக்க வாய்ப்பளிக்கின்றன, தீர்க்க அல்ல. இந்த உண்மை நிலையை நாம் பேசுவதில்லை, எழுதுவதில்லை. நடைமுறையில் அனைவரிடமும் உண்டு. பண்பாடான 'காதல்' என்ற வார்த்தையை நாம் பயன்படுத்துகிறோம்.

காமத்தைக் கட்டுப்படுத்துவதாக சட்டவிதிகள், அறநெறிகள், சமய போதனைகள் முயலுகின்றன. ஆயினும் இவை மீறப்படுவதை நாள்தோறும் ஊடகங்கள் கூறுகின்றன. ஆனால் சங்க இலக்கியங்களும் திருக்குறளும் காமத்தை மறைத்தோ, ஒளித்தோ பேசவில்லை என்பதை இவ்வாய்வேடு நிரூபிக்கிறது. சங்க அகநூல்களையும் திருவள்ளுவரது குறளையும் பின்வரும் ஆய்வாளர்கள் உளவியல் கண் பொருத்தி ஆய்வுகள் நிகழ்த்தலாம்.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| குறள் | – | திருக்குறள் |
| குறு | – | குறுந்தொகை |
| சை.சி.நூ. கழகம் | – | சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் |
| தொல் | – | தொல்காப்பியம் |
| தொல். பொருள் | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| நூ. | – | நூற்பா |
| ப. | – | பக்கம் |
| ப. ஆ. | – | பதிப்பாசிரியர் |
| பா | – | பாடல் |
| மொ.ஆ. | – | மொழிப்பெயர்ப்பு ஆசிரியர் |
| க.ஆ. | – | கட்டுரை ஆசிரியர் |
| ப.ஆ. | – | பதிப்பு ஆசிரியர் |
| மேலது | – | மேலே குறிப்பிட்ட நூல் |

# முன்னுரை

*உயர்தனிச் செம்மொழியாகப் போற்றப்பெறும் தமிழ்மொழி உலகில் உள்ள தொன்மையான மொழிகளுள் ஒன்றாகத் திகழ்கிறது. தமிழெனப்படுவது 'சங்கத் தமிழே' என்பர். சங்கம் வைத்து தமிழ் வளர்த்தனர் நம் முன்னோர்கள். சிறப்புமிக்க சங்கத்தமிழ் வழி எழுந்த இலக்கியங்கள் சங்க இலக்கியங்கள் எனப்பெற்றன. சங்க நூல்கள் எனப் பெறுவது பாட்டும் தொகையும் எனப்போற்றப்பெறும் பத்துப்பாட்டும், எட்டுத் தொகையும் ஆகும். தமிழரின் வாழ்க்கையை சித்தரித்துக்காட்டும் காலக் கண்ணாடி சங்க இலக்கியங்களே ஆகும்.*

*தமிழில் தோன்றிய அற நூல்களில் முதன்மையான நூல் என்ற சிறப்பினைப் பெறுவது திருக்குறள். 'உலகப் பொதுமறை' என்ற புகழினை உடைய இந்நூல் மூன்று இயல்களை இடையது. அறத்துப்பாலில் 380 குறட்பாக்களும், பொருட்பாலில் 700 குறட்பாக்களும், காமத்துப்பாலில் 250 குறட்பாக்களும் உடையது.*

*அறத்தின் வழியாக மனித இனத்தின் மன ஒழுக்க அறவாழ்வு, அரசியல் மனித வாழ்விற்கான காம உணர்ச்சியின் முதன்மையையும் வகுத்துக் கூறியவர் வள்ளுவர் ஆவார். வள்ளுவரைப் போன்றே மேலைநாட்டில் பிறந்த சிக்மண்ட் பிராய்டு என்பவரும் மனித வாழ்வின் உளவியல் பண்புகளை எடுத்துரைத்தவர் ஆவர். திருவள்ளுவருக்கும் சிக்மண்ட் பிராய்டுக்கும் பல ஒற்றுமைகள் உள்ளன. திருவள்ளுவர் தமிழ்நாட்டுத் தமிழர். சிக்மண்ட் பிராய்டு ஐரோப்பியர். வள்ளுவர் காலம் கி.பி. 4ம் நூற்றாண்டு எனில் சிக்மண்ட் பிராய்டின் காலம் 1856 - 1939 ஆகும்.. ஆஸ்திரேலியாவில் பிறந்தவர், யூத இனத்தவர் ஆவார்.*

*சிக்மண்ட் பிராய்டு ஒழுக்க வழிகள், மருத்துவ வழிகள், அரசியல், சமயம் உள்ளிட்டவற்றை ஆராய்ந்தவர். சிறப்பாக காமத்துப்பாலில் மனித இனத்திற்கான காம உணர்ச்சியின் முக்கியத்துவத்தையும், சிறப்பையும் விஞ்ஞானம் முறையில் முதன் முதலில் விளக்கியவர் ஆவார்.*

## ஆய்வுத் தலைப்பு

*சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களும் வள்ளுவரின் அக உளவியல் கூறுகளும் என்பது இவ் ஆய்வின் தலைப்பு ஆகும். மருதத்திணைப் பாடல்களையும் வள்ளுவரின் அக உளவியல் கூறுகளையும் எடுத்துக் கூறுவதாக இவ் ஆய்வுத் தலைப்பு அமைந்துள்ளது.*

## கருதுகோள்

*சங்க இலக்கியங்கள் யாவும் இன்றைய வாழ்வியல் சூழலோடு ஒப்பிட்டுப் பார்க்கும் தன்மையுடையனவாகவே உள்ளன. ஒழுக்கப்பண்புகளை முன்னிறுத்தி, இன்றைய காலக்கட்டத்தில் சூழலுக்கு ஏற்ப மாற்றம் செய்து கொண்டு வாழும் மனித இனம், தம் வாழ்வில் உண்மையான வாழ்வியல் முறைகளை நெறிப்படுத்தும் விதமாகப் புதைந்து போன மானுடச் சமுதாயத்தைப் புதுப்பித்து, வாழ்வின் பல நிலைகளில் உள்ளவர்களும் மேற்கொள்ள வேண்டிய ஒழுக்க முறைகளை எடுத்து இயம்புகிறது என்பதே இந்த ஆய்வின் கருதுகோள் ஆகும்.*

## ஆய்வின் நோக்கம்

*அக வாழ்வு எனப்படுவது களவு, கற்பு என பிரிக்கப்பட்டுள்ளது. களவு வாழ்க்கை நெறி பிறழாமல் பண்டைய தமிழர், முறையான வாழ்வினை மேற்கொண்டனர். இதனை விளக்கும் விதமாகவும் திருக்குறளில் காமத்துப் பாலை உளவியல் நோக்கில் தெள்ளத் தெளிவாக ஆய்ந்து கூற வேண்டும் என அடிப்படை நோக்கோடும் இந்த ஆய்வானது நிகழ்த்தப்பட்டிருக்கிறது..*

## ஆய்வுப் பயன்

பண்டைய காலந்தொட்டு மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கும் அக வாழ்வினைச் சித்தரித்துக் காட்டுகிறது இவ்வாய்வு. பெண்களுக்கு நிகர் ஆண்களும் மாறவேண்டும். கற்புக்கு இலக்கணமாகச் சங்க கால மகளிர் வாழ்ந்தனர். பரத்தையற் பிரிவு இருந்த போதும் சிறு சிறு ஊடல்களாகவும், ஊடல் காமத்திற்கு இன்பம் பயப்பனவாகவும், அன்பின் இலக்கணமாகவும் ஆண்களும் பெண்களும் இணைந்து இல்லறத்தை நல்லறமாக நடத்தி வந்துள்ளனர். இன்றைய சமுதாயச் சூழலுக்கு இவ் ஆய்வு பயன் உள்ளதாக அமையும்.

## ஆய்வு அணுகுமுறைகள்

இவ் ஆய்வில் பகுப்புமுறை ஆய்வு அடிப்படையாக மேற்கொள்ளப்பட்டுள்ளது. இவ் ஆய்வு எல்லையில் வரையறுக்கப் பட்டுள்ள கருத்துக்கள் திறனாய்வு நெறிப்படி தொகுக்கப்பட்டுள்ளன. திருக்குறளும், சங்க இலக்கியமும் ஒப்பிட்டு ஆய்வாக மேற்கொள்ளப்பட்டுள்ளதால் இந்த ஆய்வில் ஒப்பீட்டு முறைத் திறனாய்வு முறையும், மருதத்திணைப் பாடல்களில் உளவியல் செய்திகளை வரையறுத்து கொள்வதால் விளக்கமுறைத் திறனாய்வும், உளவியல் ஆய்வு அணுமுறையும் இவ் ஆய்வின் அணுகுமுறைகளாக மேற்கொள்ளப்படுகின்றன.

## ஆய்வு எல்லை

எட்டுத் தொகையில் உள்ள ஐந்து அக இலக்கியங்களாகிய நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, கலித்தொகை, ஐங்குறுநூறு ஆகியவற்றுள் உள்ள மருதத்திணைப் பாடல்களும் வள்ளுவரின் காமத்துப் பாலும் ஆய்வு எல்லைகளாக வரையறுக்கப்பட்டுள்ளன.

## ஆய்வேட்டின் அமைப்பு

*சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களும், வள்ளுவரின் அக உளவியல் கூறுகளும் எனும் தலைப்பிலான இவ் ஆய்வேடு பின்வருமாறு இயல் பகுக்கப்பட்டுள்ளது. அவை,*

1. *உளவியல் ஒரு கண்ணோட்டம்*
2. *சங்க மருதத்திணைப் பாடல்களில் உளவியல்*
3. *உளவியல் நோக்கில் திருவள்ளுவரும் சிக்மண்ட் பிராய்டும்*
4. *திருக்குறள், காமத்துப்பாலில் உளவியல்*

## இயல் விளக்கம்

***உளவியல் ஒரு கண்ணோட்டம்*** *எனும் தலைப்பிலான முதல் இயலில் உளவியல் ஓர் கண்ணோட்டம், உளவியல் என்றால் என்ன? உளவியலின் வகைகள், உளவியல் தத்துவவாதிகளின் சிந்தனைகள், உளவியலார் சிக்மண்ட் பிராய்டு, பால் இன்பம், ஐம்புலன்கள், நனவு, கனவிலி, ஹோமரின் உளப் பிறழ்வு, சங்க இலக்கியங்களில் உளவியல், புதினங்களில் உளவியல், உளவியலைக் கையாண்ட எழுத்தாளர்கள், புதுக்கவிதைகளில் உளவியல், உளவியல் வளர்ச்சியும் வரலாறும் ஆகியன பற்றி விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.*

***சங்க மருதத்திணைப் பாடல்களில் உளவியல்*** *எனும் தலைப்பிலான இரண்டாவது இயலில் மருதநிலம் பற்றிய செய்திகள், மருதத்திணை மக்களின் வாழ்வியல் முறை, அகத்திணையும் தமிழரும், வள்ளுவன் கண்ட அகம், வள்ளுவன் கண்ட பெண், மருதநிலைப் பாடல்களில் உளவியல், பிரிவு ஆற்றாத தலைவி, பிரிவின் வருத்தம், ஆண், பெண் காம வெளிப்பாட்டை உணர்த்துதல், வேட்கை குறித்து பிராய்டின் கருத்து, பாலியல் குறித்து பிராய்டின் கருத்து, மன இறுக்கம், ஆகியன பற்றி விரிவாக ஆய்ந்துள்ளது.*

**உளவியல் நோக்கில் திருவள்ளுவரும் சிக்மண்ட் பிராய்டும்** எனும் தலைப்பிலான மூன்றாவது இயலில் வள்ளுவத்தின மாண்பு, வள்ளுவரும் பிராய்டும், கனவு பற்றி வள்ளுவரும் பிராய்டும், வள்ளுவன் கண்ட கனவு, அன்பின் ஆழம், கனவு காதலை வளர்க்கும் விதம், வள்ளுவத்தின் இன்பம் மகிழ்ச்சி, இலக்கியத்தில் பிராய்டு, நனவு மனம், நினைத்து புலம்பல், மனித மனத்தின் தனிச்சிறப்பு உள்ளத்துள் மறைந்தவை, கலை இலக்கியங்களில் உளவியல், பிராய்டின் மூன்று துறைகள், காமத்தின் சிறப்பு, இன்பத்தில் துன்புறுதல், ஆழமன உணர்ச்சியில் பிராய்டும் திருவள்ளுவரும் ஆகிய தலைப்புகளில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**திருக்குறள், காமத்துப்பாலில் உளவியல்** எனும் தலைப்பிலான நான்காவது இயலில் திணை கூறும் காதல் நிலை, காமத்துப் பாலில் காதல் வாழ்க்கை, காமத்துப்பாலில் இன்பமும் காமமும், கற்பு நிலை, ஊடல் நிலை, களவுப் பற்றி விளக்கம், களவின் வகைகள், காமத்துப் பாலில் களவில் நிகழும் கூற்றுகள், தலைவன், தலைவி, தோழி கூற்று நிகழும் இடங்கள், காதலும் காமமும், புலவி, ஊடல், துணி, காமத்துப் பாலில் அறம், காமத்துப் பாலில் இளிவரல் சுவை, ஆகியன பற்றிய தலைப்புகளில் தெள்ளத் தெளிவாக ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

இயல் தோறும் கண்ட முடிவுகள் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன. இவ் ஆய்விற்குத் துணைநின்ற முதன்மைச் சான்றாதாரங்கள், துணைமைச் சான்றாதாரங்கள் ஆய்வின் முடிவில் தரப்பட்டுள்ளன. மேலாய்வுகள் சுட்டப்பட்டுள்ளன.

# *இயல் 1*

# உளவியல் ஒரு கண்ணோட்டம்

*'மனத்தை மிகவும் சக்திவாய்ந்த பணியாள்' எனக் குறிப்பிடலாம். அது மனிதனுக்கு வாழ்க்கை என்ற ஒன்றை உருவாக்கித் தருகிறது. 'மனத்தின் அமைப்பையும், இயல்பையும், அதன் செயல்பாட்டுத் திறனையும் தெளிவாக விளக்கிக் கொண்டு மனத்தின் ஆற்றலைச் சீராக, சரியாக பிரயோகித்து உயர்ந்த வாழ்க்கை முறைகளை அமைத்துக் கொண்டு வாழும் முறையினையே மனேத்துவம் அலலது மனவியல் அல்லது உளவியல்'*[1] *என்பர் அறிஞர்.*

**உளவியல் விளக்கம்**

*மனோதத்துவம், உளவியல் எனத் தமிழிலும், சைக்காலது* (Psychology) *என ஆங்கில மொழியிலும் கூறப்படுமி சொல்லானது 'ஆன்மா' அல்லது 'ஆவி'* (Soul) *எனும் நேரடிப் பொருள் தருவதாகும்*[2] *என்பர்.*

*முதன் முதலில் உளவியலை 'ஆன்மாவைப் பற்றிய அறிவியல்' என்று வரையறுத்தனர். சைக்காலஜி* (Psychology) *எனும் சொல், சைக்கி* (Psyche), *லோகஸ்* (Logos) *எனும் கிரேக்கச் சொற்களை மூலமாகக் கொண்டதாகும். 'சைக்கி' என்றால் 'ஆன்மா' அல்லது 'ஆவி' என்று பொருள். 'லோகஸ்' என்றால் அறிவியல் அல்லது அறிவுத்துறை அல்லது ஒருவனுடைய குணம், அல்லது செயல் என்று பொருள் தரும்'*[3] *என்பர்.*

*மனிதனுடைய வெளிப்படையான செயற்பாடு மட்டுமல்லாது, அவனுடைய சிந்தனை வளம், உணர்ச்சிவயப்படும் பாங்கு, அச்சம் அல்லது*

துணிச்சல் போன்ற உணர்வுகள் அனைத்தைப் பற்றியும் ஒட்டுமொத்தமாக ஆய்வதை மனோதத்துவம் அல்லது உளவியல்’[4] என்பர்.

**உளவியல் குறித்த அறிஞர்கள் விளக்கம்**

உளவியல் குறித்த விளக்கங்களை அறிஞர்கள் பலர் விளக்கியுள்ளனர். ‘உள்ளத்தின் வாழ்க்கையைப் பற்றியதோர் அறிவியலே உளவியல்’[5] என்பார் வில்லியம் ஜேம்ஸ் (William James). ஆனால் மனிதனின் இயற்கையைப் பற்றி ஆராய்வதே உளவியல் எனக் கூறியவர் போரிங்’ (Boring)[6] ஆவார். இக்கூற்று ஏற்றுக் கொள்ளப்பட்டது. பின்னர், அறிவியல் போக்கில் ஆராயும் துறையாகக் கொள்ளப்பட்டது. ஆதலின், ‘மனிதனைப் பற்றிய உண்மைகளை விளக்கும் அறிவியற் துறைகளுள் ஒன்றே உளவியல்’[7] என வரையறை செய்கிறார் ஜான்டியூபின் (John Deway).

தனிமனித நடத்தை உளவியல் எனக் கொள்ளப்பட்டதால், சூழ்நிலை சம்பந்தப்பட்ட தனியவனின் நடவடிக்கைகள் பற்றியதோர் அறிவியல்’[8] என்கிறார் ஆர்.எஸ். உட்வொர்த் (R.S. Woodsworth).

எனவே, உளவியல் என்பது அறிவியல், ஓர் உயிரியைப் பற்றி நன்கு அறிந்துகொள்வதும், உயிரின் எல்லா நடத்தைகளையும் கட்டுப்படுத்துவதும் இதன் நோக்கமாகும்’[9] எனும் அறிஞர் மாக்டூகல் (Mcdougal) கருத்து ஏற்புடையதாகும்.

இவ்வாறாக, அறிஞர்கள் பலரும் உளவியலுக்குப் பல விளக்கங்களை அளித்துள்ளனர்.

**உளவியலின் வகைகள்**

*உளவியல் பலதுறைகளை கொண்டதாக விளக்குகிறது. அது பல்வேறு பிரிவுகளை உள்ளடக்கியதாகும்.*

| | | | |
|---|---|---|---|
| *1.* | *உடலியல் உளவியல்* | - | Physiological Psychology |
| *2.* | *விலங்கு உளவியல்* | - | Animal Psychology |
| *3.* | *பிறழ்நடத்தை உளவியல்* | - | Abnormal Psychology |
| *4.* | *உள மருத்தகம்* | - | Psychopharmacology |
| *5.* | *சமூக உளவியல்* | - | Social Psychology |
| *6.* | *கல்வி உளவியல்* | - | Educational Psychology |
| *7.* | *பொறித்துறை உளவியல்* | - | Industrial Psychology |
| *8.* | *இராணுவத்துறை உளவியல்* | - | Military Psychology |

*என்னவாகும்.*’[10]

**உளவியல் அணுகுமுறைகள்**

*உளவியல் நோக்கில் இலக்கியத்தைப் பல கோணங்களில் அணுகலாம். இயல்புநிலை, உணர்ச்சிநிலை, மயக்கநிலை, தனிநிலை, ஐயநிலை, சுட்டுநிலை, கால வளர்ச்சி நிலை, சமூக நிலை, சுற்றுச் சார்புநிலை, உறவுநிலை போன்ற பலவித நிலைகளை அடிப்படையாகக் கொண்டு உளவியல் சிந்தனையால் இலக்கியத்தை அணுகுலாம்*’[11] *என்பர் அறிஞர். இவை உளவியல் அணுகுமுறைகளாகும்.*

**அணுகுமுறைப் பயன்கள்**

*இலக்கியத்தில் காட்டப்படும் வாழ்க்கை இயல்புகளில் உண்மைகளைச் சரியாக அறிய உளவியல் அணுகுமுறை மிகவும் உதவுகிறது. மனித மனத்தில் ஏற்படும் சிக்கல்களையும், குழப்பங்களையும் அறிய வாய்ப்பு கிடைக்கிறது.*

*‘வாழ்வின் துன்பங்களை உரிய காரணங்களால் தெரிந்து, அவை தீர வழிகாண்பதற்கு இத்தகு அணுகுமுறை ஆய்வு உதவும். சமுதாயத்தை நல்லமுறையாக மாற்றி அமைக்கவும் உளவியல் சிந்தனை பயன்படும்’*[12] *என்பார் அ.நா. பெருமாள்.*

*உளவியல் சந்தனைகளின் பல கூறுகளையும் நன்குணர்ந்து ஆய்வு மேற்கொண்டல், அஃது இலக்கியத்துறைக்குப் பேருதவிபுரியும். நுட்பமான சிந்தனை, உளவியல் அணுகுமுறைக்குத் தேவை. இலக்கியச் சிந்தனையில் உளவியல் அணுகுமுறையால் பயன்மிக்க பல கருத்துக்கள் கிடைக்கும் என்று அறிஞர்கள் உரைக்கின்றனர்.*

### தற்கால உளவியலாளர்கள்

*தற்கால உளவியலாளர்கள், கீழ்நிலை நாட்டமும் உயர்வான செயலூக்கமும்* (Motivation), *அச்சம், சினம் போன்ற செயல்பாடுகளும் மனிதனிடத்து உள்ளன என்று கருதுகின்றனர். ‘செயலூக்கத்திற்கு* (Motivation) *அடிப்படையாகப் பசி, தாகம், தூக்கம், கழிவு அல்லது பால் எனப்படும் பலவிடாய்கள் அமைந்துள்ளன. இவை உடல்சார் விடாய்கள்* (Physiological Needs) *ஆகும்’*[13]. *இவை அனைத்தும் பிறப்பால் அமைகின்றன. குழந்தைகள் வளர, வளர, உடல்சார் விடாய்கள் பூர்த்தி செய்வதற்குத் தக்க உளச்சார் விடாய்கள் தோன்றுகின்றன. மதிப்புப் பெறல்* (Recognition), *கூடி வாழ்தல்* (Belongings), *அன்பு* (Affection), *வெற்றி பெறல்* (Achievement) *போன்ற உடல்சார் விடாய்கள் மனிதனிடத்து மிகவும் முக்கியமாக அமைகின்றன. இவை பூர்த்தி அடையாத நிலையில் ஒருவனுக்கு உடல்சேதம் ஏற்பட்டு, முடிவில் மரணம் ஏற்படும். சில வேளைகளில் உள்ளக் கோறுகள்* (Psychosomatic Disorders) *ஏற்படுகின்றன’*[14] *என்பர். உளக் கோளாறுகளினால்*

உள நோய்கள், சமூக விரோதச் செயல்களில் ஏற்படும் போக்கு போன்றன ஏற்படுகின்றன. செல்வ வளமுடைய மேலை நாடுகளிலும் உளச்சார் விடாய்கள் நிறைவு பெறாத நிலையில் உளக்கோறுகள் மிகுதியாக ஏற்படுவதை அறியலாம்.

## உளவியல் மும்மூர்த்திகள்

உள்ளத்தின் இயல்புகளையும், அவற்றின் செயல் பாடுகளையும் பகுத்து விளக்கும் அறிவியல் துறையினை, 1960ம் ஆண்டு வரையில் 'உளவியல்' எனும் பெயரிட்டு அழைத்தனர். பின்னர் அதன் முதன்மையையும் இன்றியமையாமையும் கருதி 'நடத்தையைப் பற்றிய அறிவியலே உளவியல்'[15] எனப் போற்றும் வழக்கம் உண்டாயிற்று.

உளவியல் துறை நாளுக்கு நாள் விரிந்தும், பரந்தும், வளர்ந்தும் வருகிறது. அதன் துறைகள் பலவாகப் பெருகியுள்ளன. பொதுநிலையில் உளவியலின்அடிப்படைக் கூறுகளைக் கொண்டு இலக்கியத்தை ஆராயும் முயற்சி வளர்ந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

உளவியலின் சிறப்பிடம் பெறும் உளநிலைப் பகுப்பாய்வு (Psycho Analysis), பிறழ்நிலை உளவியலும் (Abnormal Psychology), சமூக உளவியலும் (Social Psychology) இலக்கியத் திறனாய்வின் வளர்ச்சிக்குப் பேருதவி புரிந்து வருகின்றன'[16].

இலக்கியத்த் திறனாய்விற்கு உளவியல் கொள்கைகளை வகுத்துக் கொடுத்த அறிஞர்கள் சிக்மண்ட் பிராய்ட் (Sigmund Freud 1856 - 1936), கார்ல் யுங் (Carl Jung 1875 - 1961), ஆல்பிரட் ஆட்லர் (Alfred Adler 1870 - 1937) எனும் மும்மூர்த்திகளாவர். பிராய்டின் கொள்கை அடிப்படையில் பல புதிய விளக்கங்களையும் மாறுபட்ட எண்ணங்களையும் யூங், ஆட்லர் ஆகியோர்

வழங்கினர்.'[17] இவர்கள் பிராய்டின் சீடர்கள் அல்லர். ஜோகன்னஸ் முல்லர் (Jokannes Mullar), இ.எச்.வீபர் (E.H. Weber), எச். ஹெல்ம் ஹோட்ஸ் (H. Helm Hotts), ஜி.டி. பெக்னர் (G.T. Fechner), வில்ஹெம் உண்ட் (Wilhem Wundt), பிரான்சிஸ் கால்டன் (Francis Galton) போன்றோர் உளவியல் துறையில் குறிப்பிடத்தக்கவர்கள்'[18] ஆவர். இவர்களின் கண்டுபிடிப்புகளிலும் எழுத்துக்களிலும் பிராய்டின் தாக்கம் காணப்படுவதால் பிராய்டு இத்துறையின் தந்தையாகக் கருத்தப்படுகிறார்.

## மார்க்சிய நோக்கினர்

உளவியலில் ஒருசாரார் 'மார்க்சிய நோக்கினர்' என அடையாளப்படுத் தப்படுகின்றனர். இவர்கள் காலத்தால் முற்பட்டவர்கள். பிராய்டு, யூங் அட்லர் ஆகியோரிடமிருந்து முற்றிலும் வேறுபட்டவர். ஹெயின்ரிச் கார்ல் மார்க்சு (கி.பி. 1818 - 1883) ஆவார். அவரது 'சமூக தன்னுணர்வு நிலை) (Social Consciousness) என்னும் சமூகவியல் சிந்தனை, இனப் போராட்டத்திற்கு அடுத்த நிலையை வெளிப்படுத்துகிறது. இச்சமூகத் தன்னுணர்வு நிலையை அடிப்படையாகக் கொண்டு, உளவியல் கண்ணோட்டத்தில் இலக்கியத்தின் செயல்பாடு (The Function of Literature) பற்றிக் கிறிஸ்தோபர் காட்வெல் (Christopher Cardwell - 1935) விரிவாக விளக்கி எழுதியுள்ளார். இவருடைய கொள்கைகள் ஓரளவிற்கு உளவியல் சார்புடையன. பேரளவிற்குச் சமூகவியல், அழகியல் தொடர்புடையன'[19]. சமூகம், போராட்டம், அழகியல் போன்றனவற்றைப் பற்றி விளக்கியவர்கள் மார்க்சிய நோக்கினர் ஆவர்.

## கால வளர்ச்சியில் சிந்தனை மாற்றம்

கால வளர்ச்சியில் அறிவு வளர்கிறது. அதன் பயனாகச் சிந்தனை மாறுகிறது. ஒரு காலத்தில் சரியாக உணரப்பட்ட கருத்து, மற்றொரு காலத்தில் நேர்மாறாகக் கருதப்படலாம்.

*அறிவு வளர்ச்சியானது வாழ்வின் போக்கை மாற்றும் தன்மையுடையதாக விளங்கியதை உளவியலாய்வு மூலம் அறிய முடிகின்றது.*

*அறிவு குறித்து மேனாட்டு உள ஆய்வாளர்கள் அறிவியல் கண்ணோட்டத்தில் ஆராய்ந்தபோது அதன் மாற்றம் குறித்த சிந்தனை உலக அளவில் கவனத்தை ஈர்த்து. 1879ல் ஜெர்மனியில் உள்ள லெப்சி* (Leipzip), *வில்ஹெம் உண்ட்* (Wilhem Wundt) *என்பவர்கள் தான் முதன்முதலில் உளவியல் ஆய்வுக் கூடத்தை நிறுவியவராவர்'*[20]. *மேலைநாட்டு உளவியல் பிளாட்டோ, செயின்ட் அகஸ்ட்டின் காலங்களில் வளர்ந்து தெக்கார்த்தே காலத்தில் மேலும் வளர்ச்சி அடைந்தது. பின்னர் ஈ.எச்.வெபர்* (E.H. Weber) *என்பவர் காலத்தில் சோதனைக் கூட உளவியலாக வளர்ச்சி கண்டது.*

## உளவியல் சிந்தனைகளின் வளர்ச்சி

*உளவியல், தொடக்க காலங்களில் பல கொள்கைக் கோட்பாடுகள் வழியாக வளர்ந்து வந்துள்ளது. சில கொள்கைகள் மறைந்து போனாலும், வரலாற்றுச் சான்றுகளாகச் சில உள்ளன. அவற்றைப் பின்வருமாறு காணலாம்.*

## *1.* கட்டமைப்புக் கொள்கை (Structuralism)

*மனத்தை ஆராயும் முன், மன உணர்வுகளையும், மணம், சுவை போன்றவற்றிற்கும் மனத்திற்கும் உள்ள உறவையும், அவை எவ்வகையான உணர்வைத் தூண்டுகின்றன என்பதை நன்கு பயிற்சி பெற்ற, அனுவம் வாய்ந்த நிபுணர்களைக் கொண்டு ஆராயப்பட்ட இவ்வாய்வு, கட்டமைப்புக் கொள்கை எனப்பட்டது.*

*இவ்வமைப்பினர், ஆய்வு மேற்கொள்ளும் போது வெளிப்படும் கருத்துக்கள், உணர்வுகள்* (introspection) *குறித்து ஆராய்ந்தார்கள். இம்முறை தற்போது இல்லை. சில உளவியல் சோதனைகளின் போது நிலைமையை அறிவதற்கு மட்டும் சோதனைக்கு உட்படுவோரிடம் கருத்து கேட்கப்படுகிறது.*

## 2. இயக்க வளர்ச்சிக் கொள்கை (Functionalism)

*இக்கொள்கை டார்வினின் பரிணாம வளர்ச்சிக் கொள்கையை ஒத்தது. சூழ்நிலைக்கேற்ப உயிரினங்கள் தங்களைத் திருத்தி வளர்த்துள்ளமையை ஆய்வாளர்கள் குறிப்பிட்டுள்ளனர். மனம் என்பது அப்படித்தான்* (Is) *என்பதைவிட, அப்படி இருப்பது எதனால்* (Is for) *என்பதை அறிவதே மனத்தை ஆராயும் சிறந்த முறை என இக்கொள்கை ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.*[21]

## உளவியல் கருத்துக்கோட்பாடுகள்

*உளவியலில் பலவிதக் கருத்துக் கோட்பாடுகள் அமைப்புகளாக விளங்குகின்றன. அவை,*

| | | | |
|---|---|---|---|
| *1.* | *உளப்பகுப்பாடு* | - | Psycho Analysis |
| *2.* | *கெஸ்டால்ட் உளவியல்* | - | Gestalt Psychology |
| *3.* | *நடத்தைக் கொள்கை* | - | Behaviourism Psychology |
| *4.* | *ஹார்மீகக் கொள்கை* | - | Harmism Psychology |

*என்பனவாகும். மேலும், இரண்டாம் உலகப் போருக்குப்பின் அமைப்புகள் இரண்டாக உடைந்தன. அவை 1. மனிதாபிமான உளவியல்* (Humanistic Psychology), *2. நவீன நடத்தை* (New Behaviouristic Psycholoyg) *என்பனவாகும்.*[22]

உளவியலாளர்கள் இந்நான்கு வகையான கோட்பாடுகளை விடுத்து இனப்பாகுபாட்டை முதன்மைப்படுத்துகின்றனர்.

## 1. உளப்பாகுபாடு (Psycho Analysis)

உளப்பாகுபாடு முதன்முதலாக 'ஹிஸ்டீரியா' போன்ற உள்ளக்கோளாறுகளை நீக்கப் பயன்படுத்தப்பட்ட தனிப்பட்ட முறையாக இருந்தது. பின்னர், இம்முறை உள்ளத்தைப் பற்றித் தனிப்பட்ட கருத்துக்களைக் கொண்ட உளவியல் பகுதியாக வளர்ந்தது. இதனைத் தோற்றுவித்தவர் சிக்மண்ட் பிராய்டு (Sigmund Freud) எனும் மருத்துவ அறிஞர். இதன் அடிப்படைக் கருத்துக்களைக் கொண்டு, எர்னஸ்ட் ஜோன்ஸ் (Enest Jones), பிராய்டின் மகள் அன்னா பிராய்ட் (Anna Freud), கார்ல் யுங் (Carl J. Jung), ஆல்பிரட் ஆட்லர் (Alfred Adler) போன்றோர் பல ஆய்வுகளைச் செய்தனர். இதன் விளைவால் பின்வரும் கருத்துக்களை வெளியிட்டனர்.

### இதன் அடிப்படைக் கருத்துக்கள்

1. உள்ளம் பல பகுதிகளை உடையது. அவை நனவு உள்ளம் (Consious Mind), மறைவு நனவு உள்ளம் (Sub-consious Mind), ஆழ்ந்த உள்ளம் (Unconsious Mind) என்பனவாகும். இவற்றுள் வலிமையானது ஆழ்ந்த உள்ளம் ஆகும். இதனை நனவிலி (Id) என்பர். இதிலிருந்து வெளிப்படும் சக்தியை இன்ப உட்திறன் (Libido) என்பர்.'[23]

2. இன்ப உட்திறன் (Libido), கால இயல்புடைய உணர்வாம். இன்ப உட்திறனும் அதன் இயல்பும் பிறப்பால் அவைன.

*3. பொதுவாக எல்லாச் சமூகங்களிலும், காமம் மிகவும் ஒடுக்கப்படுகிறது. ஆகையால், அது மனிதனிடம் இயல்பாக வெளிப்படாமல் பல்வேறு வழிகளில் வெளிப்படுகின்றது. அவை கனவு, பகற்கனவு, புனிதமாக்கம்* (Sublimation), *அறிவாக்கம்* (Naturalitation), *புறத்தெழு அகக்காட்சி* (Projection), *பின்னோக்கம்* (Regression) *போன்றனவாகும். இம்முறைகளிலும் காம இயல்பு வெளிப்படாவிடில் மனிதன் பிறழ்வான உள்ளநிலையை அடைகிறான் எனும் கருத்துக்களைக் கொண்டாக உளப்பாகுபாடு* (Psycho Analysis) *அமைந்துள்ளது.*

## 2. கெஸ்டால்ட் உளவியல் (Gestalt Psychology)

*ஒவ்வொரு பொருளும் இயற்கையாகவே ஓர் ஒழுங்கமைவில்* (Configuration) *அமைந்துள்ளது என்பதுதான் கெஸ்டால்ட் உளவியலின் அடிப்படை. ஒரு பொருளைப் பற்றி அறிவுபெற வேண்டுமானால் அப்பொருளை முழுமையாகப் பரிசோதனை செய்து அதன் உண்மையை அறியவேண்டும் என்பர் நடத்தைக் கொள்கையினர். மனிதனது நடத்தையை அறிய அதைத் தூண்டல் - துலங்கள்* (Stimulus) *எனும் பிரிவுளாகப்* (Units) *பாகுபடுத்தி அறியவேண்டும் என்றும், பல தூண்டல்களும், துலங்கல்களும் சேர்ந்தே ஒரு குறிப்பிட்ட நடத்தை என்றும் கெஸ்டால்ட் கொள்கையினர் நடத்தையை வகுத்தனர்.*

*கெஸ்டால்ட் கொள்கையைப் புலன்காட்சி* (Perception), *கற்றல்* (Learning), *ஆளுமை* (Personality) *போன்ற துறைகளில் புகுத்தி ஆய்வு செய்து, உண்மைகளை வெளியிட்டவர்கள் வர்திமர்* (Werthamere), *கஃப்கா* (Koffka), *கோலார்* (Kohler), *லீவின்* (Lewin) *போன்றார் ஆவர்.*'[24] *இவ்வகை உளவியலானது மனித நடத்தையை அளந்தறியப் பயன்படுகிறது.*

## 3. நடத்தைக் கொள்கை (Behaviourism Psychology)

இக்கொள்கையை முதலில் தொடங்கியவர் ஜான் வாட்சன் (John Watson) எனும் அமெரிக்க நாட்டு அறிஞராவார். 'இவர் நடத்தையியல் பள்ளியின் தந்தை' எனப் போற்றப்படுகிறார்.[25] நடத்தைக் கொள்கையில் ஆய்வு செய்து உயிரியின் (Organism) நடத்தைகள் பற்றிய அடிப்படை விதிகளை 'வெளியிட்டவர்களில் ஸ்கின்னர் (Skinner), ஹல் (Hull), டோல்மேன் (Tolman), ஸ்பென்ஸ் (Spence) போன்றோர் முக்கியமானவர்கள் ஆவர்.'[26] உளவியல் துறையில் முதன் முதலில் எலி, முயல்குட்டி, குழந்தைகள் ஆகியவற்றைக் கொண்டு நுண்ணிய ஆய்வுகளை செய்தவர் வாட்சன் (Watson) ஆவார்.

இவ்வகைக் கொள்கையினர் உயிரியல், பூதவியல் போன்ற விஞ்ஞானவியல்களைப் பின்பற்றியப் புறநிலை முறையைப் (External Observation) பயன்படுத்திப் பரிசோதனை செய்தனர். தன் ஆய்வு முறையைக் ஏற்றுக் கொள்ள மறுத்து, அனுபவம், நனவு உள்ள நிலைகள் போன்ற சொற்களை உளவியல் துறையிலிருந்து ஒழிக்க வேண்டும் என்றனர். ஒருவனது நடத்தைக்கு அவன் வாழும் சூழ்நிலை மிகவும் முக்கியம் எனவும், அதுவே அவனது நடத்தை, ஆளுமை (Personality) ஆகியனவற்றை நிர்மாணிக்கிறது'[27] என்றும் எடுத்துரைத்தனர்.

ஒருவன் பிறப்பால் அச்சம், சினம், பால் எனும் மூன்று மெய்ப்பாடுகளை உடையவனாகிறான். நாளடைவில் சூழ்நிலையின் காரணமாக இவை மாற்றம் பெறகின்றன என்றனர். வாட்சன் காலத்தில் இரஷ்ய உளவியல் அறிஞரான பாவ்லாவ் (I.P. Pavlov), ஆக்க நிலையிருத்தம் (Conditioning) எனும் கற்றல் விதியைக் கண்டுபிடித்தார். வாட்சன் இதனைத்

தன் விதியுடன் பொருத்திப் பார்த்து, மக்களிடம் காணப்படும் வேறுபாடுகளுக்குச் 'சூழ்நிலைத் தூண்டல்களினால் ஏற்படும் ஆக்க நிலையிருத்தமே காரணம்'[28] எனக் கருத்துரைத்தார்.

வாட்சனின் ஆய்வுகளில் இன்றியமையாதது சிந்தனையைப் பற்றியதாகும். பேச்சு (Speech) என்பது ஓசையுடன் வெளிப்படும் சிந்தனை என்றும், சிந்தனை என்பது ஓசையில்லாப் பேச்சு (Silent Speech) எனவும் வெளிப்படுத்தினார்.

## 4. ஹார்மீகக் கொள்கை (Harmism)

ஹார்மீகக் கொள்கை எனும் உளவியல் அமைப்பைத் தோற்றுவித்தவர் வில்லியம் மக்டூவல் (William Mcdouwell) ஆவார். மனிதனிடம் உள்ள சக்தி தனிப்பட்ட இயக்கங்கள் கொண்ட இயல் பூக்கங்கள் வழியாக நிறைவு பெறுகின்றது என்பது இவ்வமைப்பின் கொள்கையாகும். இக்கருத்து உளப்பாகுபாட்டுக் கருத்துக்கு ஒத்ததாகும். இக்கொள்கைக்கு ஹார்ம் (Harme) எனப் பெயரிட்டார் மக்டூவல். இதனால், ஹார்மீகம் (Harmism) என்று இக்கொள்கை வழங்கப்பட்டு வருகிறது.

மனிதனின் ஒவ்வொரு நடத்தையும், ஒரு குறிக்கோளுடன் அமைகிறது. மனிதனது அனைத்து நடத்தைகளையும் இயல்பூக்களே ஆக்குவிக்கின்றன என மக்டூவல் கூறினார். மேலும், ஒரு மனிதனிடம் அடிப்படையாக அச்சம், சினம், பால், அன்பு, ஒன்றுபட்டு வாழ்தல் போன்ற பதினான்கு இயல்பூக்கங்கிள உள்ளன எனவும் குறித்துள்ளார்.[29]

## மனித நலக் கொள்கை (Humanistic Psychology)

*எச்.ஏ.மர்ரே, சார்ல் ஜாஸ்பெர்ஸ், ஹெட்டீகர், லிட்விக் பிஸ்வாஸ்கர் ஆகியோர் உளப்பகுப்பாய்வு, முழுமைக் கொள்கை, ஹார்மீகக் கொள்கை ஆகியனவற்றை ஒன்றிணைத்து மனித நல உளவியல் என்ற அமைப்பை உருவாக்கினார்.*

*பிற்காலத்தில் ஆட்லர், மாஸ்லோ, மே, பிராஸ்கல், எரிக்பிராம், ரோகர்ஸ் மற்றும் பெர்ல்ஸ் போன்றோர் இக்கொள்கைக்குத் தனித்தனி விளக்கங்களை வழங்கினர்.*

*ஆப்ரகாம் மாஸ்லோ* (Abraham Maslow) *உளப்பகுப்பாய்வின் அடிப்படை விதியைக் கையாண்டு மனிதநல உளவியல் கொள்கையைத் தொடங்கினார். மனிதர்களிடம் உயர்ந்த நுண்ணறிவு, கற்பனைத் திறன், அன்பு, பாசம் போன்ற பக்குவமடைந்த மெய்ப்பாடுகள் உள்ளன. எனவே, மனிதனை மனிதனாகவே ஆராய்ச்சி செய்யவேண்டும் என்றும், விலங்கினங்களோடு ஒப்பிடுவது தவறு எனவும் விளக்கினார்.*

*மாஸ்லோவின் மநித நலக் கொள்கை ஆறு படி நிலைகளைக் கொண்டது. மனிதனின் தேவையான உடல்சார் தேவைகள், அடிப்படைத் தேவைகள், காப்புத் தேவைகள், சமூகத் தேவைகள், நன்மதிப்புத் தேவைகள், மேனிலையாக்கத் தேவைகள் என வகைப்படுதும் மாஸ்லோவின கோட்பாடு இன்றியமையாததாகும்.*[30]

**பிறழ்நிலை உளவியல் (Abnormal Psychology)**

*மனிதனுக்கு ஏற்படும் உடல் நோய்கள் போல, உளநோய்களும் உளக் கோளாறுகளும் ஏற்படுகின்றன. இவ்வுள நோய்கள் மற்றும் உளக்கோளாறுகளைப் பற்றி அறியும் உளவியல் பிறழ்நிலை உளவியல்* (Abnormal Psychology) *எனப்படும்.*

*பிறழ்நிலை மாந்தர்களை,*

1. *உளவழி நரம்பு நோயினர்*
2. *உளப் பிணியாளர்*
3. *உளத்திறன் குறைந்தோர்*
4. *சமூக எதிர்ச் செயலினர்’*[31]

*என நான்கு வகைகளாகப் பிரிப்பர்.*

*இவ்வுளவியல், கொலை, களவு போன்ற சமூகத்துக்கு ஒவ்வாத நடத்தைகளுக்கான காரணங்களை ஆராய்ந்து, அவைகளைத் தடுப்பதற்கான வழிவகைகளை எடுத்துக்காட்டுகின்றது. மேலும் பகற்கனவு* (Day Dreams), *கனவு* (Dreams), *அறிதுயில்* (Hypnosis), *போன்றவைகள் ஏற்படுவதற்குரிய காரணங்களையும் இவ்வுளவியல் விளக்குகின்றது.*

*மனிதன், உடல் மற்றும் உளக்கோளாறுகளுக்கு ஆளாகும்போது நெறி பிறழ்ந்தவனாகிறான். சமூகக் கலப்பில் ஒன்றுபடும்போது முழுமையான மனிதத் தன்மை பெறுகிறான் எனும் கோட்பாட்டை இவ்வுளவியல் வெளிப்படுத்துகிறது.*

### சமூக உளவியல் (Social Psychology)

*பிறப்பு முதல் இறப்புவரை ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு சமூகச் சூழ்நிலையில் வாழவேண்டியுள்ளது. நிரந்தரமான குடும்பம், கிராமம், ஊர், நாடு போன்ற கூட்டத்திலும் குழுவிலும் உள்ள ஒருவனது இயல்புகள் குறித்து ஆராய்வது சமூக உளவியல் ஆகும்.*[32]

*தனி நபர்கள் செயற்பாடுகள், தனிநபருக்கும், சமூகத்திற்கும் உள்ள செயற்பாடுகள் ஆகியன இத்துறையில் ஆராயப்படுகின்றன. சமூக உளவியல்*

தனிநபர், சமூகம் ஆகியவற்றிற்கிடையிலான சிந்தனை, உணர்ச்சி, செயற்பாடு, போன்றவைகளை எடுத்தியம்புவதாக இவ்வுளவியல் திகழ்கிறது.

இத்துறையின் முன்னோடிகள் வுண்ட், ரிவர்ஸ் ஆவர். வில்லியம் மக்கேல், ஸ்பான், மாலிணஸ்கி, ரூத்பெனிடிக்ட், போன்றோர் இத்துறையில் மிக முக்கியமானவர்கள். ஷெரிப், காண்ட்ரில் ஆகியோர் மேற்கொண்ட ஆய்வுமுறைகள் குழு இயக்கத்தை அறிய பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன.

## அகமுகர் (Intovert), புறமுகர் (Extrovert)

உள்மன உணர்வுகளுக்கேற்ப மனிதர்கள் அகமுகர் (Introvert), புறமுகர் (Extrovert) என உளவியல் அறிஞர் யுங் அறிமுகப்படுத்துகின்றார்.[33]

### அகமுகர் (Introvert)

அகமுகர் உள்மன உணர்ச்சி உடையவராய் இருப்பர். இவர்கள் தாமே தனித்தியங்கும் விழைவுடையவர். பிறருடன் கூடிச் செய்யும் காரியங்களில் ஈடுபாடின்றிப் பெரும்பாலும் தனித்துச் செய்வனவற்றிலே அதிக நாட்டமுடையவராய் இருப்பர்.

### புறமுகர் (Extorvert)

புறமுகர் தம்மைச் சுற்றியுள்ள சூழ்நிலையில் அக்கறை உடையவர்களாக இருப்பர். மற்றவர்களுடன் பழகுவது, மனமகிழ்ச்சி தரும் செயல்களில் ஈடுபடுவது, பயணம் செய்தல் போன்று பிறருடன் கூடிச் செய்யும் செயல்களில் அதிக நாட்டமுடையவராக இருப்பர்.

## உளநலப் பொருத்தப்பாட்டுச் சிக்கல்கள் (Problems of Adjustment)

நல்ல உள்ளம் படைத்த மனிதன், உளநிறைவும், தன்னளவில் முரண்பாடுகள் அற்ற ஒத்திசைவும் பெற்று, சமூக அளவில் நல்லிணக்கமும்

பெற்றிருப்பான். இதனையே உளநலத்தின் இருபெரும் கூறுகளாகக் கருதுவர்.[34]

இப்பொருத்தப்பாட்டினைச் சிதைக்கும் சிக்கல்களை உளவியலாளர் மூவகைப்படுத்துவர். அவை;

1. உள்ள அழுத்தம் (Pressures)
2. உள்ள மேதல் (Conflict)
3. உள்ள முறிவு (Frustration)

என்பனவாகும்.

## உள்ளமுறிவு (Frustration)

ஒருவன் தாம் விரும்பிய இலக்கை அடைவதில் நேரும் தடைகள், குறுக்கீடுகள், உயர்ந்த குறிக்கோள் இன்மை ஆகியவற்றால் உள்ள முறிவு உண்டாகிறது என்பர். ஓர் அழுத்தமான தேவையும் அதனைப் பெற்று நிறைவுற இயலாத உணர்வும் உடனியையும் போது நேரும் அனுபவமே உள்ள முறிவு எனப்படும்'[35] என்று பிரித்தானியக் கலைக் களஞ்சியம் கூறுகிறது. ஆசை நிறைவேறாமலோ, நிறைவேறுவதற்குத் தடை ஏற்பட்டோ இருக்கும் நிலைமையை மனமிடிதல் என்பர்.[36]

## எளிய முறிவுகள் (Minor Frustrations)

வாழ்க்கை எப்போதும் சிக்கல் நிரம்பியதாக இருப்பதில்லை. நடைமுறையில் அன்றாடம் மனிதனுக்கு உண்டாகும் மனநெருக்கடிகள் சிறியனவாகவும், எளிமையானவையாகவும் உள்ளன என்பதை உளவியலாளர் உணர்த்தியுள்ளனர்.

*சில விருப்பக்கேடுகள் எளிய நிலையினவாயிருக்கும். அவை நிலைத்த துன்பத்தையோ, நீடித்து துன்பத்தையோ தருனவாய் அமையாது. 'அச்சம், ஆசை, அறியாமை, இயலாமை ஆகிய சொந்த இயல்புகள் எளிய விருப்பங்களை ஈடேறாமல் செய்யலாம். புறச்சூழல்கள் சிலவும் விருப்பங்கள் ஈடேறாமல் செய்யலாம். புறச்சூழல், அகநிலை ஆகிய இரு தோற்று வாய்களிலிருந்து உள்ள முடிவுகள் எழுகின்றன'*[37] *என்பர்.*

**சூழ்நிலைத் தடைகள்**

*சூழ்நிலைத் தடைகள் உள்ள முறிவுக்குக் காரணமாகின்றன. சூழ்நிலைத் தடைகள் என்பவை பெரிதும் சமூகத்தைச் சார்ந்தவை ஆகும். 'நிலநடுக்கம், பெருந்தீ, பஞ்சம், விபத்து, அன்புக்குரியவரின் மரணம் முதலியவற்றைச் சூழ்நிலைத் தடைகள்'*[38] *என்பர்.*

**சமூக நிலை முறிவு**

*பொருள் முதலான உடல் சார்ந்த தேவைகள் நிறைவடைவதால் மட்டும் உள்ளம் நிறைவு கொள்வதில்லை. பிறரது ஆதரவையும் அன்பையும் எதிர்பார்த்து ஏங்கும் ஏக்கமும், அவை மறுக்கப்படும்போது மனமுறிவும், உள்ள அழுத்தமும் ஏற்படும். உளவியலாளர் மனிதர்களிடம் நிலவும் அன்பிற்கும், பிறர் நல விழைவிற்கும் காரணம் பிறரது துலங்கலைப் பெறவேண்டும் என்னும் விருப்பே அடிப்படை என்பர்.*[39] *எனவே, சமுதாயத்தில் மதிப்பிற்குரிய இடத்தைப் பெறுதலும், தன்னிலை இழக்காமல் போற்றுதலும் மனிதனின் கருத்தாக உள்ளது. ஒவ்வொருவரும் சமூகத்தின் அங்கங்களாக விளங்குகின்றனர். அதேபோல் சமூகமும், ஒவ்வொருவர் உளவாழ்விலும் பெரும்பங்கு பெறுகிறது.*

## உள்ள மோதல் (Conflict)

உள்ள முறிவு தோன்றுவதற்கான காரணங்களில் உள்ள மோதல் போராட்டம் முக்கியமானதாகும். வலிமை உடைய ஊக்கம் நிறைவுற இயலாது தடைபடுமானால், உள்ள முறிவு ஏற்படுகிறது. ஊக்கம் தடைபடுவதற்கான காரணங்கள் மூவகைப்படும்.

முதற்காரணம் சூழ்நிலைப் பொருள்களும் பிற மனிதர்களும் ஆவர். இரண்டாம் காரணம் உள்ள, உடல் உறுப்புகள் குறைவு, திறன் குறைவு, நாட்டக் குறைவு முதலியவை ஆகும். மூன்றாம் காரணம் உள்ளப் போராட்டம் ஆகும்.

ஒன்று மற்றொன்றுக்குத் தடையாக இருப்பதின் காரணமாக ஏற்படும் உள நிலையே, உள்ள மோதல் (Conflict) அல்லது போராட்டம் என்பர்.[40] ஒரே நேரத்தில் நிறைவுற இயலாததும், ஒன்றற்கொன்று தனித்தனியானதுமான செயல் நோக்கமும், ஊக்கமும் உள்ளத்தில் இருப்பதனால் உள்ளப் போராட்டம் விளையும் என உளவியலாளர் கூறுவர்.

## உள்ள இறுக்கம் (Stress)

உள்ள முறிவு எவ்வகைத் தீர்வுமின்றி நெடுங்காலம் தொடருமானால் உணர்வியல் சார்ந்த முற்றிய விறைப்பு நிலை (Tension) தோன்றும். அந்நிலையை உள்ள இறுக்கம் (Stress) என உளவியலாளர் கூறுவர். உள்ளம் முறிவுற்ற நிலையிலும், போராட்டம் மிக்க நிலையிலும், சில எதிர்மறையான உள்ளக் கிளர்ச்சிகள் தோன்றுகின்றன. அவற்றுள் சினம் (Anger), அச்சம் (Fear), கவலை (Anxiety) ஆகிய மூன்றினைச் சிறப்பாக உரைப்பர்.[42]

மனக் கலக்கம் உள்ளத்தின் முறிவாலும், போராட்டத்தாலும் ஏற்படுகின்றது. அதன் விளைவு கவலை ஆகும். மனமுறிவும், மனப்போராட்டமும் உள்ள ஒரு மனிதன், கலக்கமடைந்த இறுக்கமான நிலைமையிலிருப்பான். அவனுடைய மூல ஊக்கியின் தூண்டல் நிலை சிறிதும் குறையாமல் இருக்கின்றது. மேலும் அவனுடைய மன இறுக்கம் போராட்டத்திலிருந்து எழுந்த மனவெழுச்சித் துலங்கலினால் வலிமை ஊட்டப்பட்டிருக்கின்றது. இந்நிலையைக் கவலை அல்லது தவிப்பு என்பர்.

## தற்காப்பு இயங்கு முறைகள் (Defence Mechanisms)

மனித வாழ்க்கையில் ஏமாற்றங்கள், தோல்விகள், போராட்டங்கள் ஆகியவை உண்டாவது இயல்பு. அவை, மனிதனுடைய உள்ளத்தைப் பாதித்து அமைதியைக் கெடுக்கின்றன. இந்த நிலையில் மனித உள்ளம், தன்னைத்தானே பாதுகாத்துக் கொள்ள, சில முயற்சிகளை மேற்கொள்கிறது. இவற்றை உளவியலாளர் தற்காப்பு இயங்கு முறைகள் (Defence Mechanisms) என்பர்.

உளவியல் நடத்தை மனிதனால் மேற்கொள்ளப்படுவது உளத் தற்காப்பு இயங்கு முறை ஆகும். முறிவு அனுபவத்தால் நேரும் மனவாட்டத்தைத் தணிப்பதற்கு உதவும் உளவியல் நிகழ்ச்சியே ‘தற்காப்பு இயங்குமுறை’[43] ஆகும் என உளவியலார் கூறுவர்.

இவ்வியங்குமுறைகள் ஒருவரிடம் நீடித்துத் தொடர்ந்தால், உளப் பிறழ்வு நிலையின் (Abnormal) எல்லைக்குக் கொண்டு சென்று விடக்கூடும். இத்தற்காப்பு இயங்குமுறைகள் பயன்படுத்தப் படவில்லையெனில் உள்ளம் விறைப்பு, அழுத்தம், இறுக்கம் உற்றுச் சிதைந்து, ஒருமைப்பாட்டை

இழந்துவிடும். எனவே அத்தற்காப்பு இயங்கு முறைகள் மனிதனுக்குத் தேவையாகின்றன.

**உளத்தற்காப்பு இயங்கு முறைகள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | ஒடுக்கம் | - | Repression |
| 2. | உணர்வொதுக்கம் | - | Isolation of Affect |
| 3. | பின்னோக்கம் | - | Regression |
| 4. | தொடர்பறுதல் | - | Dissociation |
| 5. | பகற்கனவு | - | Fantasy |
| 6. | பொதுமையாக்கம் | - | Generalisation |
| 7. | துறப்பமைவு | - | Resignation |
| 8. | ஈடு செய்தல் | - | Compensation |
| 9. | தன்முகத்திருப்பம் | - | Turning Against the Self |
| 10. | நிலைமாற்றம் | - | Conversion |
| 11. | செயற்படுத்தல் | - | Acting |
| 12. | எதிர்வினை அமைப்பு | - | Reaction Formation |
| 13. | இடம் பெயர்தல் | - | Displacement |
| 14. | புறத்தேற்றம் | - | Projection |
| 15. | அறிவார்ந்த விளக்கம் | - | Rationalization |
| 16. | சரிசெய்தல் | - | Undoing |
| 17. | மேனிலையாக்கம்<br>உயர்மடையேற்றம் | - | Sublimation44 |

என்பன தற்காப்பு இயங்கு முறைகளாகும்.

**ஒடுக்கம் (Repression)**

மனித மனமானது உள்ளப் போராட்டம், இறுக்கம் மிக்க சூழல்களில், தன்னிடம் உள்ள துன்பங்களையும், குறைபாடுகளையும் ஏற்றுக் கொள்ள மறுக்கும். பொதுவாகப் பயமுள்ள, வெட்கப்பட வேண்டிய அனுபவங்களை மனிதர்கள் மறந்துவிட எண்ணும் இயல்புடையவர்களாக இருக்கின்றார்கள். அச்சுறுத்தல், நாணுறச் செய்தல் ஆகிய உள்ளத் துடிப்புகள் தோன்றும்போது அவற்றை உள ஆற்றலின் பிற போக்குகள் எதிர்க்கின்றன. இப்போக்கை ஒடுக்கம் (Repression) என பிராய்டு கூறுகிறார்.[45]

ஒடுக்கம் நனவிலி மனத்தில் செயல்பாடாகும். அன்பிற்குரிய ஒருவர் இறந்துவிட்ட பிறகும் அவர் இறக்கவில்லை; இருக்கிறார் என நம்பிச் செயல்படுதலை ஒடுக்கம் எனலாம்.

அகம் (Ego) விரும்பாத கருத்து, உந்துதுல் ஆகியவற்றிலிருந்து நினைவு மனம் பின்வாங்கிக் கொள்கிறது. இதனால், ஒடுக்கப்பட்ட செய்தி நினைவு மனத்தில் இடம்பெறும் வண்ணம் தடுத்து நிறுத்தப்படுகிறது அல்லது விலக்கப்படுகிறது[46] எனப் பிரித்தானியக் கலைக்களஞ்சியம் இவ்வுத்தியை விளக்குகிறது.

ஒடுக்குதல் போக்கின் காரணமாக மறுப்பு (Denial), உண்மை நிலையைத் தவிர்த்தல் (Avoid the fact), எதிர்மறை வாதம் (Negativism) ஆகியன தோன்றும்.

ஒடுங்குதல் உத்தி தோற்கத் தொடங்கும்போது, பிற தற்காப்பு இயங்க முறைகள் மனிதர்களால் நாடப்படுகின்றன.

**உணர்வொதுக்கம் (Isolation of Affect)**

*மனித உள்ளமானது விரும்பத்தகாத துன்பச் சூழலை மறுக்கவும், ஒடுக்கவும் விழையும். அனுபவத்தை மட்டும் ஏற்றுக் கொண்டு, அதனோடு இயைந்த உணர்வுகளிலிருந்து, உள்ளம் ஒதுக்கம் பெறும் செயல்முறை தோன்றுகிறது.*

*நனவிலி மனத்தின் உள்ளத்துடிப்பைச் சார்ந்த கருத்தும், அதற்கேற்ற உணர்வும், தன்னியக்கமாகவும், தன்னியல்பாகப் பிரித்தலையும், அதனால் அக்கருத்தும், அதற்கிணையான உணர்வும் அறிநிலைக்கு வர அனுமதித்தலையும், உணர்வொதுக்கம்* (Isolation of Affect) *என உளவியலார் வரையறை செய்வர்.*[47]

**பின்னோக்கம் (Regression)**

*விரும்பத்தகாத நிகழ்ச்சிகள் நிகழும்போதும், விருப்பங்கள் முறிவுற்று உள்ளப் போராட்டம் மிகும்போதும், உள்ளம் தன்னை அறியாமல் கடந்த காலத்தின் இயல்புக்குச் சென்றுவிடும். இத்தகைய நிலையைப் பின்னோக்கம்* (Regression) *என்பர்.*

*அழுதல், கையை உதறிக் காலை உதைத்தல், விழுந்து புரளுதல், முரண்டு பிடித்தல், பிடிவாதமாகச் சண்டித்தனம் செய்தல் ஆகிய குழந்தைப் பருவத்துக்குரிய செயல்கள் ஆகும்.*

*ஒரு முதியவர் மனமுறிவு நிலைமைகளுக்குக் குழந்தைத்தனமானதும், மடத்தனுமானதுமான எதிர்வினைகளை அளிப்பாரே ஆயின், நடத்தையின் தொடக்க நிலைக்குப் பின்னோக்கிச் செல்லுவதாகப் கருதப்படுவர் என்பது உளவியல் கருத்தாகும்.*[48]

**தொடர்பறுதல் (Dissociation)**

ஒருவரின் செயல்பாடுகள் தன்னியலாகப் பிளவுபடுதல், அல்லது பிரிவுறுதலைத் தொடர்பறுதல் குறிக்கின்றது. பிளவுபடுதல் முறையில் நனவிலி மனத்தைச் சார்ந்த தடுக்கப்பட்ட தூண்டுதல்களைப் புலப்படுத்த வழியேற்படுகிறது.

'அடக்கி வைத்தல் என்ற முறையின் மூலம் விரும்பத்தகாத அல்லது ஏற்கத்தகாத கருத்துக்கள் பலவந்தமாக மனத்தின் பின்னணிக்குத் தள்ளப்படுகின்றன. அவ்விதம் அடக்கி வைக்கப்பட்ட பல கருத்துக்கள், அடிமனதில் சிறையுண்டு ஒன்றாகக் கூடி சிறு அமைப்பாக மாறலாம். அது முழுமை பெற்றுச் சாதாரண நிலையிலிருந்து பிரிந்துவிடுகிறது[49] எனத் தொடர்பறுதலை விளக்குவர்.

அறிவை மயக்கும் மதுவை உண்டபின் மனிதன் இயல்பு மாறுகிறான். உள்மனதின் தூண்டுதலுக்கு ஏற்ப நடந்து கொள்கிறான். இந்நிகழ்வைத் தொடர்பறுதல் என உளவியலார் கருதுவர். மென்மையான உள்ளம் உடையவர் ஓரளவு மது அருந்தியபின் போரிடும் நிலைக்கு உட்படுதலைக் குறிப்பிடலாம்.

**பகற்கனவு (Fantacy)**

உள்ளம் வாழ்வின் நிகழ்வுகளில் சிலவற்றை ஏற்க இயலாத நிலையில் தன்னிச்சையாக ஒரு கற்பனை விளையாட்டில் ஈடுபடுகிறது. உள்ளம் வாழ்வை விரும்புமாறு படைத்துக்கொண்டு மனம் தன் போக்கில் மகிழ்கிறது. இதனைப் பகற்கனவு என்பர் உளவியலார். உண்மை வாழ்க்கையில் பெற இயலாதவற்றைக் கற்பனை செய்து மனநிறைவு கொள்ளுதலே இவ்

உள்ளப்போக்கின் அடிப்படை ஆகும். இது எளிமையாகக் கிடைக்கக் கூடிய பொருத்தப்பாட்டு அமைப்பு என்பர்.[50]

பகற்கனவு என்பது உறக்கத்தில் வரும் கனவோடும் கற்பனையோடும் தொடர்புடையது. கற்பனையில் சில செயல்பாடுகளை மேற்கொள்ளும் பகற்கனவு, கனவின் ஒரு வகையாகும். மேலும், தூக்கத்தில் நிகழ்வது கனவாகவும், விழிப்பில் நிகழ்வது பகற்கனவாகவும் உள்ளது. இரண்டிற்கும் பெரிய வேறுபாடுகள் இல்லை[51] என்பார் அறிஞர்.

### பொறுமையாக்கம் (Generalization)

உள்ளப் போராட்டமும், உள்ள முறிவும் மிகுந்த சூழலில் சரியான சிந்தனை முறை அமைவதில்லை. அப்போது தோன்றும் சிந்தனைகளில் பல தவறுகள் ஏற்படுவதுண்டு. அவற்றுள் தற்புனைவுச் சிந்தனை, சார்பெண்ணச் சிந்தனை ஆகிய இரண்டின் அடிப்படையிலும் பொதுமையாக்க எண்ணம் ஏற்படும்.[52]

ஒரு சில அனுபவங்களால் நேர்ந்த ஒரு முடிவினை, அனைத்துச் சூழல்களுக்கும் பொருந்துவதாய் ஆக்க நிலைக் கோட்பாடாக்கிக் கொள்வது பொதுமையாக்கம் ஆகும்.

பொதுப்பட அமைதல், கருதுகோள் ஆகியன ஆக்கநிலையிருத்தல் கோட்பாட்டில் ஒரு மைய அச்சுப் போன்றதாகும். எடுத்துக்காட்டாக, இரண்டு மூன்று சமூகச் சூழல்களில் ஒரு வகுப்பைச் சேர்ந்தவர்கள் அல்லது ஒரு நாட்டைச் சேர்ந்தவார்கள் நேர்மை தவறி நடப்பதைக் கண்டு, அந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் அனைவரும் நேர்மையற்றவர்கள் என்று பொதுப்பட அழைக்கின்றனர். இத்தவறான சிந்தனை, நாம் மற்றவர்களைப்

பற்றி, ஒருபடி வார்ப்பான தீர்ப்பு கொள்ளுவதன் அடிப்படையில் அமைகின்றது.

## துறப்பமைவு (Resignation)

ஈடுசெய்தல், தன்முகத்திருப்பம் ஆகியவற்றை ஒன்றிணைத்துத் துறப்பமைவுக்கு உளவியலார் விளக்கம் தருவர். பொருளை அடைவதற்கான முயற்சியை விட்டுவிடுதல், கிடைக்காத பொருளுக்குப் பதிலாகக் கிடைக்கும் பொருள் ஒன்றை அடைதல், தற்கொலை செய்து கொள்ளுதல், துன்பத்தின் மூலம் இன்பம் பெறுதல் போன்றவைகளாகிய தம்மைத் தாமே தாக்குதல் ஆகிய வழிகளைத் துறப்பமைவு என்று குறிப்பர்.[53]

மனிதன் தோல்வி, அல்லது கவலை உண்டாக்கக் கூடிய சூழ்நிலைகளிலிருந்து விலகி அல்லது பின்னடைந்து செல்வதன் மூலம், நம் அகத்திற்கு ஏற்படும் தீங்கினைக் குறைக்கச் சில சமயங்களில் முயல்கிறான். ஒரு முயற்சியைத் தொடர முடியாத நிலையில் தோல்வி ஏற்படும் போல் தெரிந்தால், அம்முயற்சியைக் கைவிட்டு விடுதல் துறப்பமைவு ஆகும்.

## ஈடுசெய்தல் (Compensation)

ஒன்றைச் சாதிக்க இயலாத சூழலில் ஏமாற்றமும், முறிவும், கவலையும் உற்ற உள்ளம் பிறிதொன்றைச் சாதிக்க முயல்கின்றது. இவ்வியல்பை உளவியலார் ஈடுசெய்தல் என்பர். ஒரு சாதனையைப் பெறுவதற்குத் தவறியதால் ஏற்பட்ட கவலைக்கு எதிராக விரிவடைந்த ஒரு வழியமைப்பு என்பது உளவியல் விளக்கமாகும்.[54] ஒரு மனித வாழ்வில் சிறு வயது முதலே ஒன்றிற்கு ஈடாக, வேறொன்றைப் பெற்று மகிழும் போக்கு ஈடு செய்தல் ஆகும்.

ஒரு குறையை மறைக்க அல்லது சரிசெய்ய ஏதேனும் உடலியல், உளவியல், உணர்வியல் சார்ந்த செயற்பாடுகளை அளவறிந்து வளர்த்துக் கொள்ளும் தன்னியக்கமும் நனவிலி மனத்தின் போக்கும் ஈடுசெய்தல் எனப்படும்.

## தன்முகத் திருப்பம் (Turning Against the self)

மனமுறிவைத் தவிர்க்கவும், தணிக்கவும் வேண்டிப் பிறரை உள்ளத்தாலும் உடலாலும் தாக்குதல் உண்டு. மாறாக, அத்தாக்குதல் வேகத்தைத் தன் மீதே திருப்பிக் கொள்ளுதல் ஒரு வகையான தற்காப்பு இயங்குமுறையாகும். தாக்குதல் உந்துதலின் வேகம் குறையவும், மறையவும் அது ஒரு வழியாகிறது. தன்முகத் திருப்பம் எனும் உளநலத் தற்காப்பு இயங்கு முறையைத் தன்னியக்கமான நனவிலி முறையால், மனிதர் மீதுள்ள வெறுப்பைத் தன்முகமாய்த் திருப்பிக் கொள்ளல் என்று உளவியலார் வரையறை செய்வர்.[55] இத்தகைய மனப்போக்கின் தோற்றுவாய் குழந்தைப் பருவத்திலேயே உள்ளது.

தேவைகள் நிறைவடையாத போதும் உதவி செய்வதற்கு யாரும் இல்லாத போதும் குழந்தை தன்னையே அடித்துக் கொள்ளல், அழுதல், உதைத்தல், கீறிக் கொள்ளுதல், முதலிய நடத்தைகளை மேற்கொள்கிறது.

நகத்தைக் கடித்தல், தலையில் அடித்துக் கொள்ளல், சொரிந்து கொள்ளல் முதலிய மென்மையான நிலைகள் முதலாகப் பெருமளவில் காயப்படுத்திக் கொள்ளுதல், தற்கொலை முதலிய வன்மையான நிலைகள் வரையிலானவை இதன் பிற்கால நடத்தைகளாகும்.

### நிலைமாற்றம் (Conversion)

*நிலைமாற்றம் என்பது, தன்னியக்கமும், தன்னியல்பான முறையில் சில உந்துதல்கள் அறநிலைக்கப் புறம்பாதலும், மறைமுகமான உடல் செயல்பாட்டின் மூலம் வெளிப்படுதலும் உடன் நிகழ்வாய் நேர்தலாகும்.*

*இவ்வுடன் செயல்பாடு என்பது வழககமான உணர்ச்சிக்குரிய அல்லது தன்னியல்பான இயக்க அமைப்பின் சீர்கேடு ஆகும்.*[56] *உள்ளத்தின் போராட்டமும் குழப்பமும் உடலின் செயல்பாடாக, மெய்ப்பாடாக நிலைமாற்றம் பெறுதல் ஒரு வகையான வடிகால் ஆகிறது.*

### செயற்படுத்தல் (Acting Out)

*அடக்கி மறைத்தல், ஒடுக்குதல் ஆகிய உள்ளப் பாங்கிற்கு நேர் எதிரான உளவியல் செயற்படுத்துதல் அல்லது வெளிப்படுத்துதல் ஆகும். மனத்தில் அழுந்திக் கிடக்கும் சிக்கல்களை மறுபடியும் வெளிக்கொணர்ந்து, அவற்றை மறுபடியும் நினைவின் மூலமாக அனுபவிக்கும்படி செய்துவிட்டால், அந்தச் சிக்கல்களினால் ஏற்படும் கோளாறுகள் நீங்கி விடுகின்றன என்பது உளவியலாகும்.*[57] *தடுக்கப்பட்ட ஆசைகளை செயற்படுத்தி, அவற்றை புலப்படுத்த அனுமதிப்பதன் மூலம், அவ்ஆசைகளோடு இயைபுடைய மன விறைப்பையும், கவலையையும் குறைத்துக் கொள்ள முடியும் என உளவியல் கூறுகிறது. மனதில் மறைத்து வைக்கப்பட்ட வெகுளி, உணர்ச்சி, கடுஞ்சொற்களை அள்ளி வீசியும் கையில் கிடைத்தவற்றை தாக்கி உடைத்துச் செயற்படுத்துவதால் வெகுவாகக் குறைவதைச் சான்றாகக் கூறலாம்.*

### எதிர்வினை அமைப்பு (Reaction Formation)

*ஏற்க இயலாத உந்துதல்களை அல்லது உணர்ச்சிகளை நனவிலி மனப்போக்கினால், நேரெதிர் நிலை மனப்பான்மைகளாக, நடத்தைகளாக,*

உணர்ச்சிகளாக மாற்றிக் கொள்ளுதல், எதிர்வினை அமைப்பு எனலாம். மிக வலிமையான உணரப்பட்ட உள்ளத்துடிப்புக்கு எதிரான ஒரு மனப்பாங்கை நிலை நிறுத்துவதுதான் எதிர்வினை அமைப்பில் உள்ள முக்கிய செயல்முறையாகும்.[58] சான்றாக, மிகுதியான தாழ்வு மனப்பான்மையால் தொல்லை உறுபவர், அதனை மறைக்க, அடிக்கடி தற்பெருமையான ஆரவாரப் பேச்சில் ஈடுபடலாம். தற்பெருமை, தற்புகழ்ச்சி முதலியற்றில் ஈடுபடுவோர் பொதுவாகத்தாழ்வு மனப்பான்மை உடையவராகவே இருப்பர்.

## இடம் பெயர்தல் (Displacement)

பிறரைத் தன்வயப்படுத்தும் நடத்தை, மனமுறிவிற்குச் சம்பந்தமில்லாதவர்கள் மீது செலுத்தப்படுகிறது. தன்வயப்படுத்தும் காட்சி, மாற்றம் பெறுவதை எந்தப் பண்பாட்டிலும், குடும்பத்திலும் காணலாம்.

சான்றாக, அலுவலகத்தில் பணிபுரியும் ஒரவரைப் பணித்தலைவர் குற்றம் கூறிக் கடந்து கொள்ளும் போதும், அவர் வீட்டுக்கு வந்தவுடன் மனவியின் மீது சீறி விழுகின்றார். அவருடைய மனைவி, மக்களை அடிக்கிறார். பையன் தன்னடைய விளையாட்டுப் பொம்மையைப் போட்டு உடைக்கிறான். இங்ஙனம், மனமுறிவினால் ஏற்படுகின்ற ஆக்கிரமிப்பு, தொடர்ச்சியான காட்சி மாற்றத்தை உண்டாக்கக் கூடும் என்பர்.

'இடம் பெயர்தல்' எனுத் தற்காப்பு வழியமைப்பு முறை, நனவிலி மனத்தின் உந்துதல்களால் முளைவிடும் ஓர் அச்சுறுத்தலை வேறு ஒரு புறச்சூழல், மனிதர், பொருள், விலங்கு ஆகியவற்றோடு இணைத்துவிடுதலாகும்'[59] என உளவியல் வரையறை செய்கிறது.

### புறத்தேற்றம் (Projection)

*புறத்தேற்றம் என்னும் உளநலத் தற்காப்பு இயங்குமுறையானது தன்னியக்கமான, நனவிலி மனத்தால், தன்னைச் சார்ந்த, ஆனால் கைவிடப்பட்ட மனப்போக்குகளையும் உந்துதல்களையும் புறமுகமாக்கி வழக்கமாக வேறு மனிதன் அல்லது மனிதர்கள் மேல் ஏற்றிக் கற்பித்துக் கூறுதல் என்பர்.*[60]

### அறிவார்ந்த விளக்கம் (Rationalisation)

*தோல்விகளையும், போராட்டங்களையும், கவலைகளையும் தணித்துக் கொள்ளவும், அவற்றின் உண்மையான காரணங்களைத் தவிர்த்துவிட்டு வேறு ஏற்கத் தகுந்த காரணங்களை உருவாக்கிக் கொள்ளுதல் உள்ளத்தின் இயல்பாகும். இவ்வுளநலத் தற்காப்பு இயங்குமுறை அறிவார்ந்த விளக்கமாகும்.*

*இதனை உளவியலார் ஏற்க இயலாத நனவிலி மனத்தின் விருப்பங்கள் அல்லது அவ்விருப்பங்களைப் பாதுகாக்கும் போக்கில் நேர்ந்த, அறிவுக்குப் பொருந்தாத நடத்தைக்கு நனவில் மனத்தில் ஊக்கத்தாலும் தன்னியல்பாலும் காரணகாரியம் உடைய நம்பத் தகுந்த விளக்கங்களைக் கூறுதல் என்பர்.*[61]

### சரிசெய்தல் (Undoing)

*ஏற்புடைமையற்ற எண்ணம், உந்துதல்கள் அல்லது செயல்களை மறந்துவிடுதல், அல்லது அவற்றுக்குக் கழுவாய் தேடுதல் முறையில் அமையப் பெறுவது இவ்வியங்கும் முறையாகும். இஃது, ஒரு சொல்லை எழுத்துப்பிழையோடு எழுதிவிட்டபின் அழிப்பான் கொண்டு துடைத்து விட்டுப் புதிதாக எழுதுதல் போன்றது. பிறர்க்குச் செய்த தீமைகளுக்காக மன்னிப்புக் கேட்டல், கழுவாய்க்காகத் தன்னைத்தானே வெறுத்தல்,*

*கழிவிரக்கம், தண்டனைக்குட்படுத்தல் ஆகியன சரி செய்தலின் பொதுவான வடிவங்களுள் சில ஆகும்.*[62] *மேற்கூறப்பட்டவை தற்காப்பு இயங்கு முறைகள் ஆகும்.*

**பிராய்டியக் கோட்பாடுகள்**

*ஒருவரது நடவடிக்கைகளை ஆராய்ந்தால், அவரது மனம் எத்தகையது என அறிந்து கொள்ளலாம். எனவே, உளவியல் என்பது ஒருவரது நடத்தையைக் கூர்ந்து கவனிப்பதாகும். உளவியலின் தந்தை எனப் போற்றப்படுவர் சிக்மண்ட் பிராய்டு ஆவார். இவரது உளப்பகுப்பாய்வுக் கோட்பாடு* (Psycho Analysis) *உளவியலின் தனித்த பெருமை உடையதாகும்.*

*நரம்புச் செல்கள் ஒன்றன் மீது ஒன்றாக அடுக்கப்பட்டுள்ளதால், அவற்றின் செயல்பாடுகள் வேகமாக நடைபெறுகின்றன. ஒன்றற்கு ஒன்று தனக்கே உரியமுறையில் தூண்டிச் செயல் புரிகின்றன. பல நரம்புகளின் தொகுப்புகளிலிருந்து கிடைக்கும் செய்திகள் ஒன்றன்மீது ஒன்றாகக் கலந்து புதிய அனுபவங்கள் உண்டாகின்றன.*

*மனிதனின் செயல்பாட்டைக் கொண்டு மனித மனத்தை,*

*நனவு மனம்* (Conscious mind)

*நனவடி மனம்* (Sub-conscious mind)

*ஆழ் மனம்* (Unconscious mind)[63]

*என மூன்றாகப் பிரிப்பார் பிராய்டு.*

*நனவிலி மனத்தை முதன்முதலில் கண்டுபிடித்தவர் பிராய்டு ஆவார். இவருக்கு முன்புவரை, உளவியல் அறிஞர்கள் மனத்தை நனவு மனம் என்கிற ஒரே பகுதியாகவே கருதி ஆராய்ந்து வந்தனர்.*

நனவு மனமானது ஒருபொருளைப் பார்த்தல் அல்லது இசையைக் கேட்டல் போன்ற செயலை நமது புலன் உறுப்புகளால் நேரடியாகப் பார்த்து அனுபவித்தல் போன்ற செயல்களைச் செய்கிறது.

ஷார்க்கோ எனும் உளவியல் அறிஞர் பிராய்டிடம், மனக்கோளாறு நரம்புக் கோளாறு போன்ற மனநோய்கள் தோன்றுவதற்குப் பாலியல் தொடர்பான சிக்கல்கள் காரணமாக இருக்கலாம் என்றார். இக்கருத்து பிராய்டின் சிந்தனையைத் தூண்டியது. பிராய்டு தமது தடையிலாத் தொடர்பு முறையினால் மனநோயாளியை ஆராய்ந்தார். இந்த ஆராய்ச்சியினால் மனப்பிரமை அல்லது உளக்கூறு மாற்ற (Hysteria) நோய்க்கான காரணம் பாலியல் தொடர்பான சிக்கல் என்பதைக் கண்டுபிடித்தார்.[64]

பால் (Sex) உணர்வு தொடர்பான வாழ்க்கையில் நிறைவு அடைந்தவர்களுக்கு இந்நோய் வராது என்பதைக் கண்டறிந்தார். இதுவே பிராய்டிஸம் (Freudism) தோன்றக் காரணமாய் அமைந்தது.

பிராய்டுக்கு முன்னால் இருந்தவர்கள் மனக்கோளாறுக்குப் 'பால் உந்தல்' காரணமாய் இருக்கலாம் என்று சந்தேகப்பட்டனர். ஆனால், இதனை முழுமையாக ஆராய்ந்து மனக்கோளாறுகளுக்குப் பாலுந்தலே காரணம் எனும் கருத்தை முதன்முதலில் வெளியிட்டவர் பிராய்டு ஆவார்.

நனவிலி மனப்பகுதியில் இருந்து இயங்கும் சக்திகள், 'உந்தல்கள்' (Drives) எனப்படும் இயற்கைச் சக்திகள் ஆகும். இளம் வயதில் அடக்கி ஒடுக்கப்பட்ட உணர்வுகளும், உந்தல்களும், காம உணர்வும் நனவிலிப் பகுதியில் இருந்து ஆதிக்கம் செய்வதாகப் பிராய்டு கருதினார்.

பிராய்டு முதன்முதலில் மனத்தை, நனவு மனம் (Conscious mind), நனவடி மனம் (sub-conscious mind), ஆழ்மனம் (Unconsious mind) என்று பிரித்து ஆராய்ந்தார். பின்னர் நனவில் (Id), அகம் (Ego), அதீத அகம் (Super ego) எனும் மனப்பிரிவுகளை ஏற்படுத்தி ஆராய்ந்தார்.

ஒருவனது பிற்கால வாழ்க்கை அமைப்பு குழந்தைப் பருத்தில் உருவாகிவிடுகிறது. அதன் ஆளுமை அமைப்பிற்கான மனக்கோட்பாடுகளைப் பிராய்டு வகுத்துள்ளார்.

## பிராய்டின் மனக்கோட்பாடுகள்

### 1. நனவில் (ID) அல்லது இன்ப நாட்டக் கோட்பாடு (Pleasure Principle)

இட் (Id) என்பது நனவிலி மனப்பகுதியைச் சார்ந்தது. இது மனிதனின் இயற்கை உணர்வுகளையும், வேகங்களையும், கிளர்ச்சிகளையும் கொண்டு இயங்குவது. குறிப்பாகப் பாலுணர்வை அடிப்படையாகக் கொண்டு இயங்குவது ஆகும். இங்கு இன்ப நாட்டமே காணப்படும்.

இஃது அடிப்படையான விலங்குணர்ச்சிதான். எதையும் தனதாகவும், தன் மகிழ்ச்சியே இன்றியமையாதது என நினைப்பதும் நனவிலி (Id) என்னும் மனப்பகுதி.

குழந்தைப் பருவம் முழுவதும் நனவிலியின் ஆதிக்கமே நடைபெறுவதால், குழந்தைக்கு தனது இன்பமே முக்கியமானதாகிறது.

நனவிலி (Id) உணர்வுக்குத் நன்மை, தீமை தெரியாது. இங்கு இயல்பான இயற்கை உந்தல்களே வேலை செய்கின்றன. இந்தப் பால் உந்தலுக்கப் பிராய்டு இன்ப உட்திறன் (Libido) என்று பெயரிட்டார்.[66] பாலுந்தல் என்னும் சக்தியானது வாழ்க்கையின் போக்கை நிறுவுவதில் பங்கு

வகுக்கின்றது என்பதை அனைத்து உளவியல் நிபுணர்களும் ஒப்புக்கொண்டுள்ளனர்.

## 2. அகம் (Ego)

### யதார்த்த கோட்பாடு (Reality Principle)

அகம் என்னும் (Ego) வெளிமனப் பகுதியான நனவு மனப் பகுதியைச் சேர்ந்தது. அகத்தின் அடிப்பகுதி நனவிலி (Id) பகுதியுடன் ஒட்டி உள்ளது.

சமூகக் கோட்பாடுகளை ஏற்று சமூகத்தோடு ஒட்டி வாழ முயற்சி செய்வது அகம். இது நன்னெறியைப் பின்பற்ற முயல்கிறது. அகத்தில் அடககப்பட்ட இச்சைகள் நனவிலி (Id) எனும் மறை பகுதிக்குள் சென்று நிலை கொள்கின்றன.

உணர்ச்சிகள் தூய்மையடைந்து இவ்அகம் எனும் பகுதியில்தான் சமூகத்திற்கு ஏற்றவாறு மாறுபடுகின்றன. இது உயர்மடை மாற்றம் (Sublimation) எனப்படும். நனவிலி (Id) என்பதிலிருந்து விலங்குணர்ச்சியைச் சமூகத்திற்கு ஏற்றவாறு மாற்றவேண்டும். சமூகம் விதிக்கும் நன்னெறியைக் கொண்டுள்ள அதீத அகத்தின் (Super ego) கட்டளையையும் ஏற்றுக் கொள்வது அகத்தின் வேலையாகும்[67].

## 3. அதீத அகம் (Super Ego)

### நீதிக் கொள்கை (Moral Principle)

'அதீத அகம்' எனப்படுவது அகத்திலிருந்து தோன்றியது. இது பெரும்பாலும் நனவிலி நிலையிலிருந்து செயல்படுகிறது. நீதிநெறிக் கொள்கையை உடைய இதை 'மனசாட்சி' என்பர்.

நனவிலி (Id) என்பதன் தூண்டுதலுக்கும், அதீத அகத்தின் குற்றச்சாட்டுகளுக்கும் இடையில் ‘அகம்’ தன்னைக் காத்துக் கொள்ள முயல்கிறது. அகம், அதீத அகத்தின் நன்னெறியை ஏற்க மறுக்கும்போது ஒருவனுக்கு மனக்கோளாறு ஏற்படக் காரணமாகிறது. மனசாட்சி என்னும் அதீத அகத்தின் அழுத்தத்தால் சிலர் தற்கொலை செய்து கொள்வதுண்டு.

அகத்திலிருந்து தோன்றும் அதீத அகம் பற்றிப் பிராய்டு கூறிய விளக்கம், அவரைப் பற்றித் தரம் தாழ்ந்து எண்ணுவதற்கு அடிப்படையாக அமைந்தது. குழந்தைகள் பொதுவாக, இன்பத்தையே நாடும் மனப்பாங்கு கொண்டவராக இருப்பர்.

ஆண் குழந்தைக்குத் தாய் மீது பற்று இருக்கும். பெண் குழந்தைக்குத் தந்தை மீது பற்று இருக்கும். ஆண் குழந்தை தாய் மீது அன்பும் தந்தை மீது பகைமையும் கொள்ளும். தந்தையின் இடத்தைக் கைப்பற்ற தந்தையைப் போல நடக்கவும் முயலும். கைக்கூடாமல் போனால், தந்தை மீது வெறுப்புக் கொண்டு அவனை ஒழித்துக் கட்டவும் முயல்வதாகப் பிராய்டு கூறினார்.

இம்மாதிரியான மனச்சிக்கல்லுக்கு இடிப்பஸ் சிக்கல் (Oedipus complex) என்று பெயரிட்டார்.[68] இச்சிக்கல் கோட்பாடுகளை அறிஞர்கள் முதலில் ஏற்க மறுத்தனர். பின்னர் நடைமுறையாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

### ஆளுமை வளர்ச்சி (Personality Development)

ஆளுமை (Personality) என்பது ஒருவனுடைய மனத்தின் தன்மைகளை மட்டுமல்லாது அவனது தோற்றம், பேச்சு, நடத்தை, பண்பு என்கிற எல்லாவற்றையும் சுட்டும் முழுத்தன்மையைக் குறிக்கும். ஆளுமை என்பது ஆள் + தன்மை என்பது ஆகும். பாரம்பரியம், சூழ்நிலை, அனுபவங்கள்,

*கல்வி, மனப்போராட்டங்கள் போன்றவை மனிதனுக்குள் ஆளுமை அமைவதைத் தீர்மானிக்கின்றன.*[69]

*முதல் இருபது ஆண்டுகளில் ஒருவனது ஆளுமை மாறுபட்டுப் பின்னர் பெரும்பாலும் மாறுபாடு அடைவதில்லை.*

*ஆளுமைக் கோட்பாட்டைக் கொண்டு, பிராய்டு தமது உளப்பகுப்பாய்வுக் கொள்கையை நிறுவுகிறார். ஆளுமை எவ்வாறு அமைகிறதோ? அவ்வாறே அவனது உயர்வும் தாழ்வும், வெற்றியும் தோல்வியும் அமையும் என்பர்.*

*ஒருவனுடைய நனவிலி என்ற மனப்பகுதியில் உண்டாகும் வேகங்கள், சமூகச் சூழ்நிலையில் உள்ள சட்ட திட்டங்களிடம் மோதுகின்றன. அப்போது ஒருவனின் ஆளுமை மாறி, மாறி அமைகிறது. நனவிலியில் உள்ள பால் உந்தலே ஒருவனின் ஆளுமை வளர்ச்சியைத் தீர்மானிக்கும் அடிப்படைச் சக்தியாகும்.*

*பிராய்டு, 1905 ஆம் ஆண்டு உளப் பால் வளர்ச்சி* (Psycho sexual development) *என்ற தனிமனித பால் வளர்ச்சியின் படிநிலைகளை விளக்கித் தமது கொள்கையை வெளியிட்டார். இந்த மனவளர்ச்சிப் பருவங்கள் ஐந்து நிலைகளைக் கொண்டுள்ளன.*

### *1.* வாய் இன்பப் பருவம் (Oral Stage)

*இப்பருவம் குழந்தையின் முதல் ஆண்டு வளர்ச்சியைக் குறிக்கும். குழந்தை, தாயின் பாலை உறிஞ்சிக் குடிக்க ஆசைப்படும். இங்கு வாய், நாக்கு, உதடு ஆகியன முக்கிய இடங்களாக அமைகின்றன. இன்ப உட்திறன்* (Libido) *என்னும் பால் உணர்ச்சி, இந்தச் சக்தி வாய்ந்த பகுதியில் அமைகிறது.*

குழந்தை, தாயின் மார்பகத்தைத் தனது உடலின் ஒரு பகுதியாகவே நினைக்கிறது.[70]

இப்பருவத்தில் பாலை உறிஞ்சிக் குடிக்கும் செயல் தடைபட்டால், பின்னாளில் அவன் சாப்பாடு விரும்பியாகவோ, அல்லது குடிகாரனாகவோ அல்லது தொடர்ந்து புகை பிடிப்பவனாகவோ மாற வாய்ப்புள்ளது. மேலும் அவன், பிறரைச் சார்ந்தோ அல்லது எதற்கெடுத்தாலும் பிறரின் அனுமதியை வேண்டி நிற்பவனாகவோ மாறுவான்.

**ஆசனவாய் இன்பப் பருவம் (Anal Stage)**

இப்பருவம் இரண்டு முதல் மூன்று வயதுவரை தொடர்கிறது. இவ்வயதில் குழந்தை மலம் கழிப்பதில் ஒருவித மகிழ்ச்சியைப் பெறுகிறது.

இப்பருவத்தில் குழந்தையின் இன்பமானது, ஆசனவாயைச் சுற்றி உள்ள பகுதிக்கு மாறுகிறது. இக்கட்டத்தில் குழந்தைகள் சரியான முறையில் மலம் கழிக்கப் பெற்றோர் உதவ வேண்டும். இப்பருவத்தில் குழந்தையின் இம்மகிழ்ச்சி தடைப்பட்டால் பின்னாளில் அவர்கள் மிகுந்த உளச்சிக்கல், ஆளுமை உடையோராக மாறிவிடுவர். உலோபியாகவும், வீண் பிடிவாதம் கொண்டவர்களாகவும் மாறுவர். மேலும், மலச்சிக்கல் போன்ற பல சிக்கல்கள் ஏற்படவும் காரணமாகிறது.

**குறி இன்பப் பருவம் (Phallic Stage)**

இப்பருவம் மூன்றாவது வயதிலிருந்து ஆறு வயதுவரை தொடர்கிறது. இவ்வயதில் குழந்தைகள் தங்களது இன உறுப்புகளைத் தொட்டுத் தடவிப் பார்த்து மகிழ்வர். சிறுவர் சிறுமியர் தங்களது பால்வேறுபாட்டை உணர்ந்து, கற்பனையில் மிதப்பர். இப்பருவத்தில் ஆண் குழந்தையாய்

இருந்தால் தாயின் முழு அன்பும் தனக்கே வேண்டும் என்றும், தந்தையை எதிரியாகவும் நினைப்பர்.

தந்தை தனக்குப் போட்டியாகத் தாயின் அன்பை பெற்றுவிடுவானோ என்று ஆண்மகன் சினமடைகின்றனான். இதற்கு இடிப்பஸ் சிக்கல் (Oedipus Complex) என்று பெயர்.[71]

பெண் குழந்தை தந்தை மீது அன்பு கொள்கிறது. தன் தாய், தந்தையின் அன்பில் பங்குள்ளவன் என்ற காரணத்தால் தாயை வெறுக்கிறது. இது எலெக்ட்ரா சிக்கல் (Electra Complex) எனப்படும். இப்பருவத்தில் இந்நிலை வளர்ச்சி தடைப்படுத்தப்படுமானால், பிற்காலத்தில் குழந்தைகள் அச்சமும் படபடப்பும் மிகுந்தவர்களாக மாற வாய்ப்புண்டு.[72]

## **உள்ளுறை இன்பம் பருவம் (Lantent Stage)**

இப்பருவம், ஆறு வயது முதல் பதினோரு வயது வரை தொடர்கிறது. இப்பருவத்தில் பால் உணர்வு அதிகமாக வெளியில் தெரிவதில்லை. சிறுவர், சிறுமியர் ஒன்றாகப் பழகுவர். வீட்டில் தந்தையையும், பள்ளியில் ஆசிரியரையும் ஆதிக்க உருவமாகப் பார்ப்பர். பிற குழந்தைகளுடன் விளையாடுவர், வெற்றி அடைய முயற்சி செய்வர். தோல்வி தொடர்ந்தால் மனம் சோர்வடைவர். வெற்றி பெறவே விரும்புவர்.[73] எனவே, இப்பருவம் ஆதிக்கம் செலுத்தும் காலமாக உள்ளது.

## **பால் இன்பப் பருவம் (Genital Stage)**

இப்பருவமானது, பன்னிரண்டு வயது முதல் குமாரப் பருவம் முடியும்வரை தொடர்கிறது. இப்பருவத்தில் இளைஞர்கள் குமாரப்பருத்தை அடைகிறார்கள். பால் உணர்வு நன்கு வளர்ச்சி அடைகிறது. அவர்களது

உடலிலும், வெளிப்படையாக நல்ல மாற்றம் ஏற்படுவதை அறியமுடியும். ஆணுக்குத் தாடி, மீசை வளர்வதும், பெண்ணிற்கு மார்பகங்கள் வளர்ச்சியடைவதும் வெளிப்படையாகத் தெரியும்.[74]

இப்பருவத்தில் அவர்களது, பால் உணர்வினை மடைமாற்றம் செய்யவேண்டும். இப்பருவத்தில் இந்நிலை தடைப்படுத்தப்பட்டால், பாலியல் வன்முறையும் விலங்குத் தனமான தாக்குதலும் ஏற்பட வாய்ப்புண்டு.

மேற்கண்ட ஐந்து உள பால் வளர்ச்சி சரியாக நடைபெற வேண்டும். இதில் தடையேற்பட்டால் உடல் மட்டுமே வளர்ந்து அவனது உளவளர்ச்சி தடைப்பட்டு இருக்கும். இது வரும் காலங்களில் மனச்சிக்கலையும், மனநோயையும் ஏற்படுத்தும் என்கிறார் பிராய்டு. இவை உளவியல் அறிவியல் துறையாகத் தோன்றி வளர்ந்த வரலாறாகும்.

## தமிழில் உளவியல் தோற்ற வரலாறு

மனிதன் இயற்கையின் படிமலர்ச்சிக் கோட்பாட்டின்படி விலங்குகளின் வழித் தோன்றலாக வளர்ச்சி அடைந்து வந்திருக்கிறான் என்பது அறிவியல் உணர்த்தும் உண்மை. கற்கால மனிதன், பசி, தாகம், மோகம் எனும் இயற்கை உணர்ச்சிகளைத் தவிர வேறு உணர்ச்சிகள் இல்லாதவனாகவும், தன் உடல் வேட்கையை எப்படி வேண்டுமானாலும் தீர்த்துக் கொள்ளலாம் எனும் முறையற்ற வெறி உடையவனாகவும் இருந்திருக்க வேண்டும்.

## விலங்குணர்ச்சி

காட்டுமிராண்டியாக வாழ்ந்த ஆரம்பகால மனிதனின் உணர்ச்சியைக் காட்டுமிராண்டி உணர்ச்சி அல்லது விலங்குணர்ச்சி ஆளுமை செய்திருக்கும்.

*கற்கால மனிதனின் மூளைப்பாகம் முழுவதிலும் விலங்குணர்ச்சி தவிர வேறுவிதமான எண்ணங்களோ உணர்ச்சிகளோ தோன்றியிருக்காது. அதனால்தான், தன்னைவிடக் கொடிய விலங்குகளின் தாக்குதல்களையும், இயற்கைச் சக்திகளையும் அறிவின் துணையுடன் எதிர்த்துப் போராடித் தன்னைக் காத்துக் கொள்ளும் சக்தியுடன் மனிதன் வாழ்ந்து வந்துள்ளான்.*

**பண்பாட்டுணர்ச்சி**

*காலப்போக்கில் மனிதன் தனியாக வாழ்வதை விட, கூட்டமாக வாழ்ந்து தன்னைக் காத்துக் கொள்ள அவனது மூளைப்பாகத்தில் ஒரு சிந்தனை தோன்றியிருக்கலாம்.*

*ஆரம்பகால மனிதன் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காக வளர்த்துக் கொண்ட உணர்ச்சியே, பின்னர் பண்பாட்டுணர்ச்சியாக வளரக் காரணமாயிற்று*[74] *எனலாம்.*

*மனிதன் கூட்டமாக வாழ, கூட்டத்துடன் ஒத்துவாழத் தன் விலங்குணர்ச்சியைக் கட்டுப்படுத்த வேண்டியதாயிற்று. விலங்குணர்ச்சி உடைய அவனது மூளையில் பண்பாட்டுணர்ச்சிக்காக, ஒரு சிறிய பாகம் தூய்மையாக ஒதுக்கப்பட்டது. இப்பாகத்தை அகம் என்கிறார் பிராய்டு.*[76]

*நாளும் வளர்ந்த பண்பாட்டுணர்ச்சியின் உச்சம் நாகரிகமாகும். இதனால் விலங்குணர்ச்சி முற்றிலும் அழிந்துவிட்டது எனக் கூற இயலாது. புதிதாகத் தோன்றிய பண்பாட்டுணர்ச்சி, தான் பற்றிக் கொண்ட இடத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவே விலங்குணர்ச்சியோடு போராட்டம் நடத்த வேண்டியதாயிற்று.*

*மேலும், மனிதன் காட்டுமிராண்டியாக வாழ்க்கை நடத்த ஆரம்பித்த காலத்தில் அவனிடமிருந்த வலுவான விலங்குணர்ச்சி அவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள ஆதாரமாக இருந்தது.*[77]

*மனிதன், தன்னை மற்றொன்று கொல்ல முயலும்முன், தான் அதனை அடித்துக் கொல்லவும், தான் விரும்பிய இறையை மற்றொன்று கைப்பற்றும் முன், தான் கைப்பற்றிக் கொள்ளவும், தான் விரும்பிய பெண்ணை அடைவதற்கு நடத்தும் போராட்டத்திற்காகவும் விலங்குணர்ச்சி அடிப்படைக் காரணமாக அமைந்தது.*

**ஆதிகால மனிதன்**

*ஆதி மனிதன் இயற்கையோடு இயைந்த வாழ்கையை மேற்கொண்டவன். அவன் தன் அனுபவங்களுக்கு ஏற்ப இவ்வண்டத்தினை ஒரு நல்ல ஆவி* (Good Sprit) *படைத்து ஆள்கிறது எனவும், அதனால்தான் தனக்கு நன்மைகள் பல பயக்கின்றன எனவும் நம்பினான். மேலும், அவனுக்குத் துன்பம் விளைவிக்க ஒரு தீய ஆவி* (Evil Sprit) *உண்டெனவும், தீமைகள் அதனால்தான் ஏற்படுகின்றன எனவும் வருந்தினான். இந்த ஆவிகளைத் தன் வயப்படுத்த பல சடங்குகளை* (Rituals) *ஏற்படுத்தினான். நாளடைவில் அவை பலவாகப் பெருகின. இன்றும் நம் நாட்டில் பல இடங்களில் உளக்கூறு மாற்ற நோய்* (Hysteria) *என்னும் உள்ளக் கோளாறுகள் பீடித்தவர்களைப் பேய் பிடித்திருப்பதாகக் கருதி செய்யப்படும் சடங்குகள் ஆதிமனிதனின் சடங்குகளுடன் ஒன்றியிருப்பதைக் காண முடிகிறது.*

*பிற்காலத்தில் ஒருவனுடைய தோற்றத்தைக் கொண்டும்* (Physioghomy), *உடலுறுப்புகளின் அமைப்புகளைக் கொண்டும், கைரேகைகளைக்* (Palmistry) *கொண்டும், மனிதனது உள்ளத்தின் இயல்புகளையும், நடத்தைகளையும்*

*விளக்கியுள்ளனர். பலகோடி மைல்கள் தூரத்திலுள்ள கோள்களும்* (Planets), *விண்மீன்களும்* (Stars) *ஒருவன் நடத்தையையும், வருங்கால நன்மை தீமைகளையும் உருவாக்குகின்றன என நம்பி வந்தனர்.*[79] *அறிவியல் மெல்ல வளர்ச்சியடைய ஆரம்பித்தது.*

*உலகில், முதன் முதலாக ஐரோப்பியக் கண்டத்தில் அறிவியல் வெகு விரைவில் வளர்ச்சியடையக் காரணம், பண்டைய கிரேக்க அறிஞர்களான சாக்ரடீஸ், அரிஸ்டாட்டில் போன்றோராவார். மேலும், கலிலியோ, காப்பர்னீகஸ், நியூட்டன், டார்வின் போன்ற அறிவியலறிஞர்கள் புதுமையான ஆராய்ச்சி உண்மைகளை விரிவுபடுத்தினர்.*

## இந்திய உளவியல் தொடக்கம்

*இந்தியாவில், இந்நூற்றாண்டின் தொடக்கம் வரை சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன் கொண்டுள்ள எண்ணங்களின் அடிப்படையில் மனிதனின் 'உடல்* (Physical), *உளம்* (Psycho) *பற்றிய போக்குகளை விவரிக்கும் நிலை இருந்து வந்துள்ளதை அறியமுடிகிறது. எனவே உளவியற் கொள்கை பண்டுதொட்டு நிலவி வந்துள்ளமையை அறியமுடிகிறது. மேலும், புதிய உளவியற் கொள்கையானது, டார்வினின் படிமலர்ச்சிக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு தொடங்குகிறது.*

## பழங்காலம்

*மக்கள், பழங்காலத்தில் மனநலமற்றோரைப் பேயினால் ஆட்படுத்தப் பட்டவராகக் கருதி வந்தனர் எனவும், பிறழ்நிலை நடத்தைக்குப்* (Abnormal Behaviour) *பிசாசே காரணம் எனக்கருதி மனநலம் சிதைந்தோர் நலமடையும் பொருட்டு, மனநோயாளிகளின் மண்டையோட்டைச் செதுக்கிவிட்டனர் எனவும் தக்க சான்றாதாரங்களுடன் அறிஞர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர்.*[80]

*மருத்துவ இயலின் தந்தை எனப் போற்றப்படும் கிரேக்க அறிஞர் ஹிப்போகிரேட்டஸ்* (Hippocrates) *கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில் தோன்றியதன் பின்னரே மனநலம் சிதைந்தோரின் மண்டையோட்டைச் செதுக்கும் வழக்கத்திற்கு எதிரான சிந்தனை வளர்ந்தது.*[81]

*வரலாறு தோன்றிய காலத்திலிருந்தே பிறழ்வான உள நிகழ்ச்சிகளும் நடைபெற்றுள்ளன. கீழை, மேல நாடுகளின் பழங்கால நூல்களில் இந்நிகழ்வுகள் பதிவு செய்யப்பட்டுள்ளன.*

## பழைய ஏற்பாடு

*பழைய ஏற்பாட்டில்* (Old Testament) *கர்த்தரிடமிருந்து வந்த ஒரு பொல்லா ஆவி, சவுல்* (Saul) *என்பவனின் மீதிறங்கிய போதெல்லாம் அவனிடம் ஒரு சோர்வு நிலை இருந்ததாகவும், நேபுசாத்நேசார்* (Nebuchadnezzar) *தனது சன்னிநிலையில், தான் ஒரு விலங்காக மாறிவிட்டதாக நம்பினான் எனவும் கூறப்பட்டுள்ளது. அவன் 'மாடுகளைப் போலப் புல்லை மேய்ந்தான். அவனுடைய தலைமயிர் கழுகுகளுடைய இறகுகளைப் போலவும், அவனுடைய நகங்கள் பட்சிகளுடைய நகங்களைப் போலவும், வளரும்வரை அவன் சரீரம் ஆகாயத்துப் பனியாலே நனைந்தது'*[82] *என்பதால் கிறித்துவுக்குப் பின்னரும் உளக்கூறு நோய் இருந்தமையை அறிய முடிகிறது.*

## ஹோமரின் நூல்களில் உளப் பிறழ்வு நிகழ்வுகள்

*ஹோமரின் நூலகளில் பிறழ்வு உள நிகழ்ச்சிகள் குறிப்பிடப்பட்டுள்ளன. 'அஜாக்ஸ்'* (Ajax) *தன் கத்தியால் தன்னைத்தானே கொல்லும் வரை, குட்டிப் பிசாசுகள்* (Furies) *அவனைத் துன்புறுத்தின என்பதையும், தான் டிரோஜன் (கூசடிதயடே) போரில் பங்கு பெறாதது சரியே எனக் காட்டும் வகையில், யுலீசஸ்* (Ulysses) *தனக்குப் பைத்தியம்*

பிடித்திருப்பது போல நடித்ததையும் ஹோமரின்'[83] நூல்களில் காணமுடிகிறது.

சிலர் இவற்றைத் தெய்வக் கூறுகள் எனவும் கூறுவர். ஆனால் புகழ்வாய்ந்த தெய்வக் கூற்றுகளை (Oracles) முழுவதும் பித்தலாட்டம் எனக் கூற முடியாது. அவை, இன்று நாம் காணும் 'ஆவியுலக ஊடாடுபவரை (Medium) ஒத்தமையும் ஹிஸ்டீரியா நோய் வெளியீடுகளாக இருந்திருக்கக்கூடும்'[84] எனும் கூற்று சிந்திக்கத்தக்கதாகும்.

பிறழ்வான நிகழ்ச்சிகள் காணப்பட்ட போதெல்லாம் இதை விளக்கும் முயற்சியும் நடைபெற்றிருப்பதைக் காணமுடிகிறது. 'உன்னையே நீ உணர்வாய்; தெய்வத்தை வெளியில் தேடாதே; உன்னுள்ளே பார்'[85] என்றெல்லாம் சித்தர்களும், முனிவர்களும், ஞானிகளும் எடுத்துரைத்துள்ளனர்.

மேலும், பிற்கால ஆராய்ச்சியாளர்களான ஸர். ஆலிவர் லார்ஜ், ஸர். வில்லியம் பாரேட், டாக்டர் அன்னி பெசண்ட், ஸர். பிரான்சிஸ் க்ரூயஸ், டாக்டர் எச். மான்ஸ்டர் பாக், கோஷ், டாக்டர் வெய், வில்லியம் ஜேம்ஸ், டி.என். ராய், ஜேம்ஸ் எஸ்டேய்ஸ், மறைமலையடிகள், திரு.வி.க. போன்றோர் பிறழ் நிலை உணர்வுகள் குறித்து விளக்கியுள்ளனர்.

**தொல்காப்பியம்**

தமிழின் தொன்மையான நூலான தொல்காப்பியத்தில் உளவியல் கூறுகள் பல இடம் பெற்றுள்ளன. அவற்றுள் மனம் பற்றிய செய்தியும் காணக்கிடைப்பதால் தொல்காப்பியரின் திறம் போற்றப்படுகிறது. மனித இனத்தில் இயல்புகள் மிகவும் மாறுபட்டவை. மனம் அகப்புறச் சூழல்கள் வழி, மனிதனை இட்டுச் செல்லும் ஆற்றலுடையன, மனம், அறிவு, உணர்வு

*ஆகிய வழிகளில் செயல்படுவதால், மனித இனம் சிறப்புறுகிறது. விலிங்கிலிருந்து மனிதனை வேறுபடுத்திக் காட்டக்கூடியது மனம் என்பதையும், அதன் பண்புகளையும் தமிழர்கள் நன்கு அறிந்திருந்தனர். தொல்காப்பியர் மனதை ஆறாவது அறிவு என்று சுட்டுகிறார்.*

**'ஆறறிவதுவே அவற்றோடு மனனே'[86]**

*என்றும்,*

**'மக்கள்தாமே ஆறறிவயிரே**
**பிறவும் உளவே அக்கிளைப்பிறப்பே'[87]**

*என்றும் மனம் குறித்துக் கூறுவார்.*

*இக்குறட்பாவிற்கு, 'பிறப்பு என்றதனால் குரங்கு குமலாகிய விலங்கினுள் அறிவுடையன எனப்படும் மனவுணர்வு உடையன உளவாயின் அவையும் ஈன்று ஆறறிவுயிராய் அடங்கும் என்பது. 'தாமே எனப் பிரித்துக் கூறினமையான் நல்லறிவு உடையார் என்றதற்குச் சிறந்தார் என்பதும் கொள்க'[88] எனும் பேராசிரியர் விளக்கம் ஏற்கத்தக்கதாகும்.*

*மனத்தின் நுண்மையான செயல்பாடுகளைக் கூர்ந்து நோக்கி மெய்ப்பாட்டியல் வகுத்த தொல்காப்பியரின் திறம், பழந்தமிழரின் அறிவு நுட்பத்தினை விளக்குகிறது.*

*களவு, கற்பு, ஒழுக்க நிலைக்காலங்களில் தலைவன், தலைவியரின் மனநிலைகளையும், அடையும் மாறுபாடுகளையும், சங்கப் புலவர்கள் செம்மையாக விளக்கியுள்ளமையால், மிகப் பழங்காலத்திலேயே தமிழகத்தில் முறைமை சார்ந்த உளவியல் அணுகுமுறை நிலவியுள்ளமையை அறிய முடிகிறது.*

இலக்கியத்தைப் படைத்தற்கு உளவியல் பின்புலமும் ஓர் இன்றியமையாதத் தேவை எனத் தொல்காப்பியர் உணர்ந்திருந்தமையால், பொருளதிகாரத்தில் 'மெய்ப்பாட்டியல்' என ஓர் இயல் வகுத்தார்.

எண்வகை மெய்ப்பாடுகளையும், அதன் நிலைக்களன்களையும், அகணைத்திணைக்கரிய மெய்ப்பாடுகளையும், பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகளையும் மிக விரிவாகத் தொல்காப்பியர் விளக்கியிருப்பதால் அவரது காலத்திற்கு முன்பே முறைப்படுத்தப்பட்ட உளவியல் அணுகுமுறை உளவியல் ஆய்வு இருந்திருக்கக் கூடும் என்பதை அறியமுடிகிறது.

**பால்**

பாலுணர்வு பற்றி ஒரு பொருத்தமான கொள்கையைத் தமிழ் நூல்களில் காண இயலவில்லை. தொல்காப்பியம் பாலுணர்வு பற்றிய செய்தியை வெளிப்படுத்துகிறது. ஆடவன் ஒருவன் பெண்ணொருத்தியைக் காண்கிறான். அவள் மொழியைக் கேட்கிறான். அவள் மனத்தை மோகிக்கின்றான். அவள் மெய்யைத் தீண்டுகிறான். கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து உற்று அறியும் போது, உள்ளம் காமத்தின் கொள்கலம் ஆகின்றது. உம்பில் சில மாற்றங்கள் நிகழ்கின்றன. இவையெல்லாம் புணர்ச்சியில் போய் முடிவடையும். காதல் புறநிலையைக் கண்டு கூறுமளவே அறிவியல் செய்யக் கூடியது. அதன் தோற்றத்தை இது தெளிவாக்குமா? இல்லவே இல்லை என்பர்.[89]

**ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**
**ஒன்றி உயர்ந்த பாலதாணையின்**
**ஒத்த கிழவனும், கிழத்தியும் காண்ப**[90]

எனும் நூற்பாவில் உயர்ந்த பாலின் ஆணையால் என்பது - நல்லூழின் ஏவலால் - காதற்காட்சி நிகழும் என்பார் தொல்காப்பியர். மேலும், இன்பம் குறித்த தம் சிந்தனையை,

**'எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**
**தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும்'[91]**

என்பார். எனின் தொல்காப்பியர் உளம் குறித்த சிந்தனை உடையவராக விளங்குகிறார்.

### சங்க இலக்கியங்கள்

சங்க இலக்கியங்களுள், உளவியல் கூறுகளைப் பெரிதும் உடையதாக அகத்திணைப் பாடல்கள் காணப்படுகின்றன. 'தமிழினத்தின் நெஞ்சியல் அல்லது உள்ளியல் அகத்திணைக்குக் கருவை வழங்கிற்று. அகத்திணைத் தோற்றம், சமுதாயவியல், மானிட நிலவியல், தொல்தமிழினத்தின் உளவியல் என்னும் முக்கூற்றுத்தன்மைகளைச் சார்ந்து நிற்பது. தமிழினத்தின் தனிநெஞ்சியல் காண் அகத்திணை எண்ணத்தையே உண்டாக்கிறது'[92] என்னும் வ.சுப. மாணிக்கனார் கூற்று இங்கு எண்ணத்தக்கதாகும்.

தமிழில் நிலையான, விரிவான இலக்கிய உளவியல் நூலொன்றை எழுதுவதற்குப் பெரும்பான்மையான மேற்கோள்களைச் சங்க இலக்கியத்திலிருந்து எடுத்துக்காட்ட வேண்டியுள்ளது.

'சங்க இலக்கியத்திற்கு பிறிதொரு பெயர் சூட்டுக என்று கேட்டால் தயங்காமல் 'உளவியல் இலக்கியம்' எனக் குறிப்பிடலாம். அகத்திணைப் பாடல்கள் நூற்றுக்கு நூறும், புறத்திணைப் பாடல்கள் நூற்றுக்கு எழுபத்தைந்தும் 'உளவியல்' பற்றியனவே ஆகும்'[93] என்பார் தமிழண்ணல்.

*அகப்பாடல், பாலியல் செய்திகளை அறிவியல் முறையில் விளக்குகின்றன. 'பாலியல் முறையாக அறிந்துகொள்ள வேண்டிய ஓர் அறிவியல் பாடமாகும்' என்பதை அகப்பாடல்கள் உணர்த்துகின்றன.*

*'அகத்திலிருந்து ஒரு பாலிலக்கியம். பெயரில்லாதார் வாழ்க்கையிலிருந்து காம நுணுக்கங்களைக் கற்றுக் கொள்கிறோம். காமம் பற்றிய ஆணுடல், பெண்ணுடலின் கூறுகளையும், இயற்கை, செயற்கை, திரிபு ஆகிய மனக்கூறுகளையும், கரவின்றிப் பட்டாங்குச் சொல்வது பாலிணக்க நூல்'[94] என்பார் வ.சுப. மாணிக்கம். சங்க இலக்கியத்தில் உளவியல் கூறுகள் பல இடம்பெற்றுள்ளன.*

*பால் குறித்த சிந்தனைகள் சங்க இலக்கியங்களில் வெளிப்படுத்தப் பட்டுள்ளன.*

***பால்வரைந்தமைத்தல் அல்லது அவர்வயின்***
***கால்பளந்தறிதற்கு யாஅம்யாரோ***[95]

*எனும் குறுந்தொகைப் பாடலும்*

***பறிதொன்றாகக் கூறும்***
***அங்கும் ஆக்குமோ வாழிய பாலே***[96]

*எனும் ஐங்குறுநூற்றுப் பாடலும் 'பால்' குறித்து விளக்குவதைக் காணலாம்.*

## கற்பனை மெய்யாதல்

*கற்பனை ஒன்றை மனவுணர்வால் மெய்யாகக் கருதி உறுதிப்பாட்டுன் செயல்படும் மனநிலையை மிகையுணர்வு உளவியல் எனலாம்.*

*தான் நாடு வளர்ந்து வரும் புன்னை மரத்தைத் தன் உடன் பிறப்பாகக் கருதும் தலைவியின் உளநிலை உறுதியுடன் செயல்படும் போக்கை,*

***நும்மினும் சிறந்தது நுவ்வையாகுமென்று***
***அன்னை கூறினள் புன்னையது நலனே***[97]

*எனும் நற்றிணைப் பாடல் வழி அறியலாம்.*

### மனச்சிதைவு (Schizophrenia)

*அச்சம், கவலை, இழப்புப் போன்றவற்றால் வெகுவாகப் பாதிக்கப்பட்டவர்கள் இம்மனச் சிதைவு நோய்க்கு ஆளாகின்றனர். சில வேளைகளில் தன்னிலை இழந்து திரிதலும் உண்டு. சிந்தனை, செயல், உணர்வு ஆகியவற்றின் தொடர்பற்றுப் போய்விடுதலும், இயல்பு வாழ்க்கையிலிருந்து விலகிவிடுதலும்உண்டு.*

*தன் மனத்துள் ஏதோ ஒன்றினை நினைத்துக் கலங்கிக் கண்ணீர்விட்டு, நாணிழந்து பலரறிய வரும் தலைவி ஒருத்தியின் உள்ளம் பேதலித்த நிலையினை,*

***நன்னுதால் காண்டை நினையா நெடிதுயிரா***
***என்னுற்றாள் கொல்லோ இஃதொருதி பன்மாண்***
***நகுதருந்தன் நாணுக் கைவிட்டிகுதருங்கண்ணீர்***
***துடையாக் கவிழ்ந்து நிலனோக்கி அன்னஇடும்பை***
***பலசெய்து தன்னை வினவுவார்க் கேதில சொல்லிக்***
***கனவுபோல் தெருளும் மருளும் மயங்குவருபவள்***[98]

*எனும் கலித்தொகைப் பாடல் வழி அறியமுடிகிறது. சங்க இலக்கிய அகப்பாடல் ஏதேனும் ஓர் உளவியல் கூற உடையதாக காணப்படுவதைப் பாடல்களை ஆராய்வதன் வழி அறியலாம்.*

### சித்தர் பாடல்கள்

*நமது முன்னோர்கள் விட்டுச் சென்ற ஆன்மீகச் செல்வங்கள் அனைத்தும் நுட்பமான மனவியல் ஆய்வுகள் ஆகும். தமிழ் மண்ணுக்கு*

உரிமையுடைய சித்தர்களின் பாடல்கள் ஆன்மீகப் பெட்டகங்களுக்குள் அடங்கும் மனவியல் நூல்களாகும்.

திருமந்திரத்தின் இரண்டாம் தந்திரத்திலுள்ள 14வது அதிகாரம், 39வது பாடல் ஆண், பெண்ணின் உயிர் அணுக்கள் எவ்வாறு கலந்து ஒன்றி குழந்தை உருவாகிறது என்பதை விளக்குகிறது.

திருமூலர் உடலியல் அறிவியல், உளவியல், பாலியல் போன்றவற்றின் தன்மைகளை அறிந்த அறிஞராகத் திகழ்கிறார். அவரது பாடல் ஒன்று அதற்குச் சிறந்த சான்றாகத் திகழ்கிறது.

**'விழுந்தது லிங்கம், விரிந்தது யோனி**
**ஒழிந்த முதல் ஐந்தும்'**
**'பூவுடன் மொட்டும் பொருந்த அலர்ந்தபின்**
**காவுடன் தீபம்(கரு) கலந்து பிறக்கும்**
**'புருடன் உடலில் பொருந்துமற்று ஓரார்**
**திருவின் கருக்குழி தேடிப்புகுந்து**
**உருவம் இரண்டாக ஓடிவிழுந்தது'**[100]

பூவுடன் மொட்டாகப் பெண்ணும், ஆணும் கலந்த பொழுது பெண்ணின் கருக்குழியைத் தேடிப்புகுந்து ஆணினது அணுவின் மூலம் இரண்டாக (பாலினக் கீற்றுகள்) ஓடி விழந்தது என்ற திருமூலரின் கருத்தை இன்றைய அறிவியலும் ஒப்புகிறது![101]

சித்தர்கள் மனத்தைப் பற்றி இழிவான எண்ணங்களைக் கொண்டிருந்தனர். இதற்குப் பெண் மோகமும், மோகத்திரிபுகளும் உடைய அவர்களது பாடல்கள் பல சான்றாக இருக்கின்றன.

சித்தர்களால் கூறப்பட்ட சித்த விருத்திகள் அனைத்தும் மனம் தொடர்புடையன. அவற்றுள் காமம், மோகம், வேட்கை, அகங்காரம்,

போன்றவை உளவியல் கூறகளாக அமைந்திருப்பதால் சித்தர்களின் உளவியல் அறிவினை அறியமுடிகிறது. அவற்றைப் பின் வருவனவற்றால் அறியலாம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | காமம் | - | இச்சை, பொருள், செல்வம் இவற்றை மேன்மேலும் தேடும் தன்மை |
| 2. | குரோதம் | - | சினம், பூசல் |
| 3. | உலோபம் | - | ஈயாமை |
| 4. | மோகம் | - | தான் தேடிய பொருள் மீதுள்ள மிகை விருப்பம் |
| 5. | மதம் | - | செருக்கு, கருவம் |
| 6. | மாற்சரியம் | - | பொறாமை |
| 7. | இடும்பை | - | அவமதிப்பு, உதாசீனம், துன்பம் தருதல் |
| 8. | வேட்கை | - | பல திறந்த நசை என்னும் ஆசை |
| 9. | ஈரிடை | - | நமக்குற்ற துன்பம் பிறருக்கும் வரவேண்டும் என்னும் ஒருவகைப் பொறாமை |
| 10. | தர்ப்பம் | - | தன்னையே உயர்த்திப் பேசும் இயல்பு |
| 11. | இராகம் | - | பிறன் மனைநயத்தல், பலமணம் புரிதல் |
| 12. | துவேஷம் | - | பிறர் செய்த தீமை கருதி அது போன்றதை அவர்க்குத் தானும் செய்யும் தன்மை |
| 13. | இடம்பம் | - | பிறர்கண்டு புகழுமாறு பொருந்தாதளிக்கும் தானம் முதலியன |
| 14. | அகங்காரம் | - | தானெனும் அகந்தை |

இப்பதினான்கும் நசித்தாற் பிறப்பும் நசியும்[102] என்பர் சித்தர்.

வினைகளை நீக்கும் வழிமுறைகளாகச் சித்தர்கள் நான்கினைக் கூறுவர். அவை, சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகும்.

| | | |
|---|---|---|
| சரியை | - | மண்ணுயிரைத் தன்னுயிர்போல் எண்ணுதல் |
| கிரியை | - | குருமொழி தப்பாதிருப்பது |
| யோகம் | - | மனம் ஒடுங்குவது |
| ஞானம் | - | எப்பொழுதும் தற்பரமாய் நிற்பது |

இவற்றுள் யோகம் எனப்படும் மனம் ஒடுங்குவது, உளவியல் அடிப்படையாகும்.[103] மேலும் சித்தர்களின் பாடல்கள் மனம் குறித்த சிந்தனையையும் அவற்றின் செயல்பாடுகளையும் உள்ளடக்கியதாக இருப்பதை அறியலாம்.

## பிராய்டும் திருவள்ளுவரும்

திருவள்ளுவர், மனநலம் (Mental health) பற்றிச் சிந்தித்த தமிழறிஞராகத் திகழ்கிறார். இவர் பற்றறிவு (Empirical) உற்றுநோக்கல் (டீளெநசஎயவழைே) முறையில் கருத்துக்களை வழங்கியவர். குறளில் பெரும்பாலும் அபௌதிகக் (Mataphysics) கருத்துக்கள் காணப்படுகின்றன. நவீன உளவியல் தொடர்பானவை (Modern Psychology) பற்றிச் சில குறள்களும் இடம்பெற்றுள்ளன.

'இன்பத்துள் இன்பம் விழையாதான்' என வரும் குறள் நெறிப்படுத்துதல் (Counselling) தன்மையையும், கனவினால் உண்டாகும் காமம், 'யாதனின் யாதனின் நீங்கியான்', 'எண்ணிய எண்ணியாங்கு எய்துப' என வரும் குறள்களில் நீட்சேவின் (Nietzsche) சாயலையும் காணமுடிகிறது. ஐரோப்பியத் தத்துவங்களோடு திருக்குறளை ஒப்பிட்டுத் தனிநூலே எழுதலாம். தத்துவ உலகில் வள்ளுவருக்கு தனி இடம் தராதது வியப்பிற்குரியது'[104] என்பார் தி.கு. இரவிச்சந்திரன்.

உளவியல் அறிஞரான பிராய்டு, வள்ளுவத்தைக் கற்காமலேயே, வள்ளுவரின் உளக்கருத்துக்கு ஏற்ப, உளவியல் கூற்றை எடுத்துரைத்துள்ளார் எனின், வள்ளுவரின் உளவியல் அறிவு வளர்ச்சி வியக்கத்தக்கதாகும்.

'Barly libidila excitement may under go displacement to eyes and other parts of the mouth. The tender love is looking and being and being looked at is part of initial love making'[105] எனும் பிராய்டியக் கருத்தும், வள்ளுவரின் இன்பத்துப் பாலில் குறிப்பறிதல் அதிகாரத்தில்,

**'பெண்ணினால் பெண்மை உடைத்து என்ப கண்ணினால்**
**காமநோய் சொல்லி இரவு'[106]**

எனவரும் குறளின் கருத்தும், ஒப்புமையுடையதாயிருத்தலின் பிராய்டுக்கு முன்னே உளவியல், பாலியல் உணர்வு குறித்து அறிந்த அறிஞரான வள்ளுவர் ஒருவரே இருப்பது சிறப்பாகும்.[107] எனும் கருத்து இணைத்தறியத்தக்கதாகும்.

மனிதனின் வளர்ச்சி, அறிவை அடிப்படையாகக் கொண்டதாகும். நல்லறிவு உடையார் என்பது மனத்தில் சிறந்து உயர்ந்தாரைக் குறிப்பதாகும்.

**மனநலம் மண்ணுயிர்க் காக்கம் இனநலம்**
**எல்லாப் புகழும் தரும்[108]**

எனத் திருவள்ளுவர் மனநலத்தைச் சிறப்பிப்பார். மனநலம் இழந்த ஒருவனை மனிதனாக யாரும் மதிப்பதில்லை. மனிதனுக்கு மனமே சிறப்புடையது என்று கருதிய முன்னோர்கள் மனம், வாக்கு, காரியம் என்பனவற்றுள், 'மனத்தை' முதன்மையாக வைத்துச் சிறப்பித்தனர்.

அவ்விய நெஞ்சம் எனும் சொல்லுக்கு எதிரிணை - செவ்விய நெஞ்சம் என்பதாகும். செவ்விய நெஞ்சம் என்றால் மனச்செம்மை உடையவன் எனப் பொருள்படும். அவ்வியான் வாய்ச்செம்மையிலாதவன் என மனத்துள் இருவகையினரை அவ்விய, செவ்விய என இருவகைப்படுத்துவார் வள்ளுவர்.

**அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்**
**கேடும் நினைக்கப் படும்[109]**

எனும் குறள்வழி, மனச்செம்மையின் தன்மையை அறியலாம்.

*கனவு நிலை உரைத்தல் எனும் அதிகாரத்தில் இடம் பெற்றள்ள,*

***கனவினான் உண்டாகும் காமம் நனவினான்***

***நல்லாரைத் நாடித் தற்கு***[110]

*இக்குறட்பாவானது பிராய்டியக் கனவுக் கோட்பாட்டின் சுருக்கமாகக் காணப்படுகிறது.*

*மனம் துயர்உறும்போது நாள இயக்கு நரம்புகள்* (Vasco motor apparatus), *இயக்குதசை உறுப்புகள்* (Voluntary Motor apparatus) *என்னும் இரண்டினுள் இயக்குதசை உறுப்புகள் செயலிழந்து காணப்படுகின்றன. ஆனால் அதற்கு நேர்மாறாக இரத்தக்குழாய் தசைகள் இயல்புக்கு அதிகமாகச் சுருங்குகின்றன. அதனால் உடலில் உள்ள திசுக்களும், உறுப்புகளும், இரத்தச் சோகையுடன் காணப்படுகின்றன. இதன் விளைவாகத் தோல் சுருங்குகிறது அல்லது வெளுக்கிறது. இதுவே பசலை எனப்படும்*[111] *எனும் உளவியல் அறிஞரின் உளக்கோட்பாட்டுக்கு வள்ளுவரின் குறள் சான்றாக அமைந்திருப்பது சிறப்பாகும். இதனை,*

***உவக்காண் காதலர் செல்வார் இவக்காண் என்***

***என்மேனிப் பசப் பூர்வது***[112]

*எனும் குறள்வழி அறியலாம். பசப்பூர்தல் என்பது உடம்பின் நிறமாற்றம் எனப்படும் ஒருவித பசலை நோயாகும். பிராய்டிய உளவியல் கோட்பாடுகளுக்கு இணையாக வள்ளுவரின் குறட்பாக்கள் திகழ்கின்றன என்பதை அறியமுடிகிறது.*

**உளவியலும், ஒடிப்பசு மனச்சிக்கலும், புதினமும்**

*தமிழ் மொழியின் முதல் புதினமான பிரதாப முதலியார் சரித்திரம் வெளிவந்து நூற்றாண்டுகளுக்கு மேலாகிறது. இந்தக் கட்டத்தில் தமிழ்*

நாவல் உருவத்திலும் (Form), உள்ளடக்கத்திலும் (Content), உத்தியிலும் (Technique) வளர்ச்சி அடைந்திருக்கிறது. புதின எழுத்தாளர் மு.வ. இளைஞர்களிடையே நிலவிவந்த பாலியல் சிக்கல் மையப்படுத்திப் படைப்பை உருவாக்க வேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டுள்ளமையை அவரது படைப்புகள் வழி அறியமுடிகிறது.

'பாலியலை நான் வாழ்க்கையின் மையப்பிரச்சினையாகக் கருதுகிறேன். வருங்காலப் பரம்பரையினர் முன் அது தீர்வு காணவேண்டிய தலையாயச் சிக்கலாக நிற்கிறது'[113] என்பார் மு.வ.

புதின எழுத்தாளர் தி. ஜானகிராமனுக்கு முன்பே உளவியல் பார்வையைப் புதினங்களில் புகுத்திய பெருமை மாதவைய்யாவைச் சாரும். மாதவைய்யாவின் பத்மாவதி சரித்திரம் உளவியலின்பிறழ்நிலை உளவியலை அடிப்படையாகக் கொண்ட புதினமாகும். யாரும் பார்க்கும் போது விவரிக்காத விசயங்களைத் துணிந்து மாதவையா கையாண்டுள்ளதன் காரணம் ஆங்கில நூல்களைக் கற்றதனால் உண்டான பயன்'[114] எனக் கூறுகிறார் க. கைலாசபதி.

இக்கூற்றின் வழி, பிறழ்நிலை உளவியல் கூறுகளைத் தமிழ்ப் புதின உலகம் ஏற்றுக் கொள்ள ஆங்கில நூல்கள் அடிப்படையாக இருந்துள்ளமையை அறியமுடிகிறது.

உளவியலின் ஒரு கூறாக ஒடிப்பசு மனச்சிக்கல் ஏற்கத்தக்கதன்று எனப் பலரால் எதிர்க்கப்பட்டாலும், உலகெங்கிலுமுள்ள எழுத்தாளர்களுக்கு ஒடிப்பசு மனச்சிக்கல் பயனளித்தது. ஒடிப்பசு படைத்ததால் இருவகையில் ஆதாயம் பெற்றனர். முதலில், புதினத்திற்கான கருப்பொருளைத் தேடியலைய வேண்டாம். இரண்டாவதாக, புதுமையைத் தேடியலையும்

வாசகர்களை எளிதில் நிறைவுபடுத்திவிடலாம் எனும் கருத்து தொடக்கக் காலத்தில் நிலவியது. ஒடிப்பஸ் சிக்கல் புதினங்களில் இடம்பெறுவது குறித்து அறிஞர்கள் காப்பலன் மற்றும் கிளாஸ் ஆகியோர் கருத்துக்களைப் பின்வருமாறு வலியுறுத்துகின்றனர் சிட்டி, சிவபாதசுந்தரம்.

'ஒடிப்பசு மனச்சிக்கலை விளக்கும் சூழ்நிலைகள் எண்ணிலடங்காப் புதினங்களில் உருவமைக்கப்பட்டு வருகின்றன. ஆனால், இம்மனச்சிக்கலை முறையாக விளக்கும் புதினங்களாகத் திறனாய்வாளர் சுட்டிக்காட்டத்தக்க வகையில் மிகச் சிலவே அமைந்துள்ளன. பெரும்பாலானவர்களுக்கு முதிர்ந்த பருவத்து நோக்கங்கள் குழந்தைப் பருவ விழைவுகளைக்காட்டிலும் மேலோங்கி நிற்கின்றன. நம்மில் பெரும்பாலோரிடமும் முதிர்ச்சியுறாச் சிந்தனை ஓரளவு காணப்பட்டாலும் மனிதர்கள் நனவு நிலையிலான விருப்பங்களின் அடிப்படையில் பொருள் பொதிந்த வகையில் மாறுபட்டு விளங்குகிறார்கள். புதினங்களில் ஒடிப்பசுக் கூறுகள் கதையை இயக்கம் போதுதான் திறனாய்வுச் சிறப்பைப் பெறுகின்றன. சுருங்கக் கூறினால் ஒரு படைப்பு புதிர்மிக்கதாக அமைந்து அப்புதிரை விடுவதற்குரிய ஒரே தீர்வாக ஒடிப்பசு மனச்சிக்கல் அமையுமாயின் அப்படைப்பு உளவியற் பகுப்பாய்வு அணுகுமுறையைச் செம்மையாகப் பின்பற்றியுள்ளதாகக் கொள்ளலாம்'[115]. இக்கூற்று இங்கு இணைத்தறியத்தக்கதாகும்.

**உளவியலும் புதினமும்**

உளவியற் சிக்கல்களை விளக்குவதற்குக் கவிதையை விடப் புதினம் மிகவும் பயன்படுகிறது. உளவியல் மனச்சிதைவு எனும் உளநோயையும், அதன் வகைகளையும் எடுத்துரைக்கிறது. ஆனால் மனச்சிதைவு பற்றைய பருப்பொருண்மையான தெரிவு, மனச்சிதைவுடைய மாந்தரைப் பாப்பதாலும் அவரோடு பழகுவதாலும் மட்டும் ஏற்படும்.

ஆங்கிலக் கல்வியின் பயனாக, இக்கால இலக்கியங்களில் பிராய்டியத்தின் தாக்கம் காணப்படுகிறது. ‘பிராய்டியத்தின் தாக்கம்’ என்ற போர்வையில் வரம்பிகந்த பாலுணர்வை வெளிப்படுத்தும் நிலையும் இன்று பெருகியுள்ளது. இதனை,

‘சமீப காலமாகத் தமிழ் நாவல்களில் பாலுணர்ச்சியும், அந்த உணர்ச்சியின் அடிப்படைகளை விளக்கும் உளவியற் பகுப்பாய்வு முறையும் சிலரால் அதிகமாகக் கையாளப்படுவதைக் பார்க்கிறோம். ஒரு பெண்ணின் அங்க அமைப்பு மட்டும்தான் பாலுணர்ச்சியின் வெளியீடு என்ற தப்பான எண்ணம், முதிர்ச்சியடையாத சில எழுத்தாளர்களிடையே நிலவுகிறது. இந்த உணர்ச்சி பற்றியும் ஆண், பெண் உடலுறவு பற்றியும் சாதாரணமாய் வழங்கப்படாத சொற்களைப் பிரயோகித்து வருணித்து விடுவது ஓர் இலக்கியப் புரட்சியென்றும் இவர்கள் நினைக்கிறார்கள். தமிழில் சிந்தாமணி, இராமாயணம், முதலிய காவியங்களிலும் கூளப்ப நாயக்கன் காதல், விறலிவிடுதூது போன்ற பிற்காலப் பிரபந்தங்களிலும் காணப்படும் வருணனைகளைவிட, இன்றைய துணிச்சலான எழுத்தாளர்கள் இந்த அகத்துறையில் புதிதாகவோ, புரட்சியாகவோ ஒன்றையும் சாதித்துவிடவில்லை. இவ்வகையில் மேனாட்டு எழுத்தாளர் சிலரைப் பின்பற்றி ஏதோ புதுமையைப் புகுத்திவிட்டதாக இவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், பிராய்டும், யூங்கும் எடுத்துச் சொன்ன விஞ்ஞான ரீதியான முடிவுகளை மேல்நாட்டு நிபுணர்களே முற்றிலும் விளங்கிக் கொள்ளாத நிலையில் நமது நாவலாசிரியர்கள் உணர்ந்துவிட்டார்கள் என்பது ஆச்சரியம் தான்’[116] என்கின்றனர் திறனாய்வாளர்கள் சிட்டி, சிவபாத சுந்தரம்.

ஆனால் பிராய்டியத் தாக்கம் குறித்த மற்றொரு மக்கத்தை தோதாத்ரி விளக்குகிறார். ‘பிராய்டியத்தின் தாக்கம் தமிழ் இலக்கியத்தில் வலுவாக உள்ளது. ‘தற்காலத் தமிழ் இலக்கியத்தில் எல்லாத் துறைகளிலும், அதன் தாக்கத்தைக் காணலாம். குறிப்பாக 1960ம் ஆண்டுகளுக்குப் பின்பு, அதன் தாக்கம் அதிகமாகவே உள்ளது. காரணம் 1947க்குப் பின் ஏற்பட்ட சமூக மாற்றங்கள் ஆகும். விடுதலைக்கு முன் வெள்ளையர்களை விரட்ட, நிலப்பிரபுக்கள், தேசிய முதலாளிகள், உழைப்பாளிகள் போன்றோர் ஓர் இயக்கமாக நின்று தம் ஆளுமையை வெளிப்படுத்தினர். உலகப் போரினால் ஏற்பட்ட அதிர்ச்சி, பொருளாதாரத் தேக்கநிலை ஆகியன இந்தியாவைப் பாதித்தன. விடுதலைக்குப் பின் கட்டுக்கோப்புகள் சிதைந்தன. பழைய சமூகத்தின் மதிப்புகள், நம்பிக்கைகள், இராமாயணம், புராணங்கள், தத்துவங்கள் போன்றனவும் புறக்கணிக்கப்பட்டு கேள்விகளுக்கும், கேலிக்கும் உள்ளாயின. இச்சூழலே தனிநபர் கோட்பாடு உருவாக நல்ல பின்புலமாக இருந்தது. 1950களுக்குப் பின் தனி நபர்களின் வளர்ச்சி வலுப்பெற்றது. இச்சூழல் பிராய்டிசக் கருத்துக்களைத் தமிழ் இலக்கிய உலகில் பயன்படுத்த வசதியாயிற்று. தற்காலத் தமிழ்ப் படைப்பாளிகளில் பலர் இதை ஏற்றுக் கொள்ள மறுத்தாலும், பிராய்டிசத்தின் தாக்கம் அவர்களிடைய இருப்பதை உணரமுடிகிறது’[117] எனக் கூறுகிறார்.

## புதினங்களில் உளவியலைக் கையாண்டுள்ள எழுத்தாளர்கள்

மனித மனத்தின் வெளிப்பாடுகளை வெளிக்கொணர வேண்டும் எனும் போக்கு எழுத்தாளர் ராஜம் ஐயரின் காலத்தில் தோன்றியது. ஆனால், மனச்சிதைவுகளைப் பால் உறவுடன் இணைத்துக் காணும் போக்கு 1950 ஆம் ஆண்டிற்குப் பின்னர்தான் ஏற்பட்டுள்ளது. ‘மணிக்கொடி’ எழுத்தாளர்களில் பலர் சாதாரண மன நிகழ்வுகளையும், சிந்தனை

ஓட்டங்களையும், நுணுக்கமாகச் சித்தரித்தனர். அவர்களில் அகவயமான உணர்வுகளை வெளிப்படுத்தபவர்களும், புதுமைப்பித்தன் போலப் புறவயமாகக் காண்பவர்களும் உண்டு. பால் உறவு என்பது பற்றிப் பேசுவதற்கும் எழுதுவதற்கும் சமூகத்தடைகள் அதிகமாக இருந்த காலத்தில், மணிக்கொடி எழுத்தாளர்களிடம், அதை இயல்பான நிகழ்ச்சியாகக் காணும் போக்கே அதிகமாக இடம்பெற்றுள்ளது.

விடுதலைக்குப் பின்னர், நாவல் இலக்கியத்தில் சமூக வளர்ச்சி தடையின்றி ஏற்படும்பொழுது, சமூக அமைப்புகள் நெருக்கடிக்குள்ளாகும் பொழுது பிராய்டிசம் ஒரு வாழ்க்கை விளக்கமாகத் தமிழ் நாவலில் இடம்பெறுவது தவிர்க்க முடியாததாகிறது. மேல நாட்டு இலக்கியங்களில் உள்ள அளவிற்குப் பிராய்டின் அனைத்துக் கோட்பாடுகளம் இலக்கியப் படைப்பாளிகளால் எடுத்தாளப்படவில்லை. தமிழக பண்பாட்டுச் சூழலுக்கு ஏற்ப பிராய்டின் கோட்பாடுகள் தமிழ் நாவலில் இடம் பெறலாயிற்று.

‘தமிழ் நாவல்களில் பிராய்டின் கருத்துக்களைக் கையாண்டவர்களாக இந்திரா பார்த்தசாரதி, கிருத்திகா, ஜெயகாந்தன், ராஜம் கிருஷ்ணன் ஆகிய படைப்பாளிகளைக் குறிப்பிடலாம். இவர்களிடம் இதுதவிர, யதார்த்தவாதம், எஸ்சிஸ்டென்ஷியலிசம், இயல்பு நெறி, பிராய்டிசம் போன்ற போக்குகளையும் காணமுடிகிறது’[118] எனும் கூற்று சிந்திக்கத்தக்கதாகும்.

கிருத்திகாவின் ‘வாஸ்பேச்சுரம்’, ‘புதிய கோடங்கி’ ஆகிய படைப்புகளிலும் இந்திரா பார்த்தசாரதியின் ‘வேஷங்கள்’, ‘மனக்குகை’, ‘மழை’ போன்ற படைப்புகளிலும் பிராய்டிசக் கருத்துக்கள் கையாளப்பட்டுள்ளன.

‘பிராய்டிசம்’ இந்திய வடிவம் பெறுவதை ஜெயகாந்தனிடம் காணமுடிகிறது. பிராய்டிசக் கருத்துக்களின் தாக்கத்தைக் கலை நுட்பமுறையில் சித்தரிப்பதில் வெற்றிக் கண்டவர் ஜெயகாந்தன் ஆவார். அவரது படைப்பான ‘ரிஷிமூலம்’ இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

ஜெயகாந்தனின் பிந்தைய நாவல்கள் மனநோயாளிகளின் உறைவிடம் போல் காட்சியளிக்கின்றன. நரம்பு நோயாளிகளும், பிறழ்நிலைப் பிறவிகளும் மிக அதிகமாகக் காட்சி தருகின்றனர்.

‘கோகிலா என்ன செய்துவிட்டாள்’, அனந்தராமன் ‘ரிஷிமூலம்’, ராஜாராமன் ‘ஓர் அப்நார்மல் மனிதன்’[119] எனத் தோதாத்திரி, ஜெயகாந்தனின் பாத்திரங்களைத் திறனாய்ந்து கூறியுள்ளார்.

லா.ச.ராவின் ‘அபிதா’ புதினத்தின் கதாநாயகன் அம்பி மனநேயாளியாகச் சித்தரிக்கப்பட்டுள்ளான்.

புதினங்களில் கூறப்பட்டுள்ள உளவியற் சிக்கல்களைத் தக்க உளவியல் விளக்கங்களுடன் எடுத்துரைப்பது இலக்கியம் படைப்போர்க்கும், படிப்போர்க்கும் பெருந்துணை புரியும். ‘மற்றவர்கள்’ எனும் புதினத்தில் குடிகாரர்களுக்கு ஏற்படும் இல்பொருள் காட்சிகளையும் (Hallucinations) திரிபுணர்சசிகளையும் எடுத்துக்காட்டுகிறார் லாச.ரா.

மு.வ.வின் புதினங்களில் ‘ஓடிப்போதல்’ அல்லது ‘காணாமல் போதல்’ எனும் நிகழ்ச்சி முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. காரணம் மு.வ.வின் இளவயது மனச்சிதைவு பதிவாக அமைந்துள்ளதைக் காணலாம்.

மு.வ. வின் ‘கள்ளோ காவியமோ’ நாவலில் வரும் மங்கை எனும் தலைவியின் மனதில் நிகழும் உணர்ச்சிப் போராட்டம், உளச்சிக்கல்

*ஆகியனவற்றையும் சான்றாகக் கூறலாம். மு.வ.வின் 'கயமை' எனும் புதினம் உளவியலின்கூறுகளைக் கொண்டுள்ளது. சிவசங்கரியின் 'ஒரு மனிதனின் கதை', இந்துமதியின் 'பைசா நகரத்துச் சாய்ந்த கோபுரம்' போன்றன பிராய்டின் உளவியல் கருத்துக்களைக் கொண்ட புதினங்களாகும். தி. ஜானகிராமனின்'மோகமுள்', 'அம்மா வந்தாள்' போன்ற புதினங்களில் பிராய்டின் பாலியல் கொள்கை சிற்சில மாற்றங்களோடு வெளிப்படுகிறது.*

## புதுக்கவிதை

*புதுக்கவிதை, ஹைக்கூ கவிதை போன்றவற்றிலும் பிராய்டின் தாக்கம் அதிகமாகக் காணப்படுகிறது. இன்றைய புதுக்கவிஞர்களுள் சிலர் சமூகம் பற்றிச் சிறிதும் சிந்தியாமல், பாலியல் புனைவுகளைக் கொண்ட புதுக்கவிதைகளையும் திரைப்படப் பாடல்களையும் படைக்கின்றனர்.*

***'சொல்கிறார்கள்***
***எழுத்திலே கூடாதம்***
***பாலுணர்ச்சி கூடினால்***
***பச்சையாம்'***[121]

*எனம் புதுக்கவிதை இதற்குச் சான்றாம். இவ்வாறாகத் தொல்காப்பியர் காலம் தொட்டு இன்று வரையிலும் உள்ள படைப்புகளில் உளவியல் எனும் அறிவியலின்கூறுகள் பல காணக்கிடைக்கின்றன. படைப்பாளிகளின் உளவியல் பாதிப்பும் படைப்பின் வழி வெளிப்படும் தன்மையனவாதலால் தமிழ்ப்படைப்புகள் அனைத்தையும் உளவியல் வழி நின்று திறனாய்வு செய்ய இயலும்.*

## தொகுப்புரை

*ஆன்மா அல்லது ஆவி எனப்படும்* Psyche *எனும் சொல்லே சைக்காலஜி* Psychology *என ஆங்கிலத்திலும், உளவியல், மனோதத்துவம்*

*எனத் தமிழிலும் வழங்கப்பட்டு வருகிறது. மனம் அல்லது உள்ளம் குறித்த சிந்தனையை தெக்கார்தே எனும் பிரெஞ்சு அறிஞர் (1596 - 1650) முதன் முதலில் தம் நூல்களில் பயன்படுத்தியுள்ளார்.*

*தற்கால உளவியலாளகள் உடல் சார்ந்த தேவைகளான கூடிவாழ்தல், அன்பு, வெற்றி பெறல் போன்ற தேவைகளை எடுத்துக்காட்டியுள்ளனர்.*

*உளவியல் துறையானது சிக்மண்ட் பிராய்டு, கார்ல் யுங், ஆட்லர் எனும் மூவரையும் மும்மூர்த்திகள் எனக் குறிப்பிடும்.*

*உள்ள முறிவு, உள்ளப் போராட்டம், உள்ள இறுக்கம் போன்றவை உளநோய் பொருத்தப்பாட்டுச் சிக்கல்களாகும். இவையே மனித வாழ்வைச் சீர்குலைக்கும் சக்திகளாகும்.*

*தற்காப்புக் கவசங்கள், வாழ்வில் ஏற்படும் உளம் பொருந்தாச் சூழல்களை வெற்றி கொள்ள வைக்கும் தன்மையை உடையன.*

*இன்றைய இலக்கிய ஆய்வுகளக்கான கோட்பாடுகளில் பிராய்டியக் கோட்பாடு சிறந்ததாக விளங்குகிறது.*

*ஒருவனது மனத்தை ஆய்வதை விடுத்து அவனது தோற்றம், நடத்தை குறித்து ஆய்வது ஆளுமை என்றழைக்கப்பட்டது.*

*ஆளுமையானது மனித வளர் பருவங்களை அடிப்படையாக் கொண்டு, வாய் இன்பப் பருவம், ஆசனவாய் இன்பப்பருவம், உள்ளுறை இன்பப் பருவம், பால் இன்பப் பருவம் என்பனவற்றை உள்ளடக்கியதாக உள்ளது.*

*சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்னதான வரலாற்றைக் கொண்டதாக இந்திய உளவியல் வரலாறு தொடங்கியுள்ளது.*

*பழைய ஏற்பாட்டில், ஹேமரின் நூல்களிலும் பிறழ்வு உளநிகழ்ச்சிகள் வெளிப்பட்டுள்ளன.*

*தமிழ் இலக்கியங்களில் தொன்னூலான தொல்காப்பியம் ஆறறிவுயிர், மனம் பற்றிய செய்திகளைக் கொண்டுள்ளது. பொருளதிகார மெய்ப்பாட்டியல், ஆளுமைத் தன்மையையும், உளத்தன்மையையும் எடுத்துக் காட்டுகிறது. திருவள்ளுவர் மனநலம் குறித்த சிந்தனையை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் பதிவு செய்த அறிஞர் எனப் போற்றப்படுகிறார்.*

*சங்க இலக்கியங்கள் அனைத்தும் உளவியல் கூறுகள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டதாக விளங்குகின்றன.*

*சித்தர்களின் பல பாடல்கள், மனம், உடம்பு, தொடர்புடையனவாகவும், அறிவியல் கூறுகள் பலவற்றைக் கொண்டனவாகவும் விளங்கின்றன.*

*புதின இலக்கிய வகையும், புதுக்கவிதையும் மனிதனின் ஆளுமைத் தன்மையை வெளிப்படுத்தும் விதமாக அமைந்துள்ளன.*

*மனிதன் தோன்றி, அறிவு வளர்ச்சி பெறத் தொடங்கிய காலந்தொட்டு, இன்று வரையிலும் உளவியல் என்பது மனித வாழ்வின் ஓர் அங்கமாக விளங்கி, இன்ப, துன்ப நிகழ்வுகளுக்கும், நடத்தைகளுக்கும் அடிப்படைக் காரணமாக விளங்கியுள்ளமையை அறிந்து கொள்ள முடிகிறது.*

# இயல் 1

## குறிப்புகள்

1. *ஸ்ரீனிவாச ராமலிங்கம், பயன் தரும் மனோதத்துவம், ப. 10.*
2. *மு. இராசமாணிக்கம், உளவியல் துறைகள், தொகுதி 1 & 2, ப. 2.*
3. B.C. Bhatia & Miss Margarette Graid, Elements of Psychology, p. 69.
4. *ஸ்ரீனிவாச ராமலிங்கம், பயன் தரும் மனோதத்துவம், ப. 16.*
5. *தா.ஏ. சண்முகம் (க.ஆ), கு. பகவதி, (ப.ஆ), திறனாய்வு அணுகுமுறைகள், ப. 92.*
6. *மு. இராசமாணிக்கம், உளவியல், தொகுதி 1, ப. 3.*
7. *மேலது, ப. 3.*
8. *மேலது, ப. 3.*
9. *தா.ஏ. சண்முகம் (க.ஆ), கு. பகவதி, (ப.ஆ), திறனாய்வு அணுகுமுறைகள், ப. 92.*
10. *செ. இலக்குவன், உளவியல் நிபுணர் கையேடு, ப. 14.*
11. *அ.நா. பெருமாள் (க.ஆ), கு. பகவதி (ப.ஆ), திறனாய்வு அணுகுமுறைகள், ப. 101.*
12. *மேலது, ப. 103.*
13. *மேலது, ப. 104.*
14. *மேலது, ப. 105.*
15. *மேலது, ப. 111.*
16. *மேலது, ப. 111.*
17. *மேலது, ப. 111.*
18. *ஜி.டி. போவாஸ், சு. வரதராஜுலு (மொ.ஆ), பொது உளவியல், ப. 45.*
19. *அ.நா. பெருமாள் (க.ஆ), கு. பகவதி (ப.ஆ), திறனாய்வு அணுகுமுறைகள், ப. 111.*
20. *மேலது, ப. 102.*

21. தா.ஏ. சண்முகம் (க.ஆ), கு. பகவதி, (ப.ஆ), திறனாய்வு அணுகுமுறைகள், ப. 102.

22. மேலது, ப. 92,

23. மேலது, ப. 93.

24. தி.கு. இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃபிராய்டு, உளப்பகுப்பாய்வு அறிவியல், ப. 60.

25. தா.ஏ. சண்முகம் (க.ஆ), கு. பகவதி, (ப.ஆ), திறனாய்வு அணுகுமுறைகள், பக். 92- 93.

26. மேலது, பக். 92-93.

27. மேலது, ப. 93.

28. மேலது, பக். 95 - 96.

29. செ. இலக்குவன், மனச்சிறகை விரித்து, ப. 14.

30. ஜேம்ஸ் டி.பேஜ், பிறழ்நிலை உளவியல், ப. 13.

31. மேலது, ப. 4.

32. செ. இலக்குவன், மனச்சிறகை விரித்து, ப. 84.

33. மேலது

34. து. சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப. 1.

35. Norman Alexander Camenon, Abnormal Psychology Encylopedia Britannica, Vol. 18, p. 749.

36. ஆர்.ஐ. பெட்போர்டு, மனமிடிதல், கலைக்களஞ்சியம், தொகுதி 8, ப. 198.

37. James C, Coleman, Psychology and Effective Behaviour, p. 176.

38. மேலது, ப. 176.

39. ஜேம்.டி.பேஜ், பிறழ்நிலை உளவியல், ப. 40.

40. தா.ஏ. சண்முகம், உள்ளப் போராட்டம், கலைக்களஞ்சியம், தொகுதி 10, ப. 134.

41. James C, Coleman, Psychology and Effective Behaviour, p. 201.

42. James C, Coleman, Psychology and Effective Behaviour, p. 201.

43. முனிர் அஹமத் பருக்கி, உளத்தற்காப்பு இயங்குமுறைகள், கலைக்களஞ்சியம், தொகுதி 10, ப. 306.

44. Anna Freud, Defence Mechanism Encyclopedia, Britannica, Vol. 7, p. 171.

45. C.B. Holling Worth, 'Ademaline', The Key to your behaviour, p. 136.

46. Britannica Encyclopedia, vol. 7, p. 171.

47. எஸ்.பி. ஆதிநாராயணன், மனித உள்ளம், கலைக்களஞ்சியம், தொகுதி. 10, ப. 291.

48. மு. இராசமாணிக்கம், உளவியல் துறைகள், தொகுதி 2, ப. 336.

49. மேலது, ப. 335.

50. Robert B. White, Robert M. Billiland, Elements of Psychology, p. 87.

51. ஜி.டி. போவாஸ், மு.நூ. தொகுதி 2, ப. 227.

52. ஆர்.ஐ. பெட்போர்டு, மனமிடிதல், கலைக்களஞ்சியம், தொகுதி ஐ, ப. 198.

53. மு. இராசமாணிக்கம், உளவியல் துறைகள், தொகுதி 2, ப. 336.

54. மேலது, ப. 87.

55. மேலது, ப. 42.

56. பெ. தூரன், அடிமனம், ப. 15.

57. மு. இராசமாணிக்கம், உளவியல் துறைகள், தொகுதி 2, ப. 339.

58. மேலது, ப. 179.

59. மேலது, ப. 83.

60. மேலது, ப. 222.

61. மேலது, ப. 340.

62. மேலது, ப. 53.

63. செ. இலக்குவன், மனச்சிறகை விரித்து, ப. 54.

64. மேலது, ப. 48.

65. மேலது, ப. 53.

66. மேலது, ப. 54.

67. தி.கு. இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப. 451.

68. செ. இலக்குவன், மனச்சிறகை விரித்து, ப. 57.

69. மேலது, ப. 59.

70. மேலது, பக். 59 - 60.

71. மேலது, ப. 60.

72. மேலது, பக். 60 - 61.

73. மேலது, ப. 61.

74. சந்திரமோகன், சிந்தனையாளர் ஃப்ராய்ட், ப. 100.

75. மேலது, ப. 101.

76. மேலது, ப. 101.

77. தா.ஏ. சணமுகம் (க.ஆ), கு. பகவதி (ப.ஆ), திறனாய்வு அணுகுமுறைகள், ப. 92.

78. மேலது, ப. 92.

79. சி.இ. மறைமலை, இலக்கியமும் உளவியலும், ப. 5.

80. மேலது, ப. 6.

81. அ. கீரீப்பர் ராஜ், பித்தரின் உலகம், ப. 15.

82. மேலது, ப. 15.

83. மேலது, ப. 15.

84. மேலது, ப. 15.

85. வாசுகண்ணன், உள்மன ஆற்றல்கள், ப. 15.

86. தொல்காப்பியம், பொருளதிகாரம் (இளம்பூரணர்), நூ. எ. 571.

87. மேலது, நூ.எ. 577.

88. மேலது, நூ.எ. 577.

89. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 43.

90. தொல்காப்பியம், பொருளதிகாரம் (இளம்பூரணர்), நூ. எ. 571.

91. மேலது, நூ.எ. 1168.

92. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 14.

93. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப. 212.

94. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 505.

95. குறுந்தொகை, ப. 366.

96. ஐங்குறுநூறு, ப. 10.

97. நற்றிணை, ப. 102.

98. கலித்தொகை, ப. 144.

99. பி.கி. சிவராமன், பாலியல் கல்வியும் சமூக விழிப்புணர்வும், ப. 14.

100. திருமூலர், திருமந்திரம், இரண்டாம் தந்திரம், அதிகாரம் 14, பா.எ.39.

101. பி.கி. சிவராமன், பாலியல் கல்வியும் சமூக விழிப்புணர்வும், ப. 14.

102. வி. பலராமையா, சித்தர் மெய்ப்பாடுகள், பக். 56 - 57.

103. மேலது, ப. 57.

104. தி.கு. இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப. 116.

105. மேலது, ப. 116.

106. திருக்குறள், 1280.

107. தி.கு. இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப. 118.

108. திருக்குறள், 457.

109. மேலது.

110. மேலது, 1214.

111. தி.கு. இரவிச்சந்திரன், சிக்மண்ட் ஃப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப. 444.

112. திருக்குறள், 1185.

113. மு.வ. இலக்கிய மரபு, ப. 66.

114. க. கைலாசபதி, தமிழ் நாவல் இலக்கியம், ப. 84.

115. சிட்டி. சிவபாதசுந்தரம், 20ம் நூற்றாண்டுத் தமிழ் நாவல்கள், ப. 32.

116. மேலது, பக். 214 - 215.

117. தோதாத்ரி, தமிழ் நாவல்கள் சில ஆய்வுகள், ப. 64.

118. மேலது, ப. 67.

119. சி.இ. மறைமலை, இலக்கியமும் உளவியலும், ப. 66.

120. மேலது, ப. 67.

121. மேலது, ப. 72.

## இயல் 2

# சங்க மருதத் திணைப் பாடல்களில் உளவியல்

*மனித உணர்வுகளையும், மனித உறவுகளையும், இயற்கைச் சூழலையும், சமூகத்தையும், அற விழுமியங்களையும் காலங்காலமாக மீறி நிலைத்திருக்கும் வகையில் சங்க இலக்கியங்கள் அமைந்துள்ளன. பழந்தமிழ் மக்களின் எண்ணச் செழுமையும், பண்பாட்டுச் சிறப்பையும் உலகம் கண்டுகொள்ள உதவும் ஒப்பற்ற கருவூலமாக விளங்குவது சங்க இலக்கியம் ஆகும்.*

### மருதம் – விளக்கம்

*மருதம் ஒரு குறிப்பிட்ட மரத்தைக் குறிக்கும் பெயராகும். இது பெரும்பாலும் ஆற்று ஓரங்களில் வளர்ந்து அடர்ந்த தண்ணிய நிழலை ஆற்றின் துறைக்கு அளிக்கின்றது. பிற்காலத்தில் மருதம் என்னும் இச்சொல் ஆற்றங்கரையில் அமைந்த வளமான நெல்வயல்கள் நிறைந்த உழவு நிலங்களைக் குறிப்பதாயிற்று. மேலும், இச்சொல் இந்நில மக்களின் வாழ்க்கையையும் அவர்களின் வாழ்வு குறித்த திணைப் பாடல்களையும் குறிக்கின்றது. சில பாடல்களில் இச்சொல் குறிப்பிட்ட ஒரு பண்ணையும் குறித்த பொருளுடையதாகின்றது. இச்சொற் பொருண்மையிலிருந்து ஒரு குறியீட்டு முறையில் வளர்ந்த அதன் கருத்துப் புலப்பாட்டு வளர்ச்சியை நாம் காண முடிகின்றது.*

### மருதத்திணை மக்களின் வாழ்வியல் முறை

*'வேந்தன் மேய தீம்புனல் உலகம்'[1] என்னும் மருதம். பல்பொருள் வளமையால் பெருக்கமுற்றிருந்தது போன்றே மக்கள் வாழ்வியல் வகையாலும், பிற நிலத்து மாந்தரினும தனித்தன்மை பெற்றிருந்தனர். மழை நோக்கி வாழ்வாராதலால் சில காலத்துக் கடின உழைப்பும், விளைவு பெற்ற*

*பின்னர் சிலகாலத்தே நெடிய ஓய்வும் பெற்ற வாழ்வினராக மருத நில மக்கள் விளங்கினர். பெருவளம் உடையாரும், அவர்பால் உழைத்துக் கூலிபெற்று உண்பாருமாக மேற்குடியினரும் கீழ்க்குடியினரும் என்னும் பிரிவு தோன்றிற்று. இதனால் ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் சார்ந்தே, ஒருவரையொருவர் போற்றியே ஒருவருக்கொருவர் உறுதுணை நின்றே வாழ்தலென நிலவிய பழந்தமிழரின் பிறதிணை ஒழுக்க மரபுகளும் மருதத்தில் உண்டாயிற்று. பொன்னும் பொருளும் விரும்பி, அதனைப் பெறுதலை வேட்டுப் பிறருக்கு அடித்தொண்டு செய்வோரும், அவற்றை வழங்கி அத்தொண்டேற்று மனம் களிப்பாருமாக, மக்கள் மனநிலையாலும், பிளவுப்பட்டனர். மருதத்தின் நிலையானது, சமுதாய வாழ்வியல் ஒழுக்கமானது தன் நெறியிலே தளர்வுற்று, ஆடவர்க்கு ஒன்றும் பெண்டிர்க்கு மற்றொன்றுமாகவும், மேற்குடியார்க்கு ஒன்றும், பிறருக்கு வேறொன்றுமாகவும் கருதப்பட்ட நிலையாயிற்று. ஆகவே, பரத்தமை, ஒழுக்கம் தோன்றிப் பரவியதும், மருதத்தின் கண்ணேதான். பரத்தமை பழிக்கபெற்றாலும், ஒழுக்கவியனரும் சகித்துப் போக வேண்டிய ஒன்றாகக் கருதிச் சகிக்கப்பட்டதும், மருதத் திணையின் மரபாயிற்று.*

*ஆகவே, தலைவன் தலைவியரிடையே அத்தகைய பிரிவுக் காலத்தே எழும் மனவுணர்வுகளின் நுட்பமான தன்மைகளையும், அதிலும் உரிமையுடைய தன்னைத் துறந்து பிற பொருட் பெண்டிர்களோடு காமமே நினைவாகக் கருத்தழிந்து திரியும் தலைவனை வெறுத்தாற்போல ஊடினாலும், குடும்பநலம் கருதிப் பொறுத்து ஏற்று வாழும் தலைவியரின் மனச் செழுமையையும், மருதம் நமக்குக் காட்டுகிறது.*

*நம் உள்ளத்தேயும், அக்காட்சிகள் உணர்வெழுச்சிகளைக் கட்டுப்படுத்த தூண்டுகின்ற செவ்வியையும், மருதத்திணைப் பாடல்களின் வழி அறியலாம்.*

*சீரும் சிறப்புடனும், உயர்ந்த குறிக்கோளுடனும் ஒரு சமுதாயம் வாழவேண்டுமாயின், அக வாழ்வியல் அமைதி நிறைந்திருத்தல் வேண்டும். அமைதி இல்லாத வாழ்வில் பண்பாடு, நாகரிகம், குறிக்கோள் என்பவை தோன்றாது. தோன்றினாலும் நிலைத்து வளராது. பழந்தமிழரின் வாழ்வில் சிறந்த குறிக்கோளும், பண்பாடும் நிறைந்து காணப்பெற்றன எனில், அவருடைய வாழ்வு அமைதி நிறைந்ததாய் இருந்திருக்கும் என்று கூறத் தேவையில்லை. அமைதி என்பது புறத்தே இருந்து வருவதன்று. அகத்தே தோன்றுவது. எத்துணை விரும்பினாலும் விலை கொடுக்க முயன்றாலும், சிலருக்குக் கிட்டாத இவ்வமைதி மருதத் திணையில் தலைவிக்கு பொருந்தியது. இதனை உணர்த்தவே அகத்திணைக் கல்வி பெரிதும் பயன்பட்டது.*

**சங்க அகத்திணை**

*தமிழின் உணர்வை வளர்க்கும் அகத்திற்குல் தமிழன் பெரும் மதிப்பைக் கொடுத்தான். வாழ்விலும் அதனைப் புறத்தைக் காட்டிலும் உயர்ந்தது என்று கருதினான். இலக்கணம் வகுத்த தொல்காப்பியரும் புறத்திணை இயல் என்ற ஒரே இயலால் புறத்தைப் பற்றிக் கூறினார். ஆனால், அகத்தின் சிறப்பை அறிவிக்கப் போலும் அதனை 'அகத்திணை இயல், களவியல், கற்பியல் என்று மூன்று இயல்களாற் பகுத்தார்.*

*அவ்வாறு இலக்கணம் செய்ய ஒரு தனிக் காரணம் உண்டு. இலக்கியம் கண்டதற்கு தானே இலக்கணம் கூறினார் ஆசிரியர். இலக்கியம் எவ்வாறு வாழ்க்கையைக் கண்டது. இலக்கியம் தன்னிற் பெரும் பகுதியை அகத்திற்கு தந்துவிட்டது. சங்க இலக்கியங்களில் எட்டுத் தொகை நூல்களில் ஐந்து நூல்கள் அகம் சார்ந்தவைதான். தமிழர் அகம் பற்றி எத்துணை பெருமை கொண்டிருந்தனர் என்பதற்கு சான்று இதுவே.*

## வள்ளுவன் கண்ட அகம்

*பொதுமறை தந்த பெரியார், உலகம் முழுவதற்கும் நல்வழி வகுக்கத் தொடங்குகையில் புது முறையைக் கையாள்கிறார். அவருக்கு முன்னர் தோன்றிய பிளேட்டோ போன்றவர்கள் நாடு நலம் பெறும் வழியைக் கூறினார்கள். ஆனால் வள்ளுவர் இவ்வழியை விட்டு தனி மனிதன், அவன் குடும்ப என்ற இரண்டையும் முதலில் பேசுகிறார். குடும்ப வாழ்க்கை மனிதனைச் செம்மைப்படுத்த இன்றியமையாததாக அமைகிறது என்பதை அறிந்த பழந்தமிழர் அகத்திற்கு அத்தனை மதிப்பு தந்தனர்.*

## தலைவனும் தலைவியும்

*இல்லறத்தை தமிழன் கூறியமுறையில் மேறகொள்வதால், மனிதன் தன்னலத்திலிருந்து விடுபட முடிந்தது. ஏனைய நாட்டினரைப் போல திருமணத்தைக் கூறாமல் தமிழர் அதனைக் 'களவு' என்றும் 'கற்பு' என்றும் பிரித்தனர். முதலில் களவு தொடங்கும் பொழுதே தலைவன் ஒன்றை இழக்கிறான். அவ்வாறு இழக்கப்படுவது அவனுடைய அகங்காரம். தலைவனும், தலைவியும் ஒத்த பொருளையுடையவர்கள் எனக் கூற வந்த தொல்காப்பியர், அடுத்துத் தலைவன் சற்று உயர்ந்தவனாக படைக்கப் பட்டிருக்கிறான்.*

***'ஒத்த கிழவனும் கிழவியும் காணப்***

***மிக்கோண் ஆயினும் கடிவரை இன்றே' (களவிய 2)*[2]**

*என்று கூறுவதால் தலைவனின் பெருமையை அறிய முடிகிறது.*

*இத்துணை சிறந்த தலைவன் தன் பாங்கரும் ஏவலரும் நண்பரும் புடைசூழ வேட்டை மேற்சென்றவன், தலைவியைக் காண்கின்றான். அவனைக் காணுமுன்னர் அவனைப் பற்றி நினைப்பவருக்கு அவன் பெருமை தோன்றாமற் போகாது. இத்துணைப் பெருமை காரணமாக அவனிடம் ஓரளவாவாது ஆணவம் இல்லாமற் போகாது.*

மேலும், அவன் ‘அறிவும் ஆற்றலும் புகழும் கொடையும் ஆராய்தலும் பண்பும் நண்பும் பழிபாவம் அஞ்சுதலும் முதலியனவாய் மேற்படும் பெருமைப் பகுதியும் கடைப்பிடியும் நிறையும் கலங்காது துணிதலும் முதலிய வலியின் பகுதியும் உடையவன் என தொல்காப்பியம் கூறுகிறது.

**‘பெருமையும் உரனும் ஆடுஉ மேன’[3]**

இவ்வளவு சிறப்பும் உடைய ஒருவன் தன்னைப் பற்றி உயர்வான எண்ணங்களோடு தருக்கி நிற்றலில் தவறு இல்லை. இப்பண்புள்ள தலைவன் மருதத்திணையில் காணப்படுகின்றான்.

## பெண்மை குறித்து வள்ளுவம்

பெண் மென்மையானவள். அவள் வலிமையற்றவள். தன் கற்பைத் தானே பாதுகாத்துக் கொள்ளும் ஆற்றல் இல்லாதவள். பாதுகாக்கப்பட வேண்டிய பொருள் என வரையறுக்கப்படுகிறது. வள்ளுவன் பெண்ணின் உடல் கற்பை விட உள்ளக் கற்பை மதித்தார்.

பின்னால் வந்த கம்பர், அகலிகையை,

**‘நெஞ்சினால் பிழையிலாளை’[4]**

எனக் குறிப்பதும் இக்கருத்தை ஒட்டியதாகும். பெண்ணின் உடலை மற்றவர் பாதுகாக்க முடியும். உள்ளத்தைப் பிறர் காக்க முடியாது. அவள் மட்டுமே காக்க முடியும் என்ற உண்மையை அறிந்தவர் வள்ளுவர். அதனால்.

**‘சிறைகாக்கும் காப்பு எவன்செய்யும் மகளிர்**
**நிறை காக்கும் காப்பே தலை’[5]**

இதில் ஆண், பெண் இருவரது அகநிலைப் பற்றி ஆழமாகச் சிந்தித்து புறத்தால் ஆடவர் காத்தாலும் அகத்தால் அவளை அவள்தான் காக்கமுடியும் என்ற உளவியலைக் குறிப்பிட்டுள்ளமை சிந்திக்கத் தக்கது.

**மருத நிலப் பாடல்களில் உளவியல்**

*ஊடலும் ஊடல் நிமித்தமும் மருதநிலை உரிப்பொருள்களாகும். பரத்தையர் இல்லத்திலேயே பல நாட்கள் தங்கி மனைவியைக் காணவரும் தலைவனுக்குத் தோழி தூது செல்கிறாள். அதற்குத் தலைவி மறுமொழியாக,*

***நன்னலம் தொலைய நலம்மிக சாஅய்***
***இன்உயிர் கழியினும் உரையல் அவர் நமக்கு***
***அன்னையும் அத்தனும் அல்லோ தோழி***
***புலவி அஃது எவனே அன்பிலங்கடையே'[6]***

*என்ற பாடலில் தலைவனைப் பிரிந்து விட முடியாத தொடர்பு இருவருக்கும் ஏற்பட்டு விட்டது. அவருடைய உத்தரவு மீறி நடக்க முடியாது. ஆதலால் அன்னை அத்தன் என்ற முறையிலே இருக்கட்டும். காதலன், காதலி என்னும் நினைவே வேண்டாம் என்பதிலிருந்து இந்நில உரிப்பொருளை ஊடலும் ஊடல் நிமித்தமும் என அறியமுடிகிறது.*

*இப்பாடல் தலைவன் மீது கொண்ட அளவிட முடியாத காதலை வெளிப்படுத்துகிறது. அன்பின் மிகுதியே ஊடல்தான் என்பதை தலைவியின் கூற்றுமூலம் அவள் உளப்பாங்கினை அறிய முடிகிறது.*

*பொருள் ஈட்டும் பொருட்டு தலைவியின் விருப்பத்தினைப் பெற்று தலைவன் செல்கிறான். மகிழ்ச்சியோடு அவன் பிரிந்து போவதற்கு விடையளித்து விட்டு குளிர்காலம் வந்தவுடன் மிகவும் வருந்தினாள். தலைவி தான் அழுவதற்கான காரணத்தைத் தோழியிடம் கூறுகிறாள்.*

***'நுண்உறை அழிதுளி தலைஇய***
***தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க்கு அழலே'[7]***

*எனக் காதலர் பொருள் தேடப் போகிறேன் என்று சொல்லிய மாய மொழியில் மயங்கி, இப்பொழுது மழையின் காரணமாகக் குளிர்ந்த*

வாடைக்காற்றும் வீசுகின்றது. இந்தவாடைக் காலத்திலே பிரிந்தவர் பொருட்டு அழுகின்றன என் கண்கள் நான் என்ன செய்வேன்' என்று தலைவி புலம்புகின்றாள். இதனால் ஆற்றாது புலம்பும் தலைவி நிலையும் அன்பின் வெளிப்பாடும் தெரிகிறது.

பரத்தையரிடம் சென்று மீண்டு வந்த தலைவனது உடன்பாட்டை வேண்டி நின்றவிடத்து அவன்போல் ஊடலை உடையவளாயினும் தன் நெஞ்சம் அவன்பால் செல்வதையறிந்த தலைவி நீ அவன்பால் அன்புடையையாகியிருப்பின் பலநாள் துஞ்சாது உறையும் துன்பத்தை அடைவாய் என்று சபித்துக் கூறுகிறாள். மேலும், தலைவன் தன்னிடம் பரத்தைமை நெறி இல்லை என்று தலைவியிடம் தெரிவிக்கின்றான். இதனைக் கேட்ட தலைவி,

**'சுரஞ்செல் யானைக் கல்லுறு கோட்டிற்**
**றென்றென வறீஇயரோ வைய மற்றியதும்**
**நும்மொடு நக்க வால்வெள் ளெயிறே**
**பாணர், பசுமீன் சொரிந்த மண்டைபோல்'[8]**

என்கிறாள். யாம் உம்மோடு மகிழ்ந்து சிரித்த தூய உண்மையான பற்கள் பாலை நிலத்தில் செல்லும் யானையானது மலையைக் குத்திய கொம்பைப் போல் விரைவாக முறிவனவாகவும், எனது உயிரானது பாணர் பிடித்த மீனைப் போன்று எனக்கு வெறுப்பைத் தந்த உம்மை அளித்தது என்று தலைவனோடு உறவு கொள்வதைவிட இறத்தலே நன்று எனக் கூறுகிறாள் தலைவி. இவ்வாறு, ஆற்றாது புலம்பும் நிலையில் உள்ள துன்பம் மிகுதி தோன்ற எடுத்துரைப்பதைக் காண முடிகிறது. இதனால், தலைவனின் பிறபெண் தொடர்பை ஏற்றுக் கொள்வதை விட உயிரைப் போக்கிக் கொள்வதாகக் கூறும் உளவியல் பண்பு வெளிப்படுகிறது.

*தலைவனால் பாதிக்கப்பட்ட தலைவியின் துன்ப மனநிலையை இப்பாடல் விளக்குகிறது.*

*தலைவியை விட்டு வினை முற்றிப் பிரிந்து போயிருந்த தலைவன் தன்வினை முடித்துக் கொண்டு வீட்டிற்குத் திரும்புகிறான். குறித்த காலத்தில் வாராமையினால் தலைவி கோபம் கொள்வாளோ என்று எண்ணி பாணனைத் தூதாக அனுப்புகிறான். பாணணை வரவேற்ற தலைவி,*

**'அன்னாய் இவன்ஓர் இளமா ணக்கன்**
**தன்வர் மன்றத்து என்னன் கொல்லோ**
**இரந்தூண் நிரம்ப மேனியோடு**
**விருந்தின் ஊரும் பெருஞ்சம் மலனே'**[9]

*என்றுரைக்கின்றாள். இப்பாடலில் பாணன் கூறியவற்றைக் கேட்ட தலைவி அவனிடம் அன்பு பாராட்டினாள். பிரிந்த தலைவனின் வருகையைக் கூறிய பாணனுக்கும் விருந்து செய்தாள். இதன்மூலம் தலைவி தலைவன் மீது கொண்ட அன்பின் வழி தூதாக வந்த பாணனை விருந்துடன் உபசரிக்கிறாள் என்பதை அறிய முடிகிறது.*

**மன்னிக்கும் உளவியல்**

*தலைவனின் மீது இருக்கும் கோபத்தை வெளிக்காட்டாமல் மன்னிக்கும் உளவியல் செய்திகள் வெளிப்படுகிறது.*

**தலைவனும் பாங்கனும்**

*பாங்கனுடன் தலைவிக்குக் கூற்று நிகழும் இடமும் உண்டு. பரத்தையரிடம் இருந்து பிரிந்து வந்த தலைவன் பாங்கனைத் தூதாக அனுப்புகிறான். அப்பாங்கனிடம் தலைவி இரந்து கூறுவதாக அமைந்துள்ளது.*

***'. . . . செம்மலோடு தாஅய்த்***

***துறையணிந் தன்றவ ரூழே யிறையினாக்***

***திலங்குவனை நெகிழச் சா அயப்***

***புலம்பணிந்த தன்றவர் மணந்த தோளே'[10]***

*என்ற இப்பாடல் அவர் என்னை புறக்கனித்தமையால் நான் மெலிந்தேன். அவர் விளையாடும் துறை அழகு பெற்றது. ஆனால் மணந்த தோள்கள் மெலிவுற்றது என்கிறாள்.*

*கணவனைப் பிரிந்து வாழும் தலைவியின் நிலையை அழகுற சித்தரிக்கிறது. உடல் மெலிந்து உள்ளம் சோர்வுற்று வாழும் தன் மனநிலையைக் கூறுகிறாள் தலைவி. இது வாழ்வியல் உளவியலை வெளிப்படுத்துகின்றது.*

**பிரிவு ஆற்றாத தலைவி**

*இத்திணையில் தலைவி கூற்றாக அமைந்துள்ள பாடலில் பிரிவிடை ஆற்றாத துறை அமைப்பில் அமைந்த பாடலில்,*

***'கடும்புனல் அடைகரை நெடுங்கயத்துஇட்ட***

***மீன் வலை மாப்பட்டா அங்கு***

***இது மற்ற எவனோ நொதுமலர்த்தலையே'[11]***

*இப்பாடலில் மீனுக்கென அமைத்த வலையில் விலாங்கு பட்டாற் போலத் தலைவனுக்கென அமைந்த என் திறத்த நொதுமலர் வரைய முயன்றனரென்று உள்ளுறை அமைந்துள்ளது.*

*தன்னை விட்டுப் பிரிந்த தலைவனை எண்ணி ஏங்கும் நெஞ்சினை உடையவளாகத் தலைவி புனைக்கப்பட்டிருக்கிறாள். மற்றொரு பாடல்,*

*'இரமருப் பெருமை யின்றணிக் காராண்*
*உழவன் யாத்தகுழவியி னகலாது*
*பாஅற் பைம்பளி ராரு மூரன்*
*திருமுனைப் பல்கடம் பூண்ட*
*பெருமுது பெண்டீரே மாகிய நமக்கே'*[12]

*எருமை கட்டப்பட்ட தன் குழவியினின்றும் அகலாமல் அருகிலேயேயுள்ள பயிரை ஆரும் ஊரென்றது. தலைவன் இல்லின்கண் உறையும் தலைவிபாற் கொண்ட அன்பு குறையாமல் தனக்கு வேண்டிய இன்பத்தை அருகிலுளார் பாற் பெறுகின்றானென்னும் உள்ளுறையைப் புலப்படுத்துகின்றது.*

*இப்பாடலில் தலைவன் ஊரின் சிறப்பைக் கூறி, இத்தகைய ஊருக்கு தலைவனானவன் தன்னோடு மிகுந்த அன்பினால் இல்லாமல் பரத்தையரை நாடிச் செல்கிறான் என்ற செய்தி உள்ளுறையாகத் தலைவி கூறுகிறாள். தலைவி தலைவனை வெறுத்த போதிலும் கூடி அவன் சிறப்பினைக் கூறும் பண்பினை உடையவளாகக் காட்டப்படுகிறாள்.*

**பிரிவின் வருத்தம்**

*'முன்றில் உளங்கல் மாந்தி மன்றத்து*
*எருவின் நுண்தாது குடைவன ஆடி*
*இல்துறைப் பள்ளித் தம் பிள்ளையொடு வதியும்*
*புண்கண் மாலையும் புலம்பும்*
*இன்று கொல் தோழி அவர் சென்ற நாட்டே'*[13]

*தமக்குரிய இடத்தில் தம் பிள்ளைகளோடு குருவிகள் மாலைப் பொழுதில் சேர்ந்திருப்பதைக் கண்ட தலைவர் தாமும் தம் மகவோடும் தலைவியோடும் சேர்ந்துறைதல் வேண்டுமென்று கருதி விரைவில் வருவார்*

என்ற நம்பிக்கையில் ஆற்றியிருப்பதாகக் கூறுவது இறைச்சி பொருள் தருவதாக உள்ளது.

தோழி கூறுவதாக அமைந்த இப்பாடலில் இயற்கைப் புனைவுகளைக் காட்டி, கண்டிப்பாக நம் தலைவர் நம்மைத் தேடி வருவார். அவரை நினைத்துப் புலம்பாதே எனத் தலைவியை ஆற்றுப்படுத்துகிறாள். தலைவியின் உளவியலைப் புரிந்து கொண்டு தோழி கூறுபவையாக அமைந்துள்ளது.

வாயில் வேண்டிய தலைவனுக்கு மறுத்துக் கூறுவதாக உள்ள பாடலில்,

**'ஐயவி அன்ன சிறுவி ஞானல்**
**செவ்வி மருதின் செம்மலோடுதா அய்த்**
**துறை அணிந்தன்று அவர் ஊரே இறை இறந்து**
**இலங்குவளை நெகிழச் சாஅய்ப்**
**புலம்பு அணிந்தன்று அவர் மணந்த தோளே'**[14]

தலைவன் ஊரிலுள்ள துறையை அணித்தன்று என்றது. அவன் பரத்தையரோடு அத்துறையின் கண் விளையாடினான் என்பதைத் தலைவி அறிந்துள்ளாள் என்பதை இறைச்சி நயத்துடன் குறிப்பிட்டுள்ளதை அறியமுடிகிறது.

தலைவி தலைவனின் கூடா ஒழுக்கம் பற்றி அறிந்த செய்தியைத் தோழி அறிவுறுத்துகிறாள். தலைவனை விடத் தலைவியை நன்கு அறிந்தவள் தோழி என்பது தெளிவாகிறது.

## தலைவியினது நாணம், வருத்தம், ஆகியவற்றைப் புலப்படுத்தும் பாடல்

கூத்தாட்டம் நடத்தவிருக்கும் பழைமையான அந்த ஊரில் செல்வர் பலராதலால், வறுமையோ, அயர்ச்சியோ வாழ்வில் காணாத துணி

வெளுக்கும் ஒருத்தி தாணுண்ட இரவு உணவால் எஞ்சிய கஞ்சியிட்டு உலர்த்திய, மெல்லிய ஆடையையும், பொன் மாலையையும் அணிந்தவளாய் அசைந்து நடந்து வந்தாள். கருமையான பனை நாரினால் திரித்த பெரிய கயிற்றால் கட்டப்பட்டிருந்து ஊசலருகே அவள் சென்று நின்றாள். பூப்போன்ற கண்களைக் கொண்டு தோழியர் கூட்டம் ஊசலை சூட்டிட ஆடாதவளாய்ப் பூங்குழலியான அவள் விசும்பிச் சென்றாள். தலைவன் வந்து தான் அமைந்துள்ள ஊஞ்சலைத் தள்ளிவிட்டு நகைப்பான் என்று எதிர்பார்த்தாள் அவள். தன் எதிர்பார்ப்பு நிகழாமையால் நாணமும் வருத்தமும் அவளை அழவைத்தன.

***மள்ளர் குழீஇய விழவினானும்***
***மகளிர் தழீஇய துணங்கையானும்***
***யாண்டும் காணேன், மாண்தக்கோனை***
***யானும் ஓர் ஆடுகள மகளே, என்கைக்***
***கோஈர் இலங்குவளை நெகிழ்ந்த***
***பீடுகெழு குரிசினும் ஓர் ஆடுகள மகனே'*** [15]

தலைவி தனது தவிப்பைப் புலப்படுத்தும் பாடல். தனக்கு மணம் செய்வித்து விடுவார்கள் போலத் தெரிகிறது. நான் அவரைத் தேடித் தேடி என் கண்களும் சோர்ந்து போயினவே, அவரன்றோ என் இதய நாயகன். வீரர் குழுமிய இடங்கள், திருவிழாக்கள், பெண்கள் துணங்கைக் கூத்து ஆடும் இடங்கள் அனைத்திலும் தேடிவிட்டேன். காணவில்லை. அவரும் ஆட்டத்தில் சிறந்தவர். எனக்கு இணையாக ஆடும் திறன் படைத்தவரே என்கிறாள்.

ஆதிமந்தியினது பாடல் தலைவனைக் காணாது தவிக்கும் தலைவியின் உளப்பாங்கில் தவிப்பு உளவியல் வெளிப்படுகிறது.

**காதல் தவிப்பிற்குக் காற்றை தூது அனுப்புதல்**

**'விண் அதர்பு தலைஇய விரவுமலர் குழையத்**

**தண்மழை பொழிந்த தாழ்பெயற் கடைநாள்**

**எமியம் ஆகத்துனி உளம் கூரச்**

.......

**எனக்கே வந்தனைபோறி! புனற்கால்**

**அயிர்இடு குப்பையின் நெகிழ்த்து அவிழ'**[16]

*வானமே அதிரும் இடிமுழக்கம், செடி, கொடி, மலர்கள், நிலை குலைந்தன. குளிர்ந்த தொடர் மழை பெய்த கடைசி நாளது இன்று. நான் இங்கே தனித்துக் கிடந்து தவிக்கின்றேன். என்னைப் பிரிந்து சென்ற அவரை எதிர்பார்த்து பார்த்து ஏக்கத்தால் இளைத்துப் போனேன். கைவளை கழன்று விடும் போல் உள்ளது. யானை நீர் மொண்டு சொரிவது போல் எங்கும் பனித்துளி மூடுமே. அதனால் மலரும் தாமரையும் கருகுமே. இப்படிப்பட்ட முன்பனிக்காலத்து நடுஇரவில் குன்றுகளும் நெகிழுமாறு குளிரும் வாடைக் காற்றே! நீ என்னை மட்டுமே துன்புறுத்த வந்தாயோ?*

*வாய்க்காலில் ஓடும் நீர் மணல் மேடுகளைக் கரைத்து நுண்மணல்களை அடித்துச் செல்வது போலக் காதலரின் நெஞ்சம் என்பால் வருமாக! கொடியவரான தலைவர் சென்ற திக்கில் அயராமல் காற்றே நீ செல்வாயாக! அவ்வாறு சென்றால் பொருளை ஈட்டும் வேட்கை கொண்ட தலைவர் என்னை நினைத்து வருதலும் உண்டு.*

*இவ்வாறாகத் தனது காதல் துயரை நீக்கக் காற்றைத் தூதாக அனுப்புகின்றார் கழார்க்கீரன் எயற்றியார். தலைவியின் ஆற்றாமை வெளிப்படுவதாக இப்பாடல் அமைகிறது.*

**பரத்தையை நாடிய கணவனை வெறுக்கும் பாடல்**

*'நகுகம் வாராய் பாண! பருவாய்*
*அரிபெய் கிண்கிணி ஆர்ப்ப தெருவில்*
*யாரேரையோ என்று இருந்து நின்றதுவே'*[17]

*பாணனே! பிளந்த வாய் வழி பரல்கள் கிண்கினி காலில் கிடந்து ஒலிப்புத் தெருவில் வந்த சிறுதேர் உருட்டி நடைபழகிக் கொண்டிருந்த தேன் போன்ற இனிய மொழிகளைப் பேசும் என் புதல்வரைக் கண்டேன். அவனை தூக்கி தன் மார்போடு அணைத்தேன். பூ மணம் கமழும் அவனது சிவந்த வாய் நீராலே என் மார்புச் சந்தனம் சிதைந்தது. இச்சிதைவோடு என் வேட்கையுள்ள நெஞ்சம் தூண்டில் செலுத்தியதால் நான் அவளைத் தழுவும் விருப்பத்தோடு குறுகினேன். அப்போது மூன்றாம் பிறைத் திங்கள் போன்ற அழகு பொருந்திய குற்றமற்ற சிறப்புடைய நெற்றியையும் மணம் கமழும் கூந்தலையும் உடையஎன் காதலி வேறுபட நினைத்து அஞ்சிய பெண்மானைப் போல ஒதுங்கிச் சென்று யாரையோ! என்றும் யாரையோ! என்றும் சொல்லி அப்பால் சென்று நின்றாள். அவளது செயலை நினைக்கும் போது நகைப்புத் தோன்றுவதால் நாம் இருவரும் நகைப்போம்.*

*இப்பாடல் பரத்தையை நாடிய கணவனைத் தலைவி வெறுத்து ஒதுக்கும் குணநிலையைப் புலப்படுத்துகின்றது.*

**உணர்வும் – உணர்ச்சியும் விளக்கம்**

*தொல்காப்பியர், 'உணர்வு' என்னும் சொல்லை ஆறு இடங்களிலும், 'உணர்ச்சி' என்னும் சொல்லை ஓரிடத்திலும் பயன்படுத்தியுள்ளார். மேலும் குறுந்தொகை, நாலடியார், நான்மணிக்கடிகை, ஐந்திணை எழுபது, திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், ஏலாதி ஆகியவற்றிலும் பல்வேறு இடங்களிலும்*

‘உணர்வு’ எனும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இறையனார் களவியல் ஆகியவற்றில் ‘உணர்ச்சி’ என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

## உளவியல் அடிப்படையில் உணர்வுகள், உணர்ச்சி போராட்டங்கள்

அறிதல், உணர்தல், செயல்பட விரும்புதல் ஆகிய நிலைகளை உள்ளத்திறன் நிலைகள் என உளவியல் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். அறிதல் என்பது காணல், நினைவு கூர்தல், காரணங்காணல் போன்றன அறிவுத் தொடர்பான செயல்களாகும்.

உணர்தல் என்பது மனத்தின் இன்பதுன்ப நிலைகளை உணர்தலாகும். நடத்தல், பேசுதல், செயலைச் செய்தல் போன்றவை செயல்பட விரும்புதல் என்னும் நிலையில் அடங்கும். மனநிலைகளின் எழுச்சியே உணர்ச்சி எனப்படுகிறது. அவ்வுணர்ச்சி நரம்புத் தூண்டலாலும் அதனால் மனத்தின்கண் உருவாகும் செயல்முறைகளாலும் எழுபவை எனவும் கொள்ளலாம். ஐம்புலன்கள் பெறும் புலனறிவு எனப்படும் உணர்ச்சிகள், உள்ளங்கிளர் நிலையில் வேகமும் இறுக்கமும் பெறுகின்றன. இவ்வுணர்ச்சிகள் மனித மனத்தில் தோன்றும்போது அம்மனிதனைச் செயல்படுத்துகின்றன.

## போராட்டங்கள் பற்றிய உளவியல் கருத்துக்கள்

புலன்கள் நுகர்ந்து தரும் செய்திகளையும் சிந்தனையால் பெறும் செய்திகளையும் மூளை உணர்வாக உள்ளத்தில் அமைகின்றன. புறத்தில் இருந்து உள்ளம் எதிர்கொள்ளும் நிகழ்ச்சிகளும் உள்ளே நிகழும் எண்ணங்களும் உள்ளத்தில் தோன்றும் எண்ணங்களிடையே மோதல்கள் நிகழ்கின்றன.

**உணர்வுப் போராட்டத்தில் காதல்**

காதல் உணர்வுப் போராட்டத்தில் முதன்மைப் பாத்திரங்கள் தலைவனும், தலைவியும் ஆவர். தோழி, பரத்தை, பாங்கன், செவிலி, நற்றாய், ஆகியோர் துணைப்பாத்திரங்கள். துணைப்பாத்திரங்களுள் பாங்கன், தோழி ஆகியோர் உணர்வுப் போராட்டம் உள்ளவர்களாகச் சித்தரிக்கப்படவில்லை.

காதல் வாழ்வில் ஈடுபடுவோர் தலைவனும், தலைவியும் ஆவர். எனவே, அவ்விருவரும் உணர்வு நிலையில் நிற்பவர்கள். இவர்களது நடைமுறையை நெறிப்படுத்துவபள் தோழி. இவ்வுணர்வு பற்றி எல்லாம் அறிந்தும், அதில் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளாமல் அயலே நின்று அறிவு நிலையில் செயல்படுபவள். பாங்கனும் இதே நிலையில் இருப்பவன். எனவே, தோழியும் பாங்கனும் காதல் உணர்வு பற்றி அறிந்திருந்தும் தங்களது வாழ்வில் காதலில் ஈடுபடாதவர்கள். நேரடியாகக் காதலில் ஈடுபடாமையால், பாங்கனுக்கும் தோழிக்கும் உணர்வுப் போராட்டங்கள் இல்லை. இவர்கள் ஒத்த வயதினராயினும் பாலுணர்ச்சிகள் இருப்பினும் இவற்றைக் காட்டுவது சங்க இலக்கியங்களில் மரபு அன்று. ஆனால், இவர்கள் தலைவன் தலைவியராகக் கூடி உணர்வுகளை உணரும் பக்குவம் உடையவர்கள். எனவே, அவர்களது இன்ப துன்பங்களில் கலந்து கொண்டு உதவுகின்றார்கள். ஆனால், எந்தச் சமுதாயத்திலும் தோழியோ பாங்கனோ தாம் காதலுற்றதாகக் காட்டுதல் சங்க இலக்கிய மரபன்று. தோழியும் பாங்கனும் தன்னுடைய காதல் உணர்வுகளை வெளிப்படுத்தவில்லை என்ற செய்தியும் தலைவனுக்கும் தலைவிக்கும் உற்ற துணையாக இருந்தனர் என்ற உளவியல் வெளிப்படுகிறது.

பரத்தை, தலைவனது காதல் வாழ்வில் குறுக்கீடு செய்பவள். தலைவியைப் போன்ற உரிமை நெருக்கம் பாராட்டித் தலைவனிடம் தொடர்பு கொண்டவள். தலைவனது பாலுணர்வின் தணிப்புக் காரணமாய் இருக்கின்றாள். எனவே, அவளும் உணர்வு - உறவு போராட்டங்கள், நீக்கித்

*தள்ளப்படுகிறாள். நற்றாயும் செவிலியும் தலைவியிடம் பாசம் கொண்டவர்கள். பாச உணர்வு காரணமாகத் தலைவியின் காதல் செயல் முறைகளில் அவர்கள் தலையீடு அவர்களுடைய உள்ளத்தில் கலக்கமும், ஏமாற்றமும் சேர்ந்த கூட்டு உணர்வு உண்டாகிறது. எவ்வாறெனில், தங்களை மீறித் தலைவி தலைவனோடு சென்று விடுவாளோ என்ற உணர்வு வெளிப்படுகிறது.*

## ஆண் – பெண் காம வெளிப்பாட்டை உணர்த்தும் பாடல்

*தலைவிக்கு ஏற்பட்ட காதல் நோய்க்கு தலைவனே மருந்து என்ற செய்தியை வெளிப்படுத்துகிறது இப்பாடல்.*

***'பூழ்க்கால் அன்ன செங்கால் உழுந்தின்***

***ஊழ்ப்படு முதுகாய் உழையினம் கவரும்***

. . . . . . . . .

***மருந்து பிறிது இல்லை அவர் மணந்த மார்பே'***[18]

*வாடையில் தான்படும் துன்பத்தைப் போக்கும் மருந்து, நான் மணந்த அவர் மார்பேயன்றி வேறு எதுவும் இல்லை. காமம் என்பது புணர்ச்சி சார்ந்த உணர்வாகக் குறுக்கப்பட்ட நிலையில் அவன் உடல் அணுக்கமே என் துன்பத்தைப் போக்கும் என்றாள் தலைவி. வேறு சில பாடல்களில் தலைவனைப் பார்த்தாலே போதும்! என் உடல் வருத்தம் தொலையும் என்பதும் பெண்ணின் உடல் வேட்கை உளவியல் முறையாகப் பல தளங்களில் ஆணின் இருப்பைக்கோருவதாக இருக்கிறது. இப்பாடல் ஆண் - பெண் இருவருக்கும் இடையிலான காம வெளிப்பாடு மற்றும் துய்ப்பு குறித்த உளப்புலத்தல்களில் மிகுதியான வேறுபாடுகள் கொண்டிருந்தது என்பதை உறுதிப்படுத்துகிறது.*

## வேட்கை குறித்து பிராய்டின் கருத்து

*‘உளப்பகுப்பாய்வின் விருப்பமும், வேட்கையும் நெருக்கமானதும் நுட்ப வேறுபாடு கொண்டதுமான பொருளைக் கொண்டுள்ளன. தேவைகளில் இருந்துதான் விருப்பமும் வேட்கையும் தோன்றுகின்றன. உள்ளத்தில் நேர்மறை இறுக்கத்தை* (Positive Stress) *உண்டாக்குகின்ற தேவைகள் தம்மை நினைப்படுத்திக் கொள்ள விரும்புகின்றன. இவையே விருப்பங்களாக மாறுகின்றன. தேவைகள் அனைத்தும் உள்ளுணர்ச்சித் தொடர்பானவை என்று பிராய்டு கூறுகின்றார்.*

## கனவு நிலையால் உணர்த்தும் பாடல்

*தலைவன் மேல் கொண்ட நம்பிக்கையைத் தலைவி,*

***‘உள்ளார் கொல்லோ - தோழி கிள்ளை***
***வளைவாய்க் கொண்ட வேப்ப ஒண்பழம்***
***புதுநாண் நுழைப்பான் நுதிமாண் வள்உதிர்ப்***
. . . . . .
***நிலம்கரி கள்ளி அம் காடு இறந்தோரே’***[19]

*பாதையில் தங்க காசு போல பூத்திருக்கும் கள்ளிப் பூக்களைப் பார்க்கும் போது தனது நினைவு வரும். அதன் நிமித்தம் தன்னை நோக்கி அவன் வரக்கூடும் எனக் கனவு காண்கிறாள்.*

## கனவு குறித்து பிராய்டின் சித்தாந்தம்

*‘கனவுகள் அனைத்தும் பொருள் நிறைந்தவையே என்பது பிராய்டின் உளவியல் கருத்தியலாகும். ஒவ்வொரு கனவுக்கும் பின்னால் ஏதேனும் ஒரு உளக்கூறு அல்லது பல உளக்கூறுகள் தொடர்புபட்டிருக்கும் அந்த உளக்கூறுகளின் உந்துதலால்தான் கனவுகள் பிறக்கின்றன. கனவு உருவாக்கத்திற்கான* (Dream Formation) *மூலக்காரணி* (Root Case) *இந்த*

*உந்தலாகத்தான் இருக்க முடியும், இம்மூலக் காரணியைக் கனவுகளின் பொருளாகக்* (Meaning of dreams) *காண்கிறார் பிராய்ட்.*

*காதல் வயப்பட்ட தலைவியின்* ***மன வேதனையை உணர்த்தும் பாடல்***

***'நோம் என் நெஞ்சே! நோம் என் நெஞ்சே!***

***புன்புலத்து அமன்ற சிறியிலை நெருங்சீக்***

. . . . . . .

***இனிய செய்தநம் காதலர்***

***இல்லா செய்தல் நோம், என் நெஞ்சே!'*** [20]

*முன்னர் அவர் இனியவனாக இருந்தாலும் இப்போது எனக்குச் செய்யத்தகாத காரியத்தைச் செய்து நெருஞ்சி முள்ளென என்னைக் குத்திக் காயப்படுத்தி விட்டான். இது எனக்கு மேலும் மன வேதனையைத் தருகிறது என்னும் தலைவி கூற்றில் உளவியல் நோக்கு வெளிப்படுத்துகிறது.*

## நனவு மனம் குறித்து பிராய்டின் கருத்து

*'உள்ளத்தைப் பாதிக்கின்ற அனுபவங்கள் நனவு மனம் நனவிலி மனம் ஆகிய இரண்டிலும் பாதிப்பை ஏற்படுத்தும் சில அனுபவங்கள் நனவிலிப் பண்புகளைப் பெற்று நனவுநிலை அறியாதபடி ஆளுகைச் செய்யும் அத்தகைய எண்ணங்களே நோய்குறிகளை உருவாக்குகின்றன. இப்பாடலில் இடம்பெறும் தலைவியின் வேதனை அதனோடு ஒப்பிடத் தகுந்தது.*

## இயற்கை உணர்வாம் காமத்தை அகவய உளைச்சல் அடைந்த தலைவி நேர்படக் கூறும் பாடல்

***'முட்டுவேன் கொல்? தாக்குவேன் கொல்***

***ஓரேன், யானும் ஓர்பெற்றி மேலிட்டு***

***ஆஅ ஒல் எனக் கூவுவேன் கொல்?***

***அலமரல் அசைவளி அலைப்ப, என்***

***உளவுநோய் அறியாது துஞ்சும் ஊர்க்கே***

***அசைந்து வருகின்ற தென்றல் காற்று'***[21]

*காதல் நோயின் கொடுமையை அறிந்து கொள்ளாமல் என்னை அலைக்கழிக்கின்றது. அதனை அறியாமல் ஊரும் உறங்குகின்றது. இவ்வாறு உறங்கும் ஊரார்க்கு எனது நிலையை எவ்வாறு கூறுவேன்? முட்டுவேனா? தாக்குவேனா? என்று ஔவை பாடியிருக்கும் பாடல் அகத்தே எழும் இயற்கை உணர்வாம் காமத்தை நேர்பட சொல்வதாக அமைந்துள்ளது. இதுதமிழர் தம் புலநெறிக்கோட்பாட்டை இன்பியல் கோட்பாட்டை விளக்குவதாக அமைந்துள்ளது. உளவியல் முறையில் ஔவையாரது அகவய உளைச்சலைப் பாடல் வடிவில் உணர்த்துகிறது.*

## தனிமையின் தவிப்பை உணர்த்தும் பாடல்

*இரவெல்லாம் உறக்கமின்றி ஒருபெண் தன்னந்தனியே தவிப்பதை இவரது பாடல் வெளிப்படுத்துகின்றது. தன் தனிமையை அப்பெண்ணே வெளிப்படுத்துவதால் அவளது காமநோய் அம்பலப்படுத்துகின்றது. இவ்வுலகமே இன்பத்தில் திளைக்கிறது. தான் மட்டும் காமநோயால் துன்புறுகிறேன் என்பதை விளக்க*

***'என்னோடு பெரும்கொல், இவ்வுலகம்?***

***உலகமொடு பொரும்கொல், என் அவலம் உறுநெஞ்சே'***[22]

*என்று தன் உளத்தவிப்பையும் ஆற்றாமையும் வெளிப்படுத்துகின்றாள். ஆற்றாமையின் காரணமாக அதைக் கண்டுகொள்ளாத பொதுவான நிலைமீது உலகத்தார் மீது ஏற்பட்ட தலைவியின் அறச்சினம் ஒருபுறமும் தன்மீது ஏற்பட்ட தன்னிரக்கம் மறுபுறமாக வெளிப்படுகின்றன. மேலும், இப்பெண்ணின் வேட்கையையும் அறிந்து கொள்ள முடிகின்றது.*

**காமத்து இயல்பை தலைவி எடுத்துரைக்கும் பாடல்**

> *'கழனி நல்ஊர் மகிழ்நர்க்குஎன்*
>
> *இழைநெகிற் பருவரல் செப்பா தோயே?'*[23]

*என்னும் வெள்ளி வீதியாரின் பாடலில் பெண்ணின் காம உணர்வு வெளிப்படுகிறது. காம உணர்வைப் பெண்கள் வெளிப்படையாகக் கூறக்கூடாது. புது மண் கலத்து நீர் கசிவு போல மறைமுகமாகச் சொல்லப்பட வேண்டும் எனும் பண்பாட்டு அகமரபையும், மீறிப் பெண்ணின் காமத்து இயல்பைப் பெண்ணே உரைக்கும் பாங்கில் அமைந்துள்ளன. பெண்காம நோயால் வாடுவதை உரைக்கும் பெண்மொழி இது எனலாம். தனது பாதிப்புற்ற அனுபவத்தைக் கவிதைப் பொருளாகக் கையாளும் சுதந்திரத்தைத் தலைவிக் கூற்றாக வெளிப்படுத்துகின்றது வெள்ளி வீதியாரின் பாடல்.*

**பாலியல் குறித்து பிராய்டின் கருத்து**

*'பாலுணர்ச்சி உடல் சார்ந்தது என்றாலும், அது உருவாக்குகின்ற வேட்கை உளம் சார்ந்ததாக உள்ளது. இவ்வேட்கை உள, உடற் செயற்பாடுகளுக்கான உந்துவிசையாக அமைய உள்ளமும் உடலும் இயைபுடன் இயங்க சம்மதித்துக் கொள்கின்றன. இத்தகைய வேட்கை உணர்வால் ஏற்பட்ட காம நோயைப் பற்றி இப்பாடல் விளக்குகிறது.*

**மன இறுக்கம்**

*'ஒரு பிரச்சனைக்குத் தீர்வு காணமுடியாமல் மனம் கவலையால் விரக்தி நிலையை அடைவதே மன இறுக்கமாகும். கவலை அல்லது தவிப்பு என்றும் பொருள்படும். சங்க இலக்கியத்திலும் கவலை என்பது 'நோதல்' என்னும் சொல் உள்ளத்தின் முறிவு, போராட்டம், விறைப்பு நிலை, அழுத்தம், இறுக்கம் ஆகியவற்றை உணர்த்தும் பொதுச் சொல்லாகவே*

*கையாளப்பட்டுள்ளது. இத்தகைய மன இறுக்கம் விரக்தியன்று. மன இறுக்கத்தின் எதிர்மறை விரக்தி நோக்கி இட்டுச் செல்லக்கூடும். தன்னால் எதுவும் இனி செய்ய இயலாது என்கிற நம்பிக்கை இழப்பே விரக்தி. இதை உணர்த்தும் விதமாக,*

***'ஒருநாள் வாரலன், இருநாள் வாரலன்,***
***பல்நாள் வந்து, பணிமொழி பயிற்றி, என்***
***நன்னர் நெஞ்சம் நெகிழ்ந்தே பின்றை***
. . . . . . . .
***எறுடை மழையின் கவிழும் என் நெஞ்சே'***[24]

*என்ற பாடல் விளக்குகின்றது.*

## காம நோய் ஏற்படுவதற்குக் காரணமாகப் பிராய்டு கூறுவது

*'பிராய்டின் கருத்துப்படி உடல்வாழ்வும் உள வாழ்வும் இணை நிலையானவை. இதைத்தான் இயைபுவாதம், இணை நிலைவாதம் என்று தத்துவவாதிகள் கூறுகின்றனர். உடலும் உள்ளமும் ஒத்திசைவுடன் செயல்படும் போது பிணக்கு ஏற்பட்டால் உள்ளத்திற்கும் உடலுக்கும் இடைவெளித் தோன்றுவிடுகிறது. அந்த இடைவெளி நோய்க்குறிகளை ஏற்படுத்துகிறது. அதாவது பசலை நோயை ஏற்படுத்துகின்றது.*

***'ஐயவியன்ன சிறுவீ ஞாழல்***
***செவ்வி மருதின் செம்மலோடு தாஅய்த்***
***துறைபணிந்தன்று அவர் ஊரே***
***இறையிறந்து புலம் பணிந்தன் றவன்***
***மணந்த தோளே'***[25]

*நின் ஊரின் கண்ணாதிய யாரேனும் ஒரு பருவத்தே கலங்கிக் கிடந்தாலும், மற்றொரு பருவத்து தெளிந்தே கிடப்பதாகின்றது. தலைவியின்*

*கண்களோ எல்லாப் பருவத்தும் பசலைப் பூத்தே இருக்கின்றன என்பதை இப்பாடல் விளக்குகிறது.*

> ***‘கண்ணும் தோளும் தண்ணுறங்கப்பும்***
> ***படுநலம் இழந்து பசலை பாய***
> ***இன்னுயிர் பெரும் பிரிதாயினும் அன்னதுஉம்***
> ***புலவேன் வாழி தோழி’*** [26]

*தலைவன் பிரிவால் தலைவியின் கண்களும் தோள்களும் கூந்தலும் ஒளி இழந்தன. பருவ எழில் கொழிக்கும் உடலில் பசலை நோய் தோன்றியது. அவள் மனத்துயர் மிகுந்திருந்தாலும், மன உறுதியும் அதே நேரத்தில் மிகுந்தது.*

*இப்பாடல் தலைவி கொண்டுள்ள தூய காதலையும், நிலைக் கடங்கா உள்ளத்தையும் அறிய முடிகிறது. மற்றுமொரு பாடலில், அவன் வரவையே நினைந்து இவள் கண்ணும் பசந்தன என்று கூறுகிறது.*

> ***‘ஓங்குபூ வேழத்துத் தூம்புடைத் திரள்கால்***
> ***சிறுதொழு மகளிர் அஞ்சனம் பெய்யும்***
> ***பூக்கஞல் ஊரனை உள்ளிப்***
> ***பூப்போல் உன்கண் பொன்போர்த்தனவே’*** [27]

*உள்துளையையுடைய கொறுக்கைக்கு கஞ்சி தண்டில் மகளிர் கண்மையை பெய்து வைப்ப, மிகுதியான மலர்கள் பூக்கின்ற ஊரை உடைய தலைவனை நினைத்துப் பூம்போன்ற மையுண்ட தலைவியின் கண்கள் பொன்மேல் பசலையுற்றன.*

*வேழப் பூக்கள் நிறைந்த ஊரையுடையவன் தலைவன். அவன் ஊரில் உள்ள எளிய வாழ்க்கை வாழும் ஏழை மகளிர் ஓங்கி வளரும் வேழத்தின் உள்குமிந்த தட்டைக்குள் கண்ணுக்கு இடும் அஞ்சன மையைப் பொதித்து*

*வைப்பர். அத்தகைய ஊரனாம் தலைவனை எண்ணிப் பூவைப் போன்ற மைதீட்டிய தலைவியின் அழகிய கண்களும் பொன் திறத்துப் பசலையடைந்து பொலிவிழந்தன. இனிமேல் தலைவன் வந்து என்ன பயன்? என்று வினவுகிறாள்.*

*தலைவனின் இத்தகைய செயலால் மனம் உடைந்த தலைவி தலைவனை மனதால் வெறுத்து ஒதுக்கியதை இப்பாடல் தெளிவுப்படுத்துகிறது.*

**‘புதல்மிசை நுடங்கும் வேழ வெண்பூ**
**விசும்பாடு குருகில் தோன்றும் ஊரன்**
**புதுவோர் மேவலன் ஆகலின்**
**வறிதா கின்றுஎன் மடம்கெழு நெஞ்சே’[28]**

*தான் வளர்ந்து நிற்கும் புதிரின் மேலே அசைகின்ற வேழத்தின் வெண்மையான பூக்கள் கருமையான வானத்தின் மீது பறக்கும் வெள்ளைக் குருகுப் போலத் தோன்றும். அத்தகைய இயல்பினையுடைய ஊரனாகிய நம் தலைவன் புதுப்புதுப் பரத்தைப் பெண்களின் மீது மோகமுடையவன் என்பதை அறியாது மடமை மிகுந்த என் நெஞ்சம் அவனை நினைத்து மெலிந்து போகிறது.*

*தலைவி தன் மடமைத்தனத்தை நினைத்து வருந்துகிறாள். தலைவனின் இத்தகைய போக்கு தனக்கு மிகுந்த வருத்தத்தை தந்ததால் தன் உடல் மெலிந்து போனதாக உளவியல் செய்தியாகக் கூறப்படுகிறது.*

***முயப்பிடிச்செவியின் அன்ன பாசடை,***
***கயக்கணக் கொக்கின் அன்ன கூம்புமுகை***
***கணக்கால் ஆம்பல் அமிழ்ந்து நூறு தண்போது***
***குணக்குத் தோன்று வெள்ளியின் இருள்கெடவிரியும்***
***கயற்கணம் கலித்த பொய்கை ஊர!***

*முனிவுஇல் பரத்தையை எற்துறந்து அருளாய்*

*நனிபுலம்பு அலைத்த எல்லை நீங்க,*

*புதுவறம் கூர்ந்த செறுவில் தண்ணென,*

*மலிபுனல் பரத்தந் தா அங்கு,*

*இனிதே தெய்ய, நிற்காணுங் காலே'*[29]

*குளத்தில் உள்ள ஆம்பல் திரட்சி உடைய கால்களையும், கொக்குப் போன்ற கூம்பிய மொட்டுகளையும், பெண் யானையின்செவி போன்ற பசுமையான இலைகளையும் உடையது. இத்தகைய ஆம்பல் கிழக்கில் தோன்றும். விண்மீனைப் போன்று இருள் நீங்க மலரும். இத்தகைய ஆம்பல்களை உடையதும் மீன் கூட்டம் நிறைந்ததுமாகிய பொய்கையை உடைய ஊரனே! என்னை விட்டு நீங்கிச் சினங்கொள்ளாதிருக்கும் பரத்தையை நீ அடைவாய். மிகுதியான வறட்சியையுடைய கோடை காலத்தில் மழை பெய்து, நீர் பெருகி அதனை காணும் போது உள்ள மகிழ்ச்சி உன்னை காணும் போது தோன்றும். அஃது ஒன்றே போதும் என்று கூறுகிறாள் தோழி.*

*தலைவனின் செயலைக் கண்டு வருந்திய தோழி வாயில் மறுத்தாகக் கூறப்பட்ட பாடல் இது. களவுக் காலத்தில் தோழியின் பங்கு மிகுதியாக சங்க இலக்கியத்தில் பேசப்படுகிறது. களவில் வாயில் மறுத்தாகத் தோழி பேசப்படும் இடங்கள் பல. ஆனால், கற்புக்காலத்தில் வாயில் மறுத்தாகக் கூறப்படும் இப்பாடலில் தலைவன் மேல் இருக்கும் கோபத்தை வெளிப்படையாக கூறாமல் அவனின் விருப்பத்தையே தன் விருப்பமாகக் கூறி அவன்மேல் வெறுப்பை மறைமுகமாகக் கூறுகிறாள். தலைவியின் வேதனையைப் புரிந்து கொண்டு தோழி இவ்வாறு நடந்து கொள்ளும் பாங்கு தோழியின் திடமான மிகவும் நுட்பமான மனநிலையை அறிந்து கொள்ள முடிகிறது.*

*'தட மருப்பு எருமைப் பிணர்ச்சுவல் இரும்போத்து,*
*மடநடை நாரைப் பல் இனம் இரிய,*
*நெடுநீர்த் தண்கயம் துடுமெனப் பாய்ந்து,*
*நாட்தொழில் வருத்தம் வீடச் சேண்சினை*
*இருள்புனை மருதின் இன்நிழல் வதியும்*
*யாணர் ஊர! நின்மாண் இழைமகளிரை*
*எம்மனைத் தந்து நீ தழீஇயினும், அவர்தம்*
*புன்மனத்து உண்மையோ அரிதே; அவரும்*
*பைந்தொடி மகளிரோடு சிறுவர்ப் பாய்ந்து,*
*நன்றி சான்ற கற்பொடு*
*எம்பாடு ஆதல் அதனினும் அரிதே'*[30]

*பெரிய வளைந்த கொம்பையும் சொர சொரப்பான பிடரியையும் உடைய கரிய எருமைக்கடா, நாரைகள் கூட்டம் குலைந்து விலக, நீர் நிரம்பிய குளிர்ச்சி பொருந்திய குளத்தில் துடுமெனப் பாயும். அவ்வாறு பாய்ந்த எருமை*

*இணை இரண்டு இடைந்து ஒத்தமுகை நாப்பன் பிறிதுயாதும்*
*துணை இன்றித் தளைவிட்ட, தாமரைத் தனிமலர்!*
*திருமுகம் இறைஞ்சினள், வீழ்பவற்கு இனைபவன்*
*அரிமதர் மழைக்கண் நீர் அலர் முலைபோல் தெறிப்பபோல்,*
*தகைமலர் பழனத்த புள்ஒற்ற ஒசிந்து ஒல்கி*
*மிக நனி சேர்ந்த அம்முகைமிசை அம்மலர்*
*அக இதழ்த் தண்பணி உறைத்தரும் ஊர, கேள்*
*தண்தளிர்த் தகைபூத்த தூது எழில் நலம் செலக்*
*கொண்டு, நீ மாறிய கவின்பெறல் வேண்டேன் மன்*
*உண்டாதல் சாலா என் உயிர்சாதல் உணர்ந்து நின்,*
*பெண்டு எனப் பிறர் கூறும்பழி மாறாப் பெறுகற்பின்*

*பொன் எனப் பசந்த, கண் போது எழில் நலம்செல,*
*தொல் நலம் இழந்து கண் துயில் பெறல் வேண்டேன்மன்*
*நின் அணங்கு உற்றவர் நீ செப்பும் கொடுமைகள்*
*என்னுழை வந்து நொந்து உரைபாமை பெறுகற்பின்?*
*மாசுஅற மண்உற்ற மணிஏசும் இரும்கூர்தல்*
*வீ சேர்ந்து வண்டு ஆர்க்கும் கவின்பெறல் வேண்டேன்மன்*
*நோய் சேர்ந்த தினம் பண்ணி நின் பாணன் எம்மனை*
*நீ சேர்ந்த இல்வினாய் விராமை பெறுகற்பின்? ஆங்கு-*
*'கடைஇப நின் மார்பு தோபலம்' என்னும்,*
*இடையும் நிறைபும் எளிதோ - நிற்காணின்*
*கடவுப கைத்தங்கா, நெஞ்சு என்னும் தம்மோடு*
*உடன்வாழ் பகை உடையார்க்கு?'*[31]

*பரத்தையை நாடி திரும்பி வந்த தலைவனோடு ஊடிய தலைவி ஊடல் தீர்க்கின்றதாக அமைந்த பாடல் இது.*

*இணை போன்று ஒப்பொத்த இரண்டு தாமரை மொட்டுக்களின் நடுவே, வேறு பிறிது எதுவும் துணை இல்லாமல் இதழ் விரிந்திருந்தது. ஒரு தாமரை மலர் தான் விரும்பிய அன்பன் வராது போக, அழகினை உடைய முகம், கவிழ்ந்து அழுகின்றாள் ஒருத்தி. அவளுடைய செவ்வரியினையும், செருக்கினையும், குளிர்ச்சியினையுமுடைய கண்ணின் நீர், ஆடிக்கொண்டெழுந்த முலையின் மீது தெறித்தது. அது போன்று, மலர்கள் நிறைந்த வயலிலே பறவை வந்து அத்தாமரை மலரைத் தீர்க்க, அது மிகவும் சாய்ந்து, வளைந்து நன்கு இணைந்திருந்த அந்த இரட்டை மொட்டுகளின் மீது தன் அகவிதழிலிருந்த குளிர்ந்த பனிநீரைத் துளித்தலைத் தருகின்ற ஊரனே கேள்.*

*உண்டென்று சொல்வதற்கும் தகுதியற்றது என் உயிர். அந்நிலையினும் நில்லாமல் சாதலை உணர்ந்து வைத்தும் நின்பெண்டு என்று பிறர் கூறும் பழி மாறாப் பெறுவேனோயின் அதுவே எனக்குப் போதுமானது. தன்மையான தளிரிடத்தே வீழ்ந்து அழகு பெற்ற தாது போலும் என் எழிலும் நலமும் செல்ல, என் மேனி எங்கும் மாமையும் சுணங்கும் படர்ந்து விட்டன. அவை போகும் படியாக வாங்கிக் கொண்டு, நீ பின்பு ஒரு காலும் தாராது விட்ட அழகை யான் பெறுதலைக் கூட நின்னிடம் வேண்டேன். அதனால் பெற்றதென? பெண்டு என்னும் பெயர் போகாதாயிற்றே.*

*நின்னால் வருத்த முற்ற பரத்தையர் நீ செய்யும் கொடுமைகளை என்னிடத்தே வந்து வெறுத்துச் சொல்லாமையை யான் பெறின். அதுவே, எனக்குப் போதுமானது. கண்கள் பூவினது அழகையுடைய நலம் போகும்படியாக பொன் போலப் பசந்தன. இயற்கை நலத்தையும் இழந்த அக்கண்கள், துயிலப் பெறுதலைக் கூட நின்னிடம் வேண்டேன். அதனாற் பெற்றதென்? அங்ஙனம் என்னை இகழ்ந்து கூறுதல் தவிராரே.*

*நின்னுடைய பாணன் நோவு சேர்ந்த திறப்பண்ணை முழக்கிக் கொண்டு எம்முடைய மனையிடத்தே வந்து, நீ போயிருக்கும் பரத்தையர் மனையை எனைக் கேட்டு வாராதிருத்தலையான் பெறின் அதுவே ஒவ்வாய் என்று ஏசும் கரிய கூந்தலில் பூவணிந்து வண்டுகள் ஆரவாரிக்கும் அழகைப் பெறுதலைக் கூடயான் விரும்பேன்! அதனாற் பெற்றதென்? அவன் வினாவுதலைத் தவிரானே!*

*உன்னைக் கண்டால் என்னை உன்னிடத்தே செலுத்தித் தானும் உன்னிடத்தே வந்து தங்கிவிடும் நெஞ்சு என்று சொல்லப்படும் தம்மோடு உடன்வாழ் உட்பகையை உடையவள் நான். முன்னர் என்னை நின்மேல் வீழ்வித்த நின் மார்பைத் தழுவமாட்டேன் என்று கூறும் நிறை என்னும்*

குணத்தையும் பெறுதல் எளிதோ? அஃது அரிதன்றோ என ஊடல் தீர்ந்து கூறினாள் தலைவி.

இப்பாடலில் உளவியல் செய்தியாக, பிரிவால் முகங்கவிழ்ந்து அழுகின்றவளுடைய கண்ணீர் முலைமேல் விழுந்து, அதனை உவமையாக்கிக் கூறப்படும் பொருள் சிறப்பாக அமைகிறது. இணைமுகை முலைகளுக்கும், தனிமலர் முகத்திற்கும் குளிர்ந்த நீர் கண்ணீருக்கும் பொருந்தி, தலைவனுடைய கொடுமைகளை பாணன் முதலியோர் வந்து கூற பொறுக்க முடியாதவளாய் இருந்து, பின் தன் நெஞ்சு தன்னையும் அறியாமல் அவனிடத்தே சென்று விட்டதை எண்ணி, வருத்தமுடன் கூறுகிறாள். இப்பாடலில் தலைவி தலைவன் மேல் கொண்ட அளவற்ற அன்பும், பெண்மையால் கட்டுப்படுத்த முடியாத மறைக்க முடியாத காமநோய் என்ற உளவியல் செய்தி வெளிப்படுகின்றது.

***‘மலை கண்டன்ன நிலைபுணர் நிவப்பின்***
***பெரு நெற்பல் கூட்டு எழுமை உழவ***
***கண்படை பெறாஅது தண்புலர் விடியல்***
***கருங்கண் வராஅல் பெருந்தடி மளிர்வையொடு***
***புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ்சோறு***
***கவர்படு கையை கழும் மாந்தி***
***நீர்உறு செறுவின் நாறுமுடி ஆழ்த்தநின்***
***நடுநரொடு சேறி ஆயின் அவண***
***சாயும் நெய்தலும் ஓம்புமதி’***[32]

எருமையைப் பூட்டி உழுகின்ற உழவர் இரவில் காத்திருப்பர். குளிர்ச்சியையுடைய இருள் நீங்கும் விடியற்காலையில் எழுந்துவரால் மீனுடன் சமைத்த உணவினை உண்பர். பின்பு வயலில் நாற்றுநடுவதற்கு ஆட்களோடு சென்றால் அங்கிருக்கும் கோரைகளையும் நெய்தல் பூவையும்

கலையாதுப் பாதுகாக்க வேண்டும். இச்செறிக்கப்பட்ட மடந்தைக்கு அவைகள் முறையாக வளையலாகவும், உடையாகவும் அணிய உதவுகின்றன. இவ்வாறு தோழி தலைவனுக்குக் கூறி அவனை வரைவுக்குத் தூண்டுகிறாள். இப்பாடலில் மருத நிலத்தின் கருப்பொருள்களான எருமை, உழவர் போன்றன இடம் பெற்றுள்ளன.

இப்பாடல் களவில் தோழி தலைவனுக்கு உரைப்பனவாக அமைந்துள்ளது. தலைவி மீது அதிக அன்பும் அக்கறையும் கொண்டவளாக சங்க இலக்கியங்களில் தோழி சித்தரிக்கப்பட்டிருக்கிறாள். களவு நீடித்தால் அலராகி விடும் என்ற தோழியின் அச்சமானது இப்பாடலில் தெளிவாகின்றது. தலைவியின் மனநிலையைச் சரியாக புரிந்துகொண்ட தோழி தலைவியின் மனக்கருத்தைத் தனது கூற்றாக வெளிப்படுத்துகிறாள். இப்பாடலில் தலைவியின் உளப்பாங்கினைத் தோழி தலைவனுக்கு உணர்த்துகிறாள்.

***'கரும்புநடு பாத்தியிற் கலித்த வாம்பல்***
***கரும்பு பூசிகளையும் பெரும்புன லூர***
***புதல்வனை யீன்றவெம் மேனி***
***முயங்கன்மோ தெய்யுநின் மார்பு சிதைப்பதுவே'***[33]

தலைவனுடைய ஊர் நீர் வளமும், நில வளமும் மிக்கது. அங்குக் கரும்பு நடுவதற்காக நிலத்தைச் செம்மை செய்து வைத்திருந்தனர். அந்த நிலத்தில் நீராம்பல் தானே முளைத்து தழைத்து அங்கு வந்த வண்டுகளின் பசியை நீக்கிற்று. இவ்வளவு வளமிக்கது தலைவனின் ஊர். 'அத்தகைய ஊருக்குத் தலைவனே! புதல்வனைப் பெற்று முதிர்ந்த என் உடம்பை நீ தழுவ வேண்டாம். அஃது உன் மார்பின் அழகைச் சிதைப்பதாகும்.

ஐங்குறுநூற்று மருதப் பாடலில் கரும்பு நடுவதற்காகச் செம்மைப்படுத்தப்பட்ட வயல் என்பது பரத்தையர் இருந்து

வாழ்வதற்காகவே அமைந்த வீட்டில் தலைவி இருந்து வருகின்றவர்களுக்கு விரும்தோம்பி அறம் செய்தலை குறித்தது. என்னைத் தழுவாதே என்றமையின் தலைவனோடு ஊடல் கொண்டாள் என்பது விளங்குகிறது.

பரத்தையிற் பிரிவானது மருதத்திணைக்கே உரித்தானது. தலைவியின் மன வருத்தத்தை வெளிப்படுத்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது. தலைவன் மீதுள்ள கோபமானது ஊடலாக தலைவியின் உளப்பாங்கினை வெளிப்படுத்தும் பாடலாகப் பேசப்பட்டுள்ளது.

**'கழனி மாஅத்து விளைந்துகு தீம்பழம்**
**பழன வாளை கதூஉம் உறன்**
**எம்இல் பெருமொழி கூறித் தம்இல்**
**கையும் காலும் தூக்கத் தூக்கும்**
**ஆடிப் பாவை போல**
**மேவன செய்யும் தன் புதல்வன் தாய்க்கே'[34]**

என்ற குறுந்தொகை மருதத்திணைப் பாடலில் காதற்பரத்தைக் கூற்றாக அமைந்துள்ளது. தலைவி தன்னை இகழ்ந்து கூறினாள் என்று அறிந்த காதற் பரத்தை தலைவியின் பக்கத்தில் உள்ளோர் கேட்குமாறு இதனைக் கூறுகின்றாள். 'வயல் அருகில் உள்ள மாமரத்தின் முதிர்ந்து வீழும் இனிய பழத்தை பொய்கையில் உள்ள வாளை மீன் கவ்வி உண்ணும் வளமான ஊருக்குத் தலைவன் என்னுடைய வீட்டில் என்னை வசப்படுத்துவதற்குரியப் பெருமொழிகளைக் கூறிச் சென்றான். அவன் தன்னுடைய வீட்டில் முன்னின்றவர்கையும் காலும் தூக்கத் தூக்குகின்ற கண்ணாடியுள் தோன்றும் உருவத்தைப் போல தன்னுடைய புதல்வன் தாயாகிய மனைவிக்கு அவள் விரும்பியவற்றை செய்வான்' என்பது இப்பாடலின் கருத்து. காதற் பரத்தை தலைவன் தன் வீட்டில் தலைவியோடு ஊடியும், ஊடல் நீக்கியும் செய்தன வெல்லாம் கேட்டு இகழ்ந்து கூறுகின்றாள். மரத்தில் விளைந்த பழம்தானே.

*வீழ்ந்து வாளை மீன் கொள்ளுமாறு அமைந்தமை, இன்பம் எல்லாம் முயற்சியின்றித் தானே வந்து கூடும் என்பதை தெரிவிக்கின்றது.*

***‘அரிகால் மாறிய அங்கன் அகல்வயல்***
***மறுகால் உழுத ஈரச்செறுவின்***
***வித்தோடு சென்ற வட்டி பற்பல***
***மீனொடு பெயரும் யாணர் ஊர***
***நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்***
***செல்வம் அன்று தன் செய்வினை பயனே***
***சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்***
***புன்பண் அஞ்சும் பண்பின்***
***மென்கண் செல்வஞ் செல்லமென் பதுவே’***[35]

*நற்றிணை மருதத் திணைப் பாடலில் கூறும் கருத்தானது, தோழி தலைமகனிடம் கூறுவதாக அமைந்தது இப்பாடல்.*

*தலைவன் தலைவியரைப் பிரிந்து பரத்தையரைச் சார்ந்ததனால் தலைவி சினம் கொண்டாள். அவளது சினம் தணியத் தலைவன் தோழியை அணுகினான். அவளும் தலைவியின் சினம் தணியுமாறு அறிவுரைக்கும் வகையில் அமைந்தது இப்பாடல்.*

*தலைவியின் ஊடல் தீர்க்கும் போதே தலைவனுக்கும் அறம் கூறும் வகையில் இப்பாடல் அமைந்துள்ளது.*

*‘நெல் அறுமுடை முடிந்த வயலில், விதைக்கத் தக்க விதைகள் உள்ள கடகப் பெட்டியோடு உழவர்கள் சென்றனர். விதைத்து திரும்புகையில் கடகப் பெட்டியில் பல மீன்கள் கொண்டு வந்தனர். இத்தகைய வளமான ஊருக்குத் தலைவனே! அரசனிடம் புகழ்ச்சிப் பெறலும், தேர், யானை, குதிரை ஆகியவற்றின் மீதூர்தலும் செல்வம் என்று கருதினாய். அவை செல்வம்*

ஆகா. அவை எல்லாம் முன்னை வினையின் பயனால் வருபவை. சான்றோர் செல்வம் என்று போற்றுவது தன்னை அடைக்கலமாய் வந்து சேர்ந்தவரின் துன்பத்திற்கு அஞ்சுதலாகும். அவர் துன்பம் நீக்கி அவரிடம் இரக்கம் கொண்டு இனியவராய் ஒழுகுதலே இனியப் பண்பாகும்' என்று தோழி தலைவனுக்கு வாயில் நேரும் வகையில் கூறுகின்றாள். தலைவி கொண்ட ஊடலைப் போக்குவதன் நிமித்தமாகக் கூறிய கூற்றை கொண்டமையால் இது மருதத் திணையாயிற்று.

தோழிக் கூற்றான இப்பாடலில் தலைவனுக்கு பெருஞ்செல்வமானது முப்படைகளை உடையதல்ல. தன்னை நாடிய தலைவிக்கு இனிய சொல் கூடி அன்பாய் அரவணைத்து ஆறுதல் கூறுதல் தான் நல்ல பண்பு என்று எடுத்துரைக்கிறாள்.

பரத்தையற் வழி பிரிந்த தலைவனிடம் தலைவி சினம் கொண்டதைக் கண்டதோழி உலக இயல்பினை எடுத்துரைக்கும் விதமாக இப்பாடல் அமைந்துள்ளது. தலைவியின் ஏக்க உணர்வைத் தோழி மூலமாக வெளிப்படுத்தும் உளவியல் செய்தி புலனாகிறது.

**சேற்றுநிலை முனைஇய செங்கட் காரன்**
**ஊர்மடி கங்குலில் நோன்தளை பிரிந்து**
**கூர்முள் வேலி கோட்டின் நீக்கி**
**நீர்முதர் பழனத்து மீன்உடன் இரீஇய**
**அந்தூம்பு வள்ளை மயக்கிய தாமரை**
**வண்டு ஊது பனிமலர் ஆரும்ர'**[36]

சேற்றில் நிற்பதை வெறுத்த எருமை ஊர் மக்கள் உறங்கும் நேரத்தில் கயிற்றை அறுத்துக் கொண்டு தன் கொம்புகளால் வேலியை அகற்றிவிட்டு, வயலில் மீன்கள் அஞ்சிஓட, வள்ளைக் கொடியைக் கலக்கி சிதைத்து வண்டுகள் ஊதும் தாமரை மலரை வயிறார உண்டது. தலைவன் நாணமாகிய தளையை

அறுத்துக் கொண்டு பரத்தையர்க்கு காவலாகிய விறலியையும், பாணனையும் தன் சினக் குறிப்பால் நீக்கி, அப்பரத்தையோடு உறையும் தோழியர் அஞ்சி ஓடுமாறு செய்து தாய்மாரையும் மயக்கிப் பரத்தையரை நுகர்ந்தனன் என்பதாகும். இப்பாடலில் தோழி 'உன்னோடு ஊடல் கொள்வதற்கே எங்களுக்கு என்ன உரிமை உள்ளது. பரத்தை மகள் ஒருத்தியை நீ மணந்து கொண்டதாக இவ்வூர் கூறுகின்றது. அப்பழியை உன்மீது நாங்கள் கூறமாட்டோம். நீ அந்த மணமகளோடு வாழ்வாயாக என்று கூறும் பகுதி பொருள் மிக்கது. சமுதாயப் படிநிலையில் ஒழுக்கம் என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரு தன்மையாக விதிக்கப்படாமையினை இது காட்டும். எனினும், அக்கால ஆடவரெல்லாம் பரத்தையரை நாடினர் என்பதாகாது. இது சுவையுற பாடுதற்கு அமைந்த ஒரு பொருண்மை எனப் புலவன் இதனைத் தேர்கிற்றான். ஆடவன் ஒருவன் மகளிர் பலரால் காமுறப் பெற்றான் என்று கூறுவது அவனுடைய தலைமை பெருமைக்கும் உரியது எனக் கருதியது புலமை மரபு. ஊடலுக்கு நல்ல களம் இப்பரத்தமை ஒழுக்கமாகும்.

தோழி இலக்கியங்களில் ஊடல் தீர்க்கும் வாயிலாகத் தான் இதுவரை கண்டுள்ளோம். ஆனால், இப்பாடலில் தோழியே தலைவனிடம் ஊடல் கொண்டதாக பேசப்படுகிறது. தலைவன் மேல் தலைவிக்கு என்ன உரிமை இருக்கிறதோ, அதே உரிமை தனக்கும் இருப்பதாக கருதிய தோழி உன்மீது ஊடல் கொள்ள எங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது என்ற வினாவினை எழுப்புவதன் மூலம் தலைவன் மீதுள்ள அன்பானது வெளிப்படுகிறது. அன்பின் ஆழம்தான் கோபத்தின் வெளிப்பாடு. இது உலகில் உள்ள அனைத்து காதலர்களுக்கும் பொருந்தக் கூடிய உலக இயல்பு.

இதனைத்தான் தோழி, தலைவியின் மனநிலையையும், உள்ளத்து வேதனையையும் உணர்ந்து கொண்டவளாகத் தலைவன் மீது சினந்து

கொண்டவளாக இப்பாடல் பேசப்படுகிறது. தலைவியின் வேதனைக் குறிப்பை உணர்த்தும் உளவியல் செய்தி வெளிப்படுகிறது.

**'முழவுமுதல் அரைய தடவுநிலைப் பெண்ணைக்**
**கொழுமடல் இலைத்த சிறுகோள் குடம்பைக்**
**கருங்கால் அன்றில் காமர் கடுஞ்சூல்**
**வயதுபெடை போழும் இனமணி நெடுந்தோர்**
**வராதாயினும், வருவதுபோலச்**
**செவிமுதல் இசைக்கும் அரவமொடு**
**துயில் துறந்தனவால் என் கண்ணே'**[37]

ஒரு காலத்தில் நாம் சிறிது புலந்து விலகினாலும் அச்சிறு விலகலுக்கே அஞ்சி தாங்கற்கரிய காம இன்ப உணர்வால் நம்மை வலிந்து அனைத்து இன்பம் துய்த்தவர் இன்று, அவர் வருவார் போலத் தோன்றுகிறது எனத் தோழி தலைவியிடம் கூறுகிறாள். இப்பாடலில் ஓர் உளவியல் பொதிந்துக் கிடக்கிறது. நமக்கு வேண்டிய ஒருவர் மாலைக்குள் வரவேண்டும் என எதிர்பார்க்கின்றோம். இரவு கனமழை என எச்சரித்தற்குத் தோதாக கருமுகில்கள் வானில் குமுழுகின்றன. படுத்திருக்கும் நமக்கு அவர் வண்டி வரும் ஓசை வருவது போல் கேட்கிறது. எழுந்துபோய் பார்க்கின்றோம். அவர் ஒன்றும் வரவில்லை.

நம் மன வேட்கையால் அவர் வருவது போல் ஓர் ஓசை. அவர் நடந்துவந்து கதவருகே நின்று தட்டுவது போன்று நினைவு தோன்றி தோன்றி மறையும் என்று தலைவி வருந்திய நள்ளிரவு புனையப்படுகிறது.

முழவு போன்ற பருத்துண்ட அடிப்பாகத்தைஉடைய மேல் பகுதி அகன்று அமைந்த பனை மரத்தின் கொழுவிய மடல்களின் ஊடே சிறு குச்சிகளால் கட்டப்பட்ட சிறு கூடு உள்ளது. இதில் கரிய நிற கால்களையுடைய அன்றிலின், நன்கு முற்றிய கருப்பத்தால் வயானோடியுடன்

கூடிய பெண் பறவையின் ஒலி, ஆண், பறவையைக் கூவி அழைக்கிறது. இவ்வாறு முரலும் ஒலி, தலைவியின் தூக்கத்தை கெடுக்கும் நள்ளிரவு அது. இந்நிலையில் எங்ஙன் ஆற்றிருப்பேன் எனத் தலைவி, தோழியிடம் வருந்தி கூறுகிறாள்.

எந்நேரமும் தலைவனின் நினைவால் வாடும் தலைவிக்குத் தலைவன் அருகில் இல்லாவிடினும் இருப்பதாகவே எண்ணுகிறாள். இன்றைய திரைப்படங்களில் உள்ளபல காட்சிகள் சங்க இலக்கியத்தில் இருந்து எடுத்தாளப்பட்டவையே என்பதற்கு இப்பாடல் சரியான சான்று.

தலைவனின் பிரிவைப் பிரிவாக எண்ணாத தலைவி, எப்போதும் தன்னுடன் இருப்பதாகவே எண்ணி மகிழ்கின்றாள். தானாகப் பேசிக் கொள்வது, தானாகச் சிரித்துக் கொள்வது, தலைவனுக்குப் பிடித்த செயல்களைச் செய்வது போன்றவை தலைவன் மீது கொண்டுள்ள அளவு கடந்த காதலை வெளிப்படுத்துகிறது. இது அன்பின் வெளிப்பாடான உளவியல் செய்தியினை வெளிப்படுத்துகிறது.

சங்க இலக்கியங்கள் யாவுமே வாழ்வின் பிரதிபலிப்புகளே. மானுட வாழ்வின் இன்றியமையாமையை இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. பரபரப்பான அதிவேகமான இன்றைய காலச் சூழலில் மறந்து போன அழகான காதல் உணர்வுகளை இலக்கியங்கள் நமக்கு புதுப்பித்துப் புத்துணர்வு ஊட்டுவதாக அமைந்துள்ளன.

அக வாழ்வுக்குரிய அடிப்படைகள் நிரம்பியிருக்க கூடிய நிலம் மருதநிலம். மற்ற நிலங்களில் ஒரு குறிப்பிட்ட தொழில் செய்பவர்கள் இருக்கும் இடம். ஆனால் அனைத்து தொழில் செய்பவர்களும் ஒருங்கிணைந்து சார்பு வாழ்க்கை வாழும் மருதம். பாதுகாப்பான வாழ்க்கை முறை, எல்லா நிலங்களில் இருந்தும் உற்பத்தியாகும் பொருள்கள்

சங்கமிக்கும் இடம் மருதம். வாழ்க்கை முறை ஆய்வுக்குரிய முடிவுகளின் பிரதிபலிப்பாக இருப்பது மருதம்.

இந்நிலத்தில் வாழக்கூடிய தலைவனும், தலைவியும் மற்றவர்க்கு எடுத்துக்காட்டாகவும் வழிகாட்டியாகவும் உளவியல் கூறுகள் அதிகம் நிறைந்ததாகவும் சித்தரிக்கப்படுகிறது. பெண்கள் தங்கள் வாழ்க்கையைக் குறைபாடு இல்லமல் தன்னிலை தாளாமல் பாதுகாக்க வேண்டிய வகையில் பேணிக் காப்பது தமிழ்ச் சமுதாயப் பெண்களின் தனித்தன்மை. பெண்களின் உள்ளக் குறிப்பினையும், மனப் போராட்டங்களையும் உணர்த்தும் உளவியல் செய்தியாகக் காட்டப்படுகிறது.

## மருத நிலத் தலைவி

வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரிபாயும் மருதநிலம் நீர்வளம் நிறைந்த பகுதியாகும். மருதநிலைத்தில்தான் மக்கள் கூட்டாக ஒருங்கிணைந்து வாழ்ந்தார்கள் என்று வரலாற்றாய்வாளர்களால் குறிப்பிடப்படுகின்றது. தலைவியின் மனமானது களவுக் காலத்தில், தலைவன் பல காரணங்களால் தலைவியைப் பிரியும் போதும், கற்புக் காலத்தில் பொருளீட்டுதற் பொருட்டும் பரத்தையர் மாட்டுப் புரியும் போதும் தலைவி ஊடல் கொள்வாள். மருதத்திணையின் ஒழுக்கம் ஊடலும், ஊடல் நிமித்தமாக அமைந்தமையால், மருத நிலப்பாடல்கள் தலைவன் பரத்தையிற் பிரிவினை மேற்கொள்வதாகக் காட்டுகின்றன. தலைவனது இச்செயலால் தலைவி மனதளவில் வேதனையடைகின்றாள்.

## தலைவியின் புலம்பல்

ஆடல் மகள் வீடு சென்று திரும்பிய தலைவனைத் தோழி தலைவியைச் சமாதானம் செய்து ஏற்றுக் கொள்ளும்படி வேண்டுகின்றாள். கோபிக்காதே இப்போது தான் திரும்பி வந்துவிட்டாரே என்றாள் தோழி. என் மீது காதல்

*இருந்தால் அவர் ஆடல் மகள் வீடு செல்வாரா? என்றாள் அவள். இப்பொழுது தான் வந்து விட்டாரே, வரட்டும், நான் வேண்டாம் என்றா சொல்கிறேன். அன்னைப்போல் அன்பு காட்டுகிறேன், அன்னை பிரிவதில்லையா? அது போலாகட்டும், அப்பனைப் போல் அவர் ஆணையிடட்டும் அடங்கி நடக்கிறேன். ஆனால் காதலர் என்ற பேச்சுக்கு இடமில்லை. எனவே ஊடலுக்கும் இடம் இல்லை என்று தனது ஆற்றாமையை வெளிப்படுத்துகின்றாள்.*

> ***'நல்நலம் தொலைய, நலம்மிகச்சாய்***
>
> ***இன்உயிர் கழியினும் உரையல், அவர்நமக்கு'***
>
> ***அன்னையும் அத்தனும் அல்லரோ?'*** [38]

***காதல் வயப்பட்ட தலைவியின் குரல்***

> ***'குக்கூ என்றது தோழி, அதன் எதிர்***
>
> ***துட்கென்றது என் தூஉ நெஞ்சம்***
>
> . . . . . .
>
> ***வாள்போல் வைகறை வந்தன்றால் எனவே'*** [39]

*கோழி கூவியதும், வைகறை என்னும் வாள் வந்து காதலனைத் தன்னிடமிருந்து பிரித்து விடுமோ என அஞ்சுகிறாள் காதலி. இப்போது இவன் போனால் மறுபடியும் எப்போது சந்திப்போமா என்ற அச்சத்தையும் இப்பாடல் உள்ளடக்கி உள்ளது.*

### தலைவி கடிந்துரைத்தல்

*தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையுடன் காவிரி நதியில் நீராடினாள். சில நாட்கள் கழிந்த பின்னர், அவனது நெஞ்சம் மீண்டும் தலைவியை நாட, தலைவியிடம் சென்றான். அச்சமயம் தலைவிதான் புதல்வருடன் சென்றான். அச்சமயம் தலைவிதன் புதல்வருடன் இருப்பதைக்*

*கண்டு, மாசில் கற்பின் புதல்வன் தாய் என்று பொய்யுரை கூறினான். அதைக் கேட்ட தலைவி தலைவனை நோக்கி,*

***‘. . . . . உறந்தை யாங்கன்***
***கழைநிலை பெறா அக்காவிரி நீத்தங்***
***இனிமையெவன் செய்வது பொய்ம்மொழி எமக்கே’ (அகம் 6)*** [40]

*என்னும் அகநானூற்றுப் பாடல் வழி, பரத்தையுடன் நேற்று நீ புலனாடிவிட்டு, இன்று என்னிடம் வந்து கற்புடையவள், புதல்வன் தாய் என்று பொய் மொழிகளைப் புகன்று என்னுடைய முதுமையை எள்ள வேண்டாம் என்று கடிந்துரைக்கின்றாள். மேலும், இப்பாடலில் தலைவி, தன் புதல்வனைப் பெற்றதால் தான் இளமை சிறிது கழிந்துவிட்டது என்று கருதுகின்றாள். இக்கருத்து, ஐங்குறுநூற்றிலும் பயின்று வரும். இது பரத்தையோடு பொழுதுபோக்கி நெடிது துய்த்து வந்த தலைமகனோடு தலைமகள் புலந்து சொல்லிய துறையோடு இணைந்து செல்கிறது. தலைவியின் வேதனை துன்ப உளவியலாகப் பேசப்படுகிறது.*

## பெண்ணின் கற்பு

*தமிழ்ச் சமுதாயத்தில் கற்பு என்னும் சொல்லுக்கே ஒரு தனிமதிப்பு இருந்து வருகிறது. கற்பு ஒழுக்கம் என்பதைப் பெண்களுக்கே வலியுறுத்தி அதற்குப் பல்வேறு பண்புகளையும் நடைமுறைகளையும் ஏற்று வந்திருக்கிறது தமிழ்ச் சமுதாயம். அந்த பண்புமுறைகளிலேயே ஒன்று, கணவன் ஒழுக்கக் கேடானவனாக இருந்தாலும் தமிழ்ப்பெண் அவனை வெறுத்து விடாமல் ஏற்றுப் போற்றுகிறாள் என்பது. இதையே தமிழ்ப் பண்பின் ஒரு முக்கியக் கூறு என்று இக்காலத்தார் சொல்லி வருகிறார்கள். தமிழ் இலக்கியமும் இதையே ‘கடவுட்கற்பு’ என்று சிறப்பிக்கிறது. கணவனோடு, துய்க்கின்ற தன்னுடைய இன்பத்தை இழப்பதோடு, அவனுடைய தவறான நடத்தையையும் பொறுத்துக் கொள்வதே*

*பெண்மைக்கு சிறப்பு என்னும் பிற்போக்குக் கருத்தை மெய்ப்பிக்கும் விதமாகவே பல சங்கப் பாடல்கள் அமைந்துள்ளன.*

**பூங்கொடியும் பெண்கொடியும்**

*கணவன் தன்னைவிட்டுப் பரத்தையை நாடிச் சென்றாலும் அவனுக்காகக் காத்திருந்து மன்னித்து ஏற்றுக் கொள்ளும் மனம் தலைவியிடம் இருந்தது. வயலிலே நெய்தல் மலர் மலர்கிறது. களைந்தெறிகின்றனர் உழவர். சீ! இனி இங்கே மலர்தல் கூடாது என்று எண்ணுகிறதா மலர்? இல்லை மீண்டும் பயிராகி மலர்கிறது அல்லவா? அத்தகைய குணமுடைய கொடி போன்றவள் தலைவி. தலைவன் எவ்வளவு இடர் செய்தாலும் மீண்டும் மீண்டும் அவன்பால் அவள் அன்பு செலுத்துவாள் என்பது உண்மையே என்னும் கருத்தமைந்த பாடல் பின்வருமாறு.*

***'கைவினை மாக்கள் தம் செய்வினை முடிமார்***
***நீ எமக்கு இன்னாதன பல செய்யினும்***
***நின் இமன்று அமைதல் வல்லாமாதே'*** [41]

*இப்பாடலில் மன்னிக்கும் உளவியல் பொதிந்துள்ளது.*

*ஒரு காலத்தில் இவளிடம் எவ்வளவோ அன்பாக இருந்து இன்பம் தந்த தலைவன் இப்போது பரத்தையிடம் போய்விட்டான் அதை நினைத்து வேதனைப்படும் தலைவியின் நிலையை,*

**'வேம்பின் பைங்காய் என் தோழிதரினே,**
**தேம் பூங்கட்டி, என்றனிர், இனியே**
**. . . . வெய்ய உவர்க்கும், என்றனர்**
***ஐய ஆற்றல் அன்பின் பாலே'*** [42]

*என்று தோழி கூறி தலைவியை ஆற்றுப் படுத்துகிறாள்.*

**தலைவியின் அன்புநிலை**

*கணவன் பரத்தையோடு மகிழ்ந்திருக்கிறான். மனைவி வருந்தியிருக்கிறாள். அது கண்ட தோழி ஆறுதலான மொழி கூற விரும்பினாள். இப்படி ஒரு மனிதரும் இருப்பாரா? என்ன கல் நெஞ்சு, கிளிபோல், உள்ள மனைவியை விட்டுக் குரங்கு போன்ற காமக்கிழத்தி பின் திரிகிறாரே என்றாள். உடனே மனைவிக்கும் கோபம் வந்துவிட்டது. என்ன இருந்தாலும் கொண்ட கணவன் அல்லவா? பிறர் குறை கூறினால் பொறுக்குமா? தலைவனை எச்சூழலிலும் விட்டுக் கொடுக்காத அவன் காதல் உணர்வு உளவியல் கூறப்பட்டுள்ளது.*

*அது ஏன் நமக்கு? கன்றின் பக்கத்திலேயே எருமையைக் கட்விட்டுப் போகின்றான் உழவன். எருமை என்ன செய்கிறது, கன்றைவிட்டு அப்பால் போகிறதா? இல்லையே அந்த மாதிரிதான். என்னையும் என் குழந்தையையும் விட்டு அவன் போயிருக்கிறான். திரும்பி வரமாட்டானா? வந்துவிடுவான். எனவே, அவன் வரும் வரையில் குடும்ப வேலைகளைக் கவனிப்போம் என்றாள்! கணவன் தன்னை விட்டுப் பிரிந்தாலும் அவனை விட்டுக் கொடுக்காத தலைவியின் மனநிலை இங்கு வெளிப்படுகிறது.*

***'இது மற்ற எனனோ தோழி! துணியிடை***
***இன்னர் என்னும் இன்னாக்கிளவி***
……
***இருமருப்பு எருமை ஈன்றணிக்காரான்***
***பெருமுது பெண்டிரேம் ஆகிய நமக்கே?'***[43]

*என்னும் இப்பாடலில் இருந்து தலைவியின் மென்மையான உள்ளமும் காதற் சிறப்பும் வெளிப்படுகின்றன. தலைவன் மீது மிகுந்த நம்பிக்கை கொண்டவளாகவும் அன்பு மிகுதியால் தலைவனது பரத்தமை*

ஒழுக்கத்தையும் விரும்பாமல் ஊடியிருப்பவளாகவும் பல்வேறு பரிணாமங்களில் காட்சியளிக்கிறாள் தலைவி.

**சங்க மருதத்திணைப் பாடல்களில் உளவியல்**

கண்டும் காணாமலும் சென்ற தலைவனை நினைத்து தலைவி தோழிக்குக் கூறியது

***ஓர் ஊர் வாழினும் சேரி வாரார்;***
***சேரி வரினும் ஆர முயங்கார்;***
***ஏலி லாளர் சுடலை போலக்***
***காணாக் கழிய மன்னே நாண் அட்டு,***
***நல்லறிவு இழந்த காமம்***
***வில் உமிழ் கணையின் சென்றுசேன்.***[44]

தோழி! ஒரே ஊரில் வாழ்ந்தாலும் தலைவன் நாம் வாழும் பகுதிக்கு வர மாட்டார். நாமிருக்கும் இடம் வந்தாலும் நம்மை ஆர்வமாக நிறைவாகத் தழுவமாட்டார். நம் நாணத்தையும் அறிவையும் இழக்க வைத்த காமம் வில்லிருந்து புறப்பட்ட அம்புபோல் வேகமாகத் தொலையில் சென்று விழுந்தது. அவ்வாறு காம உணர்வானது முற்றும் ஒழியுமாறு தொடர்பற்றவர்களின் சுடுகாட்டைக் கண்டு வெறுத்து விலகிப் போகின்றவரைப் போல என்னைக் கண்டும் காணாதவர் போல விலகிச் செல்கின்றார் என்று உரைக்கிறாள் தோழி.

காம உணர்வால் தவிக்கும் தலைவியைத் தழுவ விரும்பாமல் செல்லும் தலைவனின் மன நிலையையும் பாராமுகத்தையும் கண்டு புலம்பும் தலைவியின் உள்ள உணர்வானது இப்பாட்டில் வெளிப்படுகிறது.

காமம் கட்டுக்கடங்காதது. பெண் என்றாலும் நாணத்தை நினைத்து வெளிப்படுத்தாமல் மறைத்து வைக்கும் தன்மை இல்லாதது. காமம்

கொடியது என்ற நிலையை வெளிப்படுத்தும் இப்பாடலில் உளவியல் செய்தியாகத் தலைவியின் உள்ள உணர்வும் உடல் உணர்வும் சேர்ந்து வெளிப்படுவதை உணர முடிகிறது.

அன்பின் கண் ஆற்றாதவளாய் தலைவி தனக்குத் தானே கூறிய தலைவன் மேல் கொண்ட காதலினை எடுத்து இயம்புகின்றாள் என்ற செய்தியை உணர்த்துகிறது இப்பாடல்.

**'கண்தர வந்த காம ஒள்எரி**
**என்புஉற நலயினும் அவரொடு பேணிச்**
**சென்றுநாம் முயங்கற்கு அருங் காட்சியமே**
**வந்து அஞர் களைதலை அவர்ஆற் றலரே;**
**உய்த்தனர் விடாஅர் பிரித்துஇடை களையார்**
**குப்பைக் கோழித் தனிப்போர் போல**
**விளிவாங்கு விளியினி அல்லது**
**களைவோர் இலையான் உற்ற நோயே'[45]**

உள்ளத்து உணர்வுகளின் வெளிப்பாடே கண்தான். அக்கண் தந்ததால் ஏற்பட்ட அன்பின் மிகுதியாகிய நோய் கனன்று மிகுந்து எழும் நெருப்பு என் எலும்பில் நுழைந்து வருந்தினாலும் அவரைத் தேடிச் சென்று தழுவி இன்புறுதற்குக் காண இயலாத நிலையில் உள்ளேன். அவரும் என் துன்பத்தை நீக்குதற்கு முயன்றிலர். குப்பைக் கோழிகள் தாமாகத் தனித்துப் போரிடும் போது யாரும் அவற்றைப் பிரித்து சண்டையை நிறுத்தமாட்டார்கள். அவைதாமே சண்டையிட்டு அழியும். அக்கோழிகள் அழிவது போல என் அன்புநோய் அழிவதன்றி இந்நோயை நீக்குவார் யாரும் இலர் என்பது இப்பாடலின் கருத்து.

தன் அன்பினைப் பகிர்ந்து கொள்ளக்கூட என்னுடைய தலைவன் அருகில் இல்லை. தலைவனைத் தழுவி இன்புற்று மகிழ்ந்து என் அன்பினை

*வெளிப்படுத்த ஆற்றாதவளாய் உள்ளேன் எனத் தன் தனிமை நிலையை வெளிப்படுத்தும் பாடலாக அமைந்துள்ளது.*

*இப்பாடலில் உளவியல் செய்தியாக தனிமைத் துயர் தலைவியின் இயல்பினைக் கூறுகிறது.*

***'பொய்கை ஆம்பல் அணிநிறக் கொழுமுகை***
***வண்டுவாய் திறக்கும் தண்துறை ஊரனொடு***
***இருப்பின், இருமருங் கினமே; கிடப்பின்***
***வில்லக விரலின் பொருந்தி; அவன்***
***நல்அகம் சேரின், ஒரு மருங்கினமே'[46]***

*குளத்தில் உள்ள அழகிய நிறம் உள்ள வளமையான ஆம்பல் மொட்டின் வண்டு அதன் வாய் திறந்து மலரச் செய்யும் குளிர்ச்சி பொருந்திய மருத நிலத் தலைவனோடு அருகில் இருந்தால் இரண்டு உடலை உடையேன். அவருடன் கூடித் துயிலும் போது வில்லை இறுகப் பிடித்த விரல்கள் ஒன்றுசேர்ந்து பற்றுதல் போல் அவனது நல்ல மார்பினைச் சேர்ந்தால் ஓர் உடலை உடையேன் என்கிறாள் பரத்தை பரத்தைக் கூற்றாக அமைந்த இப்பாடலில்,*

*தலைவனின் பிரிவு ஆற்றாமையை விளக்குகிறது. தலைவன் அருகில் இல்லாததால் உடல்கள் இரண்டாயிற்று. அவன் மார்பினைத் தழுவி அவனோடு கூடியிருக்கும்போது, உடல்கள் இரண்டும் ஒன்றாயிற்று எனத் தான் தலைவன் மீது கொண்ட தீராத காதலை வெளிப்படுத்தும் உளவியல் செய்தியாக வெளிப்படுத்துகிறது.*

***'அறுசில், கால அஞ்சிறைத் தும்பி***
***நூற்றிதழ்த் தாமரைப் பூச்சினை சீக்கும்,***
***காம்பு கண் டன்ன தூம்புடை, வேழத்துத்***

***துறைநணி ஊரனை உள்ளி, என்***

***இறைஏர் எல்வளை நெகிழ்ந்து ஓடும்மே.'***[47]

*தலைவி கூற்றாக அமைந்த மருதநிலைப் பாடலில், ஆறுசிறிய கால்களையும் அழகிய சிறகுகளையும் உடைய வண்டு, நூறு இதழ்கள் உள்ள தாமரைப் பூவில் முட்டைகளை இடுகின்றது. அவற்றை அருகில் வளர்த்த உன் துளையுடைய நாணலில் பூக்கள் அழிக்கின்றன. இவற்றை உடைய ஊரன் என் தலைவன். அவனை மிகுதியாக நினைத்துக் கொண்டிருப்பதால் என் முன்கை வளையல்கள் நெகிழ்ந்து கழன்றோடுகின்றன.*

*தலைவனுடைய பிரிவின் காரணமாக அவன் நினைவலைகள் தலைவிக்கு வந்து வந்து மோதுகின்றன. அதன் விளைவால் அவள் முன்கை வளையல்கள் கழன்று விடுகின்றன என்றுரைக்கிறாள் தலைவி. தலைவனை பிரிந்து வாழ முடியாமல் தவிக்கும் தலைவியின் மன வேதனையை வெளிப்படுத்தும் உளவியல் செய்தியாக வெளிப்படுகிறது.*

*தோழி தலைமகட்குக் கூறும் கூற்றாக அமைந்த இப்பாடலில்,*

***'தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கனவனொடு***

***பிள்ளை தின்னும் முதலைத்து அவன்ஊர்***

***எய்தினன் ஆகின்று கொல்லோ? மகிழ்நன்***

***பொலந்தொடி தெளிர்ப்ப முயங்கியவர்***

***நலம் கொண்டு துறப்பது எவன்கொல்? அன்னாய்!'***[48]

*நண்டு தனது பார்ப்புகளை ஈன்ற உடன் இறந்து விடும். தான் ஈன்ற பிள்ளையே திண்ணும் முதலை. இவை வாழும் ஊரை உடையவன் நம் தலைவன். நம் வளையல்கள் ஒலிக்க நம்முடன் இணைந்தான். இப்போது நம் நலம் நுகர்ந்த பின்பு நம்மைத் துறந்து நம்மை வாடச் செய்வது ஏன்? என்று தெரியவில்லை? எனப் புலம்புகிறாள்.*

*நண்டு, முதலை போன்ற விலங்குப் பண்புகளை நம் தலைவனும் கொண்டிருப்பானோ? என்று கேட்பது போல் அமைகிறது இப்பாடல்.*

*கூடிவிட்டு பிரிந்து போன பிறகு நம் தலைவன் நம்மை பார்க்க வராமல் வாடச் செய்யும் தலைவனின் பண்பு நலனை இழித்துரைப்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.*

*தலைமகளுக்குத் தோழி கூறியது.*

***'துணையோர் செல்வமும் யாமும் வருந்துதும்***
***வஞ்சி ஓங்கிய யாணர் ஊர!***
***தஞ்சம் அருளாய்நீயே; நின்***
***நெஞ்சம் பெற்ற இவளுமார் அழுமே***
***வஞ்சி மரங்கள் உயர்ந்து வளர்ந்த***
***நாளும் புது வருவாயை உடைய ஊரனே!'***[49]

*தலைவியும் அவன் சுற்றமும் உன் பிரிவால் மிகவும் வருந்துகிறோம். நீதான் எங்களுக்குத் தஞ்சம் அளிக்க வேண்டும். உன் அன்பைப் பெற்ற இவளும் அழுகின்றாள் எனத் தோழி கூறுவதாக அமைந்த இப்பாடலில், தலைவி மட்டுமல்ல, தலைவியின் சுற்றத்தாரும் உன் பிரிவால் வாடி நிற்கிறோம். பிரிவின் கண் தலைவியின் அழும் மனநிலையை புலப்படுத்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.*

*நாணத்தால் வெட்கமடைந்த தலைவியை நினைத்துத் தலைவன் பாணற்குக் கூறியதாக அமைந்துள்ளது இப்பாடல்.*

***'வாராய், பாண! நகுகம் நேரிழை***
***கடும்புடைக் கடுஞ்சூல் நம்குடிக்கு உதவி,***
***நெய்யோடு இமைக்கம் ஐயவித் திறள்காழ்***
***விளங்குநகர் விளங்கக் கிடந்தோட் குறுகி,***

***புதல்வன் ஈன்றெனப் பெயர்பெயர்த்து அங்வரித்***

***திதலை அல்குல் முதுப்பெண்டு ஆகி,***

***துஞ்சுதியோ, மெல் அம்சில் ஓதி? எனப்***

***பல்மான் அகட்டில் குவளை ஒற்றி,***

***உள்ளினென் உறையும் எற்கண்டு, மெல்ல,***

***முகைநான் முறுவல் தோற்றி***

***தகைமலர் உண்கண் கைபுதைத் ததுவே’[50]***

*பாணனே! என் பக்கம் வருக, சிறந்த அணிகலன்களை உடையவள், என் சுற்றத்தார் சுற்றி நின்று பாதுகாக்க அழகிய மகவை ஈன்றாள். நெய்யுடன் கலந்து ஒளிர்கின்ற சிறுவெண் கடுகாடுய திரண்ட விதைகளை மனையெங்கும் பூசி அயர்ந்து படுக்கையில் படுத்திருந்தாள். அவளை நெருங்கி அழகிய கூந்தலை உடையவளே! நீ பெறுதற்கரிய புதல்வனைப் பெற்றதால் தாய் என்ற பெயரைப் பெற்று அழகிய தேமலை உடையஅடி வயிற்றினையும் முதலிய பெண் தன்மையையும் பெற்று உறங்குகிறாய் என்று கூறி அவளின் வயிற்றிடத்தை என் கையில் உள்ள குவளை மலரால் தீண்டினேன். தீண்டி நின்ற என்னைப் பார்த்து முல்லையின் நாளரும்பு போன்ற கையைத் தோற்றுவித்து நீல மணி போல் அமைந்ததன் கண்களைக் கைகளில் புதைத்துக் கொண்டது எனக்குத் நகைப்பைத் தருகின்றது.*

*தலைவன் தன் பாணனிடம் தன் தலைவியின் இயல்பினை கூறி அவள் வெட்கத்தால் தலை குனிந்ததை நினைத்து நினைத்து மகிழ்ச்சியடைகிறான். தலைவியின் நாணம் தலைவனுக்கு சிரிப்பைத் தருவதாகக் கூறி மகிழ்கிறான்.*

*இப்பாடல், தலைவியின் இயல்பு நிலையும், தலைவன் தலைவி மீது கொண்டுள்ள அன்பினையும் வெளிப்படுத்தவதாக அமைந்துள்ளது.*

## தொகுப்புரை

*மருதநில மக்களின் வாழ்வியல் முறை பிற நிலத்து மாந்தரினும் தனித்தன்மை பெற்றிருந்தனர். ஆணும், பெண்ணும் ஒருவரையொருவர் சார்ந்தே, ஒருவரையொருவர் போற்றியே ஒருவருக்கொருவர் உறுதுணையாக நின்றே வாழ்தலென நிலவிய பழந்தமிழரின் பிறதிணை ஒழுக்க மரபுகளும் மருதத்தில் உண்டாயிற்று.*

*சீரும் சிறப்புடனும், உயர்ந்த குறிக்கோளுடனும் ஒரு சமுதாயம் வழவேண்டுமாயின், அக வாழ்வியல் அமைதி நிலைத்திருத்தல் வேண்டும். இல்லறத்தை தமிழன் கூறிய முறையில் மேற்கொள்வதால், மனிதன் தன்னலத்திலிருந்து விடுபட முடிந்தது.*

*பெண்ணின் உடல் கற்பை விட உள்ளக் கற்பை மதித்த மனித சமுதாயம் சங்க கால மரபினர். பெண்ணின் உடலை மற்றவர் பாதுகாக்க முடியும். உள்ளத்தைப் பிறர் காக்க முடியாது. அவள் மட்டுமே காக்க முடியும் என்ற உண்மையை அறிந்த சமுதாய மக்கள் வாழ்ந்த காலமாக சங்க காலம் கருதப்பட்டது.*

*தலைவன் மீது கொண்டு அளவிடாத காதலை வெளிப்படுத்தும் விதமாக ஊடல் திகழ்கிறது. அன்பின் மிகுதியே ஊடல்தான். ஊடல்தான் காமத்திற்கு இன்பம் என்பதை உணர்த்தவே சங்க இலக்கியங்கள் படைக்கப்பட்டிருக்கின்றன.*

*பிரிவு அன்பின் ஆழத்தை அதிகரிக்கும் வாயிலாக அமைகின்றது. போராடும் மன உணர்வுகளோடு வாழ்வின் பல நிலைகளை தாண்டிச் செல்லும் மனப்பக்குவத்தை பெண்கள் ஏற்றுக் கொண்டனர் என்ற செய்தி சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது.*

# இயல் 2

## குறிப்புகள்

1. தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ. 5.
2. மேலது, நூ. 90
3. மேலது, 95/
4. கம்பராமாயணம், பாலகாண்டம், பாத விமோச்சனப் படலம்.
5. திருக்குறள், 57.
6. குறுந்தொகை, பா. 93.
7. மேலது, பா. 59.
8. மேலது, பா. 169.
9. மேலது, பா. 33.
10. மேலது,
11. மேலது, பா. 171.
12. மேலது, பா. 181
13. மேலது, பா. 46.
14. மேலது, பா. 50.
15. மேலது, பா. 31.
16. வெ. பாலசுப்ரமணியன், நற்றிணை, ப. 460.
17. நற்றிணை, பா. 250.
18. குறுந்தொகை, பா. 48.
19. மேலது, பா. 456.

20. குறுந்தொகை, பா. 202.

21. மேலது, பா. 28.

22. மேலது, பா. 202.

23. உ.அ. தமிழண்ணல், குறுந்தொகை, பா. 104.

24. மேலது, பா. 176.

25. மேலது, பா. 50.

26. நற்றிணை, பா. 219.

27. ஐங்குறுநூறு, பா. 16.

28. மேலது, பா. 17.

29. நற்றிணை, பா. 230.

30. மேலது, பா. 330.

31. அகநானூறு, பா. 97.

32. நற்றிணை, பா. 60.

33. ஐங்குறுநூறு, பா. 65.

34. குறுந்தொகை, பா. 8.

35. நற்றிணை, பா. 210.

36. அகநானூறு, பா. 46.

37. நற்றிணை மூலமும் உரையும், பா. 152.

38. குறுந்தொகை, பா. 93.

39. மேலது, பா. 157.

40. அகநானூறு, பா. 6.

41. குறுந்தொகை, பா. 309.

42. மேலது, பா. 396.

43. மேலது, பா. 299.

44. மேலது, பா. 231.

45. குறுந்தொகை, பா. 305.

46. மேலது, பா. 370.

47. ஐங்குறுநூறு, பா. 20.

48. மேலது, பா. 24.

49. மேலது, பா. 50.

50. நற்றிணை பா. 370.

## இயல் 3

# உளவியல் நோக்கில் திருவள்ளுவரும் சிக்மண்ட் பிராய்டும்

*பண்டைத் தமிழ் மக்களின் காதல் வாழ்க்கைச் சிறப்பு தெள்ளிதிற் புலனாகும் வண்ணம் அமைந்திருப்பது வள்ளுவத்தின் காமத்துப்பால் எனப்படும் இன்பத்துப்பாலாகும். இவற்றுக்கு அடிநாதம் அன்புதான். திருக்குறளின் இதயமே அன்புதான். திருக்குறளின் அறத்துப்பாலும் பொருட்பாலும் நேர்க்கூற்றுகளாக அமையவில்லை. ஆனால், காமத்துப்பாலில் இடம்பெற்றுள்ள 250 குறட்பாக்களும் நேர்க்கூற்றாகத் தலைவன், தலைவி, தோழி பேசுபவவையாக அமைந்துள்ளன. அன்பின் ஆழத்தைப் பிழிந்தெடுத்துச் சாறாக நமக்கு கிடைக்கப் பெற்றவை களவியலும் கற்பியலும் தான். தலைவன் தலைவி மீது கொண்ட காதலும் தலைவனின் தலைவி மீது கொண்ட மாறா அன்பும் மிகுதியாக பேசப்பட்ட அதிகாரங்கள் இவை இரண்டும்தான்.*

*காதல் உடலுக்கு நல்லது, உள்ளத்துக்கு நல்லது, ஊருக்கு நல்லது, உலகத்துக்கே நல்லது. அஃறிணை உயிர்களின் காதல் 'கல்லாக்காமம், இயற்கைவீறு, மொழிபேசும் மக்களினத்தின் காதலோ நினைவில் இனித்து, அறிவில் விளங்கிக் கல்வியில் வளர்வது'. இக்கல்வித் தெளிவிற்குத் தமிழ்ப் பேரினம் கண்ட அகத்திணைதான் திருவள்ளுவரின் காமத்துப்பால். காதல் சிறப்பு கொண்ட நூல் வள்ளுவம், நெறியாக, அளவாக, உரமாக, நாணமாகக், கற்பாக, காமக் கூறுகளாக அமைந்த நூல் திருக்குறள்.*

*மலரினும் மெல்லியது காதல். காதலுக்கு இலக்கணம் கண்ட நூல் வள்ளுவம். ஓர் இனத்துக்குரிய பண்புதான், அந்த இனத்துக்கே உரிய இலக்கியப் பண்பாகவும் அமையும். காதற் கண்ணுடன் உலகியலை அணுகிய*

ஓர் இனம் தமிழினம் மட்டும்தான். அது காதற் இலக்கியங்கள் பலவற்றை படைத்தது. உலகிற்களித்தது. இது கூறும் காதல் உலக மனித இனத்திற்கே பொது பறை சாற்றியதால் 'உலகப் பொதுமறை' என்ற பொதுமைப் பண்பை பெற்ற நூல் திருக்குறள். வள்ளுவனின் காதல் அறம் சார்ந்தது. உலகம் ஒப்புவது. மக்கட்கு இயல்வது. இலக்கியத்துக்கு இசைந்தது. விரித்துப் பேசும் இயல்பினை உடையது. பல காதற் கவிதைகளுக்கு இந்நூல் அடித்தளமாய் அமைந்தது. காதல் தமிழியத்துக்கு இந்நூல் நிகரற்ற கொடை. இந்நூல் முல்லைச் சான்ற கற்பினைப் பேசும் நூலாக அமைந்துள்ளது. காதல் தமிழியத்தின் பரிசான இந்நூலைத் தமிழ் மக்கள் உயிரும் உள்ளமுமாக நேசிக்கின்றனர். அதனாலே தனிப்பெருமை கொள்கிறது.

பழங்காலச் சமுதாயத்தில் ஒருவகைக் குடும்பவொழுக்கம் போலவும் சமுதாயத் தேவைப் போலவும் ஒழுக்கக் கேடன்று என்பது போலவும் அது பரவிக் கிடந்ததையும் அது ஒளிவுமறைவின்றி இலக்கியப்படுத்தியதும் வள்ளுவத்தை மட்டுமே சாரும். தமிழ்ப்பண்பாடு வீட்டில் பெண்ணுக்குத் தலைமை தந்தது. நாட்டிலும் பெண் தலைமை ஏற்கும் காலம் இதுவாயிற்று. மக்கட்பெற்று, குடும்ப மரபைக் காக்கும் பெண்ணின் வீட்டுத்தலைமை இதனால் மாறிவிடுமெனத் தோன்றவில்லை. மனைவி இல்லாள் என்னும் சொல் வீட்டுத் தொடர்புடைய சொல்லே ஆகும். இப்பண்பாட்டின் வேரினைக் காட்டி விடும். பெண்ணினத்தைக் கொண்டு, சமுதாயத்தைக் கட்டுப்படுத்தலாம். ஒரு வரம்பிற்குக் கொண்டு வரலாம். தடுமாற்றங்களைத் தடுக்கலாம். பழந்தமிழர்கள் பெண்ணுக்குத் தந்த தலைமையும் உரிமையும் வள்ளுவத்தில் காணப்படுகிறது. பரத்தமைக் கேடிருந்த இடத்தில் மனைவியின் உரிமை மதிக்கப்பட்டமை இந்நூலின் வழி அறியமுடிகிறது.

அகத்தலைமை பெண்ணுக்கே உரியது. மகவைச் சுமக்கும் பெண்ணினத்துக்கே குடும்பத்தைச் சுமக்கும் பொறுப்பு உரியதும் எளியதும்

*நல்லதும் ஆகும். 'பெண்ணின் நெருந்தக்க யாவுள்' என்னும் கருத்திற்கிணங்க வள்ளுவம் பெண்ணியத்தின் சங்க இலக்கியங்கள் பலவற்றிற்கு மேற்கோளாகப் பொருத்தப்பட்டுள்ளது.*

***'பழம் போலும் சங்கப் பனுவலைக் கற்றால்***

***கிழம்போகும் கீழ்மையும் போம்'[1]***

*சங்கப் பனுவல்களின் தன்மையை விளக்குகிறது.*

*காமத்துப்பால் முதல் ஏழு அதிகாரங்கள் ஆண்பாற் கூற்றிற்குரியன. அடுத்த பன்னிரெண்டு அதிகாரங்கள் பெண்பாற் கூற்றிற்குரியன. காமத்துப் பாலுக்கு எனத் தனி நடையையும் திருவள்ளுவர் கையாண்டுள்ளார். இத்தனித்தன்மைகளால் காமத்துப்பாலை வேறு யாரேனும் எழுதி இருத்தல் வேண்டும் என்ற கருத்தும் நிலவுகிறது. ஆனால், ஆழ்ந்து உற்று நோக்கின் காமத்துப்பாலையும் திருவள்ளுவர்தான் எழுதியிருக்க வேண்டும் என்பது புலனாகிறது. திருவள்ளுவரின் இறுதி இலக்கு என்னவென்றால் மானுடவியல் மனிதம் வாழ்ந்தாக வேண்டும் என்று பரந்துபட்ட எண்ணமே காரணம் என்பது புலனாகும். வள்ளுவர் காலத்தில் ஆணும், பெண்ணும், சேர்ந்து வாழும் இல்லற வாழ்க்கை இன்பம் தராது என்ற கருத்து நன்கு பரப்பப் பெற்றது. வாழ்வில் தோன்றும் இன்பங்களை விட துன்பங்களே பலர் வாழ்க்கையில் திருப்புமுனையாக அமைந்துள்ளது.*

*சங்க இலக்கியத்தின் அகத்திணைப் பாடல்களில் பாலைத் திணைப் பாடல்களே மிகுதி. பிரியாத வாழ்க்கையில் உண்மையான இன்பம் இல்லை. ஆதலின் அன்பு பெருக்கெடுப்பதற்கு பாலை நெறி உயர் நெறியாக இருப்பதால் சங்கச் சான்றோர் பாலை பனுவல்களில் பெரும் சிந்தனை செலுத்தினர். இதன் ஆற்றான் மேலை நாட்டுக் கவிஞரான ஷெல்லி,*

"The Pleasure that is in sarrow is sweetee;

Than the Pleasure of Pleasure itself"[2]

என்கிறார். துன்பத்தில் தோன்றும்இன்பம், இன்பத்தில் தோன்றும் இன்பத்தைக் காட்டிலும் சிறந்தது என்றார். **வள்ளுவமும் பிராய்டும்**

திருவள்ளுவருக்கும் சிக்மண்ட் பிராய்டிற்கும் பல ஒற்றுமைகள் உள்ளன. அறவழியாக மனித இனத்தின் மன ஒழுக்க அறவாழ்வு, மக்கள் போற்றும் அரசியல் மட்டுமல்ல, மனித வாழ்வில் காமஉணர்ச்சியின் முதன்மையையும் வள்ளுவர் வகுத்துக் கூறியுள்ளார். சிக்மண்ட் பிராய்டும், ஒழுக்க விதிகள், மருத்துவ விதிகள், அரசியல், சமயம் உட்பட மக்கள் கூட்டம் அணி திரள்வது பற்றி ஆராய்ந்துள்ளனர். சிறப்பாகக் காமத்துப் பாலில் மனித இனத்தின் காம உணர்ச்சியின் முக்கியத்துவத்தையும் சிறப்பையும் விஞ்ஞான முறையில் முதன் முதலாக விளக்கியவர் பிராய்ட் ஆவார்.

## கனவு பற்றி வள்ளுவரும் பிராய்டும்

கனவுகள் அனைத்தும் அர்த்தமுள்ளவைதான் என்பது பிராய்டின் சித்தாந்தமாகும். ஒவ்வொரு கனவுக்கும் பின்னால் ஏதோ ஓர் உளக்கூறு அல்லது பல உளக்கூறுகள் தொடர்புப்பட்டிருக்கும். அந்த உளக்கூறுகளின் உந்துததால்தான் கனவுகள் பிறக்கின்றன. கனவு உருவாக்கத்திற்கான (Dream Formation) மூலக்காரணி (root cause) இந்த உந்தலாகத்தான் இருக்கும். இம்மூலக் காரணிகளைக் 'கனவுகளின் பொருளாகக் (Meaning of dream) காண்கிறார் பிராய்ட். கனவுகளின் பொருளைக் கண்டுபிடிப்பதுதான் கனவுப் பகுப்பாய்வு (dream analysis) அணுகுமுறையாகும். 'நனவிலியை மூலதனமாகக் கொண்ட பிராய்டியத்திற்குக் கனவுகள் மூலப் பொருட்களாக (raw materials) விளங்குகின்றன'[3]. நனவிலியைக் காண்பதற்கும் அதன் இயல்பைப் புரிந்து கொள்வதற்கும் துணை புரியும் கனவை 'நனவிலியின் அரசபாதை (Royal road to conscious)'[4] என்று வருணிக்கிறார் பிராய்ட்.

கனவு என்பது அமுக்கப்பட்ட விருப்பத்தின் நிறைவேற்றம். இது பிராய்டின் ஒரு வரிக் கனவுக் கோட்பாடாகும். பிராய்ட் கூற்றுப்படி கனவுகள் அனைத்தும் ஒழுங்கீனமானவையாகும். அவரின் கோட்பாட்டுக்கு மறுப்பு சொல்லும் வண்ணம் 'கனவுகள் அனைத்தும் ஒழுங்குடையவை'[5] என்று யூங் (Jung) கூறினார். எரிக் பிரோம் (Erick Fromm) போன்றோர் மேற்கூறிய இரண்டும் கனவு வெளிப்பாடுகளில் இருப்பதாகக் கூறுகின்றனர்.

ஒரு கனவு நான்கு முறைகளில் வெளிப்பட வாய்ப்புள்ளது. முதலாவதாக அண்மையில் நடந்த ஒரு முக்கியமான நிகழ்வு அதிலும் உணர்ச்சியோடு தொடர்புடைய நிகழ்வு அல்லது நிகழ்வுகள் கனவாக வெளிப்படும். சான்றாக, பகலில் நடந்த நிகழ்வு கனவில் தொடர்வதைக் காணலாம். குறிப்பிட்ட நபர் மீதான பாலியல் வேட்கை அப்படியே கனவில் வெளிப்படுவதுண்டு. இவ்விதக் கனவுகள் வெளிப்பாடானவை. பகுப்பாய்வு செய்ய வேண்டிய தேவையில்லை. இத்தகு கனவின் பொருண்மையை (Meaning) கனவாளனே உணர்ந்து கொள்ள முடியும்.

இரண்டாவதாக, அண்மையில் நடந்த பல முக்கிய நிகழ்வுகள் ஒன்றாகச் சேர்ந்து ஒரே கனவாக வெளிப்படும். இத்தகு கனவில் இருண்மை (obscurity) அதிகமாக இருக்கும். ஒன்றில் பல இருந்தாலே அது குழப்பத்தை உண்டு பண்ணக் கூடியது என்பது பொதுவான விதி. இவ்வகைக் கனவில் எந்த வேட்கைகள் அல்லது உணர்ச்சிகள் வெளிப்படுகின்றன என்பதைக் கனவினால் அறிந்து கொள்ள முடியாது. எனவே, பகுப்பாய்வு செய்ய வேண்டிய வட்டத்திற்கு இது அடங்கும். பகுப்பாய்வு செய்யாமல் இரண்டாவது வகைக்கனவை அறிந்து கொள்ள முடியாது.

மூன்றாவதாக, அண்மை நிகழ்வுகள் தொடர்புடையவை என்றாலும், அவை அப்படியே வெளிப்படாமல் அவற்றைப் போன்ற கொஞ்சம் பழைய நிகழ்வுகளும் எண்ணப் பதிவுகளும் சேர்ந்து வெளிப்படுகின்ற கனவாகும்.

எந்த ஒரு நிகழ்வும் தனித்தன்மை வாய்ந்தது என்று சொல்லுவதற்கு இல்லை. அந்நிகழ்வோடு இயைந்த நிகழ்வுகள் வேறு வடிவங்களில் வேறு காலக் கட்டங்களில் நிகழ்ந்திருக்கலாம். அவை அனைத்தும் மனதில் நினைவுருக்களாக (memories) இருக்கின்ற சூழலில் அண்மை நிகழ்வு இயைபுடைய பழைய நினைவுகளை வெளிக் கொண்டுவர, அவை கனவில் வெளிப்படுவதுண்டு. இவ்விதக் கனவில் ஒன்றுக்கு மேற்பட்ட நிகழ்வுகள் இணைந்திருப்பதால், இருண்மையை ஏற்படுத்துகிறது. எனவே, இதைக் கனவுப் பகுப்பாய்வு செய்ய வேண்டியுள்ளது. கடைசியாக, நான்காவது வகை கனவு ‘கனவின் உச்சக்கட்டம்’ என்றே சொல்லாம். அண்மையில் நிகழ்ந்த நிகழ்வின் தூண்டலால் (stimulys) மிகப் பழைய நினைவுருக்கல் அல்லது அடிமனத்தில் புதைந்தது போல எண்ணங்கள் கனவில் வெளிப்படும். குறிப்பாகக் குழந்தைப் பருவ எண்ணங்கள் இத்தகு கனவில் வெளிப்படும். மிகப் பழமை நினைவுகளின் வெளிப்பாடுகள் இக்கனவில் வெளிப்படுவதால் பல படிமுறைகள் (Processes) நிகழ்கின்றன. குழப்பமும், பகுத்தறிவின்மையும் ஒழுங்கீனமும் நிறைந்த கனவாக இக்கனவு விளங்குவதால் இருண்மையின் அளவு அதிகமாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

பிராய்டின் கனவுப் பகுப்பாய்வு நான்காவது கனவை மையம் கொண்டதாகும். மேற்கூறிய நான்கு வகைக் கனவுகளிலும் நனவிலி வெளிப்படும் என்றாலும் கடைசி வகைக் கனவில் முழுமையாக வெளிப்படும். பெரும்பாலான கனவுகள் நான்காவது வழி அடிப்படையில்தான் வெளிப்படுகின்றன. அவற்றுள் மறைந்து கிடக்கின்ற பொருண்மைகளை வெளிக்காட்டவே கனவுப் பகுப்பாய்வு பயன்படுகிறது.

கனவுப் பகுப்பாய்வுப் பற்றிப் புரிந்து கொள்ளும் முன் கனவு வாழ்வுக்கும் (dreaming Life) விழிப்பு வாழ்வுக்கும் (waking life) இடையே உள்ள உறவுகளைத் தெரிந்து கொள்ள வேண்டியுள்ளது அவசியமாகும்.

பொதுவாகக் கனவைத் தூக்கத்தின் காப்பாளராகப் (Guardian of sleep) பிராய்ட் காண்கிறார். இப்பகுப்பாய்வு முறையை வள்ளுவரும் கையாண்டுள்ளார். சிக்மண்ட் பிராய்டின் உளப்பகுப்பாய்வு அறிவியல் நூல் தோன்றுவதற்கு முன்னரே வள்ளுவம் தோன்றிற்று. எனினும் வள்ளுவரின் உளவியல் செய்திகளும் பிராய்டின் உளவியல் செய்திகளும் எவ்வாறு ஒத்த பண்பினை உடையது என்பதை பற்றி ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகக் கருதப்படுகிறது.

## வள்ளுவன் கண்ட கனவு

உள்ள உணர்வுகளின் ஊற்று கனவு ஆகும். நினைவுதான் கனவாகும். தலைவனை நினைத்துப் புலம்பிக் கொண்டிருக்கும் தலைவியின் கனவில் தோன்றும் தலைவனைப் பற்றித் தலைவி தோழியிடம் கூறி ஆறுதல் அடைகிறாள்.

> ***'காதலர் தூதொடு வந்த கனவினுக்(கு)***
> ***யாதுசெய் வேன்கொல் விருந்து'***[6]

காதலர் தனக்குத் தூது அனுப்புயிள்ளதாகத் தலைவி கனவு கண்டாள். 'தாம் வரப்போகும் நாளைத் தூது வழியாகத் தலைவர் அறிந்துள்ளார். இம்மகிழ்ச்சி செய்தியைக் கொண்டு வந்த தூதுக்கு எவ்வாறு விருந்தளிப்பேன்? என்ன விருந்து கொடுப்பேன்?' என எண்ணுகிறாள் தலைவி. தமிழர் வாழ்வில் தூதுவரும் இடம் பெற்றுள்ளனர் என்பதும், பாராட்டுவதற்கு விருந்துகள் நடத்துவது உண்டென்றும் இக்குறட்பாவில் கூறப்பட்டுள்ளது. இதில் கூறப்படும் உளவியல் செய்தி என்னவெனில் தூது வந்த தூதுவனுக்கு விருந்தளித்தல் தலைவன் மீது கொண்டுள்ள எண்ணற்ற அன்பினைப் புலப்படுத்துகிறது.

## அன்பின் ஆழம்

*பிரிவுதான் அன்பினை ஆழப்படுத்தும். இந்நிகழ்வு ஒவ்வொருவர் வாழ்விலும் நடைபெறும் அன்றாட நிகழ்வுகள், வேலை வாய்ப்பினைத் தேடி வெளிநாடுகளுக்கு செல்லும் கணவனைப் பிரிய மனமில்லாமல் தவிக்கும் மனைவியின் மன நிலையை நாம் அன்றாடம் காண்கிறோம்.*

*இவை பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே சங்க இலக்கியத்தில் 'பொருள்வயிற் பிரிவு' எனும் பொருண்மையில் அடக்கினர் சங்கச் சான்றோர்கள். பிரிவினால் வாடும் தலைவியின் நிலை கனவில் வெளிப்படுவதாகத் திருவள்ளுவர்,*

***'கயல் உண்கண் யான்இரப்பத் துஞ்சின் கலந்தார்க்***
***குயல்உண்மை சாற்றுவேன் மன்'[7]***

*கயல் போன்ற மையுண்ட கண்கள் உன்பிரிவின் கண் உறங்க மறுக்கின்றன எனப் புலம்பும் தலைவி,*

*தலைவன் பிரிவாற்றமையினால் தலைவி உறங்க முடியாது வருந்திக் கொண்டிருக்கிறாள். தலைவி உறங்கும் நிலை ஏற்படின் கனவு காண்டல் இயலும், கனவில் தலைவன் வருவான். அத்தலைவனிடம் தன் உள்ளக் கருத்தையெல்லாம் தலைவி ஒளியாது சொல்ல இயலும் என்பதை உணர்த்துகிறது.*

## கனவு காதலை வளர்க்கும்

*கனவில் தோன்றிக் காதலை வளர்ப்பதனால் அவரை உடனே அழைத்து வருவதற்குரிய எண்ணம் தோன்றுகிறது. அவர்பால் கொண்டுள்ள காதலைக் கனவு வளர்க்கிறது எனத் தலைவி கூறுவதிலிருந்து காதலை வளர்ப்பதில் கனவும் துணை புரிகின்றது என்று அறியலாம்.*

**'நனவினால் கண்டதூஉம் ஆங்கே; கனவும்தான்**

**கண்ட பொழுதே இனிது'[8]**

*கனவில் கண்ட பொழுது இனிதாகும் தலைவனின் நினைவு தலைவிக்கு இன்பத்தைத் பயப்பதாக உள்ளது என்பதை இக்குறட்பா கூறுகிறது.*

*நனவில் நிகழ்ந்தவாறே கனவிலும் நிகழ்வதால் கனவு கண்டதும் இன்பம் உண்டாகின்றது. நனவும் கனவும் ஒன்றாகி அவள் இன்பம் அடைகிறாள்.*

**'நனவென ஒன்றில்லை யாயின் கனவினால்**

**காதலர் நீங்கலர் மன்'[9]**

*கனவில் காதலர் வருவதும் இன்பமளிப்பதும் அவளுக்கு மகிழ்ச்சியைத் தருகின்றன. ஆனால், பகல் வருவதனால் உறக்கம் கலைகின்றது. உறக்கம் கலையும் போது கனவும் மறைகின்றது. ஆதலின், 'நனவு (பகல்) எதற்கு வருதல் வேண்டும். எப்பொழுதுமே கனவு உலகில் வாழ்ந்து அவருடன் இன்பம் துய்த்துக் கொண்டிருப்பேனே! நனவு என ஒன்று இருப்பதனால் அது கூடவில்லையே! என நனவை வெறுக்கின்றாள்*

## தலைவி. உள்ளம் ஒன்று நினைக்க உதடுகள் ஒன்று உச்சரிக்க

*காதலன் பிரிந்து சென்றுள்ளமையாலும், விரைந்து திரும்பாமையாலும், அன்புக்குரிய காதலனைக் கொடியார் என்கிறாள் தலைவி. கொடியார் என்று அவள் உதடுகள் நவின்றாலும், உள்ளம் அவ்வாறு நினையாது, தலைவன் கனவில் வந்து இன்பம் அளிப்பதுபோல் தோன்றி நனவில் மறைந்து விடுவதனால், கனவு நிலைத்து நில்லாமையால் வருந்தும் அவள் அதற்காக மீண்டும் கனவில் வரல் வேண்டும் எனத் தன்னைத்தானே வினவிக் கொள்கிறாள். தலைவன் மீது இருந்த மிகுதியான அன்பு கோபமாக வெளிப்படுகிறது என்ற உளவியல் செய்தி வெளிப்படுகிறது.*

**‘துஞ்சுங்கால் தோள்மேல ராகி விழிக்குங்கால்**

**நெஞ்சத்தர் ஆலர் விரைந்து’**[10]

*தலைவி உறங்கும்போது கனவு காண்கின்றாள். கனவில் கூடி இன்புறுகின்றாள். கனவு கலைந்து விழித்தவுடன் அவரைக் காண முடியவில்லை. ஆனால் தலைவி அவர் நினைவாகவே உள்ளாள். ஆதலின், நெஞ்சில் அவர் உறைகின்றார் என்று கூறுகின்றாள்.*

*கனவில் தோன்றி இன்பம் பயக்கும் காதலரை எனக்கு இன்பம் அளிக்க வந்திலரே என்று மகளிர் பழிக்கின்றனர். அவர் கனவில் வருவதை அம்மகளிர் அறியமாட்டார். அம்மகளிர் அவ்வாறு கனவு கண்டு இன்பம் எய்தாதவர். அவ்விதமின்றி அம்மகளிர் தம் காதலரைக் கனவில் கண்டு இன்பம் துய்க்கும் தன்மையாயின. இவ்வாறு அவரை நொந்து கொள்ள மாட்டார் எனத் தலைவி கூறுகின்றாள். இக்குறட்பாவின் வழி மணமாகாத ஓர் இளம் பெண்ணின் எண்ணங்களையும் ஏக்கங்களையும் பழித்துப் பேசும் வகையில் அமைந்துள்ளதைப் புலப்படுத்துகிறது.*

**‘நனவினால் நம்நீத்தார் என்பர் கனவினால்**

**காணார்கொல் இவ்வூ ரவர்’**[11]

*இக்குறட்பாவில் நேர்முகக் காட்சியாகத் தலைவனைத் தலைவி காணாததனால், அவளை விட்டு விட்டு அவன் நீங்கியதாக ஊர்மக்கள் உரையாடுகின்றனர். ஆனால், அவள் அவனை எப்பொழுதும் கனவில் கண்டு இன்பம் துய்க்கின்றாள். இச்செய்தி அவர்கட்குத் தெரியாது. அவர்கள் இக்கனவைக் காணமாட்டார்கள். ஆகவே, அவ்வாறு கனவு நிலையை மட்டும் வைத்துக் கொண்டு உரையாடுகின்றனர். கனவு நிலை என்பது ஒன்று உண்டு என்பதனை மறந்து விட்டனர்.*

*‘நனவு என்பது நேர்முகமாகக் காணும் பருவுடல் தோற்றத்தையே குறிக்கின்றது. கனவுக்கு மறுதலை நனவு ஆகும்.’*

*சிக்மண்ட் பிராய்டின் நனவின் பிரதிபலிப்பு கனவு என்பது இக்குறட்பாவின் வழி புலனாகிறது. ஏறக்குறைய திருவள்ளுவரும் பிராய்டும் காலத்தால் வேறுபட்டவர்களாக இருப்பினும் கருத்தில் ஒன்று பட்டவர்களாகவே இருந்திருக்கின்றனர் என்பதை இதன் மூலம் அறிய முடிகின்றது.*

**நனவுநிலை, கனவு நிலை**

*நனவு நிலை, கனவு நிலை என்ற இரு மனநிலைகள் வருகின்றன. நனவு என்பதற்கு நேர்ச்சொல், எதிர்நிலையாக கனவு நிலை கூறப்படுகிறது. சென்ற நூற்றாண்டில் மறைந்த உளவியல் அறிஞரான சிக்மண்ட் பிராய்டு மன நிலையை நனவு மனம், நனவிலி மனம் எனப் பிரித்து, புதிய அறிவியல் ஆய்விற்கு உட்படுத்தினார். கனவு நிலைக்குப் புதிய விளக்கமும் தந்தார். இன்றுவரை இப்புதின விஞ்ஞான உளவியல் ஆய்வு நீடிக்கிறது. தொடர்கிறது, வளர்ச்சி பெற்று வருகிறது. மனநிலை மருத்துவரை மட்டுமல்ல, கலை இலக்கியத் துறையிலும், நனவிலி மனம் மேம்பட்டு வளர்கிறது. மன நலம் மனத்தூய்மை பற்றி வள்ளுவர் அன்றே சிந்தித்தார்.*

**வள்ளுவத்தின் இன்பம் மகிழ்ச்சி**

*இன்பத்தை மகிழ்ச்சி எனவும் வள்ளுவர் கூறுவார். காமம் என்பதை மேம்பட்ட விருப்பமாகவும் சொல்வார். காமம் செப்பாது கண்டது மொழிமோ’ எனக் குறுந்தொகையில் வரும் காட்சிக்குப் பொருத்தமுடையதாக உள்ளது. கல்வியின் பெருமை பற்றிக்கூறும் வேளை உலகு. இன்புறுவதைக் கண்டு கற்றறிந்தவர் தாமும் காமுறுவர். மேலும் இன்பமடைவர் என்றும் கூறுகிறார்.*

*கல்லாதான் ஒன்றைச் செய்ய விரும்புதலையும் 'காமுறுதல்' என்பார். அதேவேளை முலை இல்லாதவள் 'காமுற்றற்று' என்று காமத்திற்கு இரு பொருள் ஒரே குறளில் கூறப்பட்டுள்ளன.*

***'கல்லாதவன் சொல் காமுறுதல் முலை இரண்டும்***

***இல்லாதான் பெண் காமுற்றற்று'*[12]**

*காம வேட்கைக்குப் பெண்ணின் கொங்கை வேண்டும் என்கிறது. மேலும், பிராய்டு பிறந்த குழந்தை கொங்கையை உறிஞ்சிப் பால் குடிப்பதிலேயே பாலின்பம் ஆரம்பிக்கிறது என்கிறார். வாயால், நாவால் உறிஞ்சுவதையும் வள்ளுவன் ஐம்புலன் உணர்வில் கூறுவார். பாலின்பத்தின் முதற்படி மார்பகத்தில் ஆரம்பிக்கிறது. அது இல்லாத நிலையில் காம இன்பம் இல்லை. அவள் பெண்ணல்ல என்று கொள்ளப்படுகிறது.*

*ஐம்புலணர்வில் செவியுணர்ச்சி வள்ளுவர் வாயின் சுவையிலும் அதிக முக்கியத்துவம் கொடுத்து இருப்பது புலனாகிறது.*

***செவியின் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்***

***அவியினும் வாழினும் என்*[13]**

*காதல் என்பதற்கு 'விருப்பு' என்றும் குற்றம் காதல் அதிகாரத்தில் கூறப்பட்டுள்ளது.*

***'காதல் காதல் அறியாமை உய்க்கிற்பின்***

***எதில எதிலார் நூல்'*[14]**

*விருப்பைப் பிறர் அறியாது செய் என்கிறார் வள்ளுவர். அப்போது சூழ்ச்சிகள் பலிக்காது. காதலில் மட்டுமல்ல. பிற பகைமையிலும்கூட. சிக்மண்ட் பிராய்டின் இன்பக் கோட்பாடு 'இட்' என்பதில் வருகிறது. பிராய்டின் பாலுணர்ச்சிக் கோட்பாடுகள் மருத்துவ அனுபவத்திலிருந்து ஏற்பட்டதால் அவரது காலத்திலும் மற்றவர் கருத்துக்கள், கூற்றுகளில்*

பிராய்டு முதன்மைப் பெறுகிறார். ‘இட்’ (ID) என்பதைச் சுருக்கமாகக் கூறின் அது நினைவிலி மனம் சார்ந்தது. உள்ளுணர்வு ஆழ் மனத்தின் அதிகாரத்தில் உள்ளது. இதற்கு பகுத்தறிவான காரணம் கூற முடியாது. ‘இட்’ இன்ப நோக்கம், ஆக்கிரமிப்பு அல்லது மூர்க்கமும் கொண்டது’[16]. தீர்வு வேண்டுவதாய் இன்பக் கொள்கையைக் கொண்டு, யதார்த்தமான தர்க்கக் காரணம் கூற முடியாது.

## நினைத்த பொழுது இன்பம் பயக்கும்

திருவள்ளுவர் பின்வரும் குறளில்

**உள்ளக் கணித்தலும் காண மகிழ்தலும்**

**கள்ளுக்குஇல் காமத்துக்கு உண்டு’[16]**

என்கிறார். நினைத்த துணையானே களிப்பெய்தலும், கண்ட துணையானே மகிழ்வெய்தலும் கள்ளுண்டார்க்கு இல்லை காமமுடையார்க்கு உண்டு. நினைத்த அளவிலேயே களிப்படைதலும் கண்ட அளவிலேயே மகிழ்ச்சி அடைதலும் ஆகிய இரண்டுவகை தன்மையும் கண்ணுக்கு இல்லை. காமத்துக்கு உண்டு.

இக்குறளில் சிக்மண்ட் பிராய்டின் நனவுநிலை கூறப்பட்டுள்ளது. நினைத்த அளவிலே களிப்படைய கூறும் அது நனவு நிலையைக் குறிக்கும். சிக்மண்ட் பிராய்டும் திருவள்ளுவரும் ஒத்தக் கருத்துக்களைக் கூறியிருப்பது புலனாகிறது.

## இலக்கியத்தில் பிராய்டு

கற்றோர் அனைவரையும் உலுக்கும் வண்ணம் முதன்முதலாகப் பிராய்டு இலக்கியப் பகுப்பாய்வு நிகழ்த்தியது சேக்ஸ்பியரின் நாடகமாகிய ஆம்லத்து பற்றியதாகும். அப்பகுப்பாய்வு அதற்கு ஆதரவாகவும் எதிர்ப்பாகவும் பல்வேறு விவாதங்களை எழுப்பியுள்ளது. ‘கனவுகளைப்

பற்றிய விளக்கம்' (The Interpretation of Dreams) என்னும் தமது நூலில் முதற்பதிப்பில் அடிக்குறிப்பாக, ஒரு பத்தியைப் பிராய்டு இணைத்திருந்தார். இந்நீளமான பத்தியில் பிராய்டு 'ஆம்லத்து' நாடகத்தில் வரும் இளவரசன் ஆம்லத்துவின் பண்பு நலனை உளவியற் பகுப்பாய்வு வழி அணுகியிருந்தார். 'ஒடிப்பசு ரெக்சு' (Oedipus Rex) இளவரசன், ஆம்லத்து ஆகிய இருவருமே ஒடிப்பசு மனச்சிக்கல் (Oedipus (Omplex) என்னும் பண்பு நலனின் வார்ப்புகளாகத் திகழ்பவர்கள் என அவர் குறிப்பிட்டார். இவ்விருவருக்கும் இடையே நிலவிய பெரிய மாறுபாடு என்னவெனில் ஒடிப்பசு ரெக்சைப் பொறுத்தவரை தகாப்புணர்ச்சித் தூண்டல்கள் நேரடியாக வெளிப்படுத்தப்பட்டன. இதன் விளைவாக ஆம்லத்து தனது கடமையைச் செய்ய இயலா நிலைக்குத் தள்ளப்பட்டான். ஆம்லத்து தனது தந்தையின் ஆவியிடம் ஒரு வாக்குறுதி அளித்திருந்தான். அதன்படி தன் தந்தையை கொன்ற சிற்றப்பனைக் கொலை செய்து பழிக்குப் பழி வாங்க வேண்டும். ஆனால் ஆம்லத்து ஒடிப்பசு மனச்சிக்கல் பெற்றிருந்தமையால் தன் தாயை மனமாரக் காதலித்து தன் தந்தையைக் கடுமையாக வெறுக்கிறான். கனவிலும் கற்பனையிலும் அவன் செய்ய விழைந்ததைத்தான் அவனது சிற்றப்பன் நடைமுறையில் நிகழ்த்தி உள்ளான். எனவே, சிற்றப்பனைக் கொலை செய்வது, தேவையில்லாத ஒன்று. இதன் விளைவாகவே, நாடகத்தில் இளவரசன் ஆம்லத்து தனது சிற்றப்பனைக் கொல்வதைத் தள்ளிப்போட்டுக் கொண்டு வருகிறான். சர் ஏர்னச்டு சோன்சு (Sir Ernest Jones) என்பவர் பிராய்டு அளித்த இவ்விளக்கத்தின் பின்விளைவுகள் மிக முதன்மை வாய்ந்தன எனக் குறிப்பிட்டார். ஏனெனில், ஓர் இலக்கிய மாந்தரின் வெளிப்படையான நோக்கங்களுக்கு அடித்தளமாக விளக்கும் உள்ளுறை நோக்கங்களாகச் சிலவற்றைக் குறிப்பிடும் முதல் முயற்சி இது எனவும் இதன் மூலம் ஓர் இலக்கியப் படைப்பின் உளவியல் நம்பகத்தன்மை சிறப்புற

*விளக்கப்பட்டிருப்பதாகவும் குறிப்பிட்டார். பிராய்டினுடைய இக்கருத்துக்களை விரிவுபடுத்தி சோன்சு ஒரு தனி நூலாக ஆக்கினார்.*

*இலக்கியப் பகுப்பாய்வில் பிராய்டு மேற்கொண்ட மற்றொரு முயற்சி 1906ல் ஆண்டு அவரால் எழுதப்பட்ட 'நாடக மேடையில் மனநலன் குன்றிய பாத்திரப்படைப்புகள்'* (Psychopatic Characters on the Stage) *என்னும் கட்டுரையாகும். உளவியல் நாடகங்களில் தலைவனின் துன்பம் நனவு நிலையிலான இரண்டு உணர்வுத் தூண்டல்களுக்கு இடையே நிகழும் போராட்டத்தால் நிகழ்கின்றது. ஆனால் வளர்ச்சிதைவு நாடகங்களில் நனவு நிலையிலான உணர்வுத் தூண்டல் ஒற்றினுக்கும் அடிமன நிலைக்குத் தள்ளப்பட்ட உணர்வுத் தூண்டல் ஒன்றினுக்கும் இடையிலான போராட்டத்தினால் தலைவன் துன்புறுகிறான். சேக்ஸ்பியரின் மேக்பெத் பற்றிய ஆய்வு ஒன்றும் உரோசுமர் சால்மு* (Rosmer Sholm) *என்னும் நாடகம் பற்றிய ஆய்வு ஒன்றும் காப்மன்* (Hoffman) *என்பவரின் ஒரு கதை* (The Sand Man) *யைப் பற்றிய ஆய்வு ஒன்றும் தோசு தீயோவ்சுகி* (Dos Tovesky) *என்னும் புகழ்பெற்ற உருசிய எழுத்தாளரைப் பற்றிய ஆய்வும் பிராய்டின் வேறு சில புகழ்பெற்ற ஆய்வுக் கட்டுரைகள் ஆகும்.*

*உளவியற் பகுப்பாய்வு வழியமைந்த இலக்கியத் திறனாய்வில் பிராய்டின் தாக்கம் மிகப் பெரிய அளவில் அமைந்ததாகும். 'மணல் மனிதன்'* (The Sand Man) *மேக்பெத் ஆகியவை பற்றிய அவரது ஆய்வுகள் ஏனையோர் இவ்வழி நின்று நடத்திய ஆய்வுகளுக்கு அடித்தளமாக அமைந்தன. உரோசுமர் சால்மு பற்றிய ஆய்வு இத்துறையின் முத்தாய்ப்பாக விளங்கியது என்னும் கூற்று இங்கு குறிப்பிடத்தக்கது.*[17]

*பிராய்டு உருவாக்கியளித்த உளவியற் கோட்பாடுகள் உலகெங்கிலும் உள்ள அறிஞர்களின் உள்ளத்தை உலுக்கும் வண்ணம் அமைந்தன.*

*பிராய்டின் கோட்பாடுகளை இன்றளவும் பலர் ஏற்க மறுப்பதைக் காண்கின்றோம். எனினும், மனித வாழ்வில் தீர்வு காணவியலாத புதிர்களாக விளங்கிய மனக் கோணல்கள் பலவற்றிற்குத் தக்க விடையளிப்பதாகப் பிராய்டின் உளவியற் பகுப்பாய்வு அமைந்துள்ளது.*

*இதனைப் போன்று இலக்கியப் படைப்புகளுக்குப் புதிய விளக்கம் அளிக்கும் ஆய்வுக்கும் இலக்கிய மாந்தர்களின் பண்பு நலனை உரிய முறையால் மதிப்பீடு செய்வதற்கும் பிராய்டின் உளவியற் பகுப்பாய்வு பெரிதும் துணை புரிகின்றது.*

**நனவு மனம்**

*நனவு மன நிலையை வள்ளுவர் 'நெஞ்சொடு புலத்தல்' என்னும் அதிகாரத்தில் கூறியிருக்கிறார்.*

**'தனியே இருந்து நினைத்தக்கால் என்னைத்**
**தினிய இருந்ததென் நெஞ்சு'**[18]

*தலைவனைப் பிரிந்துள்ள தலைவி தலைவன் வராத கொடுஞ் செயலை நினைத்து நினைத்து வருந்தினாள். நெஞ்சுதானே நினைவுக்குத் துணைபுரிவது. ஆகவே, அந்நெஞ்சு அவர் இல்லாத போது அவளுக்கு அவர் நினைவைக் கொணர்ந்து வருத்தியது. அவர் வந்தவுடனே அவர்பால் சென்று அவளைக் கை விட்டு விட்டது. அவளுடன் இருந்து அவரை வெறுத்து ஊடல் கொள்ளவியலாதது நெஞ்சின் குற்றம்தானே! என்று எண்ணுகிறாள் தலைவி.*

*தனியே இருந்து நினைப்பது என்பது நனைவிலி மனதில் பதித்து வைத்தவற்றை மீள் நினைவு மனத்திற்கு, நனவு நிலைக்குக் கொணர்வதாகும். நனவு மனம் நனவிலி மனம் என்ற சிக்மண்ட் பிராய்டின் முக்கிய கோட்பாட்டை இங்கு காணலாம்.*

*‘நானும் மறந்தேன் அவர்மறக் கல்லாஎன்*

*மாணா மடநெஞ்சில் பட்டு’*[19]

*கைவிட்டுச் சென்றவரை மறக்க வேண்டியது முறையாகும். ஆனால், அவளுடைய நெஞ்சு அவரை நினைத்துக் கொண்டே இருந்தது. ஆகவே, அது அறியாமையுடையது, மாட்சிமையற்றது. அந்த நெஞ்சு அவரைக் கண்டவுடன் அவர்பால் சென்றது. அவளும் அந்நெஞ்சு வழியே சென்று அவரைக் கூடத் துணிந்துவிட்டாள். ஆதலின், நாணம் அற்றவளாகி விட்டாள், ‘நானும் மறந்தேன்’ என வருந்துகின்றாள். மறந்தேன் எனக் கூறும்போது முன்னர் நினைவிலி மனதில் பதிந்திருந்த நாணத்தை மறந்தேன் என மனத்தின் இரு நிலைகளை, நனவு, நனவிலி, மனங்களைச் சுட்டுவதாகவும் கூறலாம்.*

## நினைத்துப் புலம்புதல்

*தலைவியை நினைத்துத் தலைவனும், தலைவனை நினைத்துத் தலைவியும் கூறி வருந்துதல் உண்டு. ‘புலம்பு’ என்னும் சொல்லுக்குத் தனிமையென்னும் பொருள் தருவார் தொல்காப்பியர். ‘புலம்புக்குத்’ தனிமை என்னும் பொருள் கொண்டால், இருவரும் தனிமையெய்துதல் என்பதாகும். நினைத்தவர் தனிமை எய்துதல் என்பதாகும். நினைத்தல் அவ்வளவு சிறப்புடையப் பொருளாகத் தோன்றுகிறது.*

**‘உள்ளினும் நீராப் பெருமகிழ் செய்தலால்**

**கள்ளினும் காமம் இனிது’**[20]

*காமமும் கள்ளும், இன்பம் தந்து அறிவை மயக்குவன. காம இன்பம் நினைக்கும்போதெல்லாம் மகிழ்ச்சியைத் தரும். கள்ளின்பமோ, உண்டபொழுதுதான் மகிழ்ச்சியைத் தரும். ஆதலின், காம இன்பம் மிக இனியதாகின்றது.*

*தலைவன் தலைவியோடு கூடித் துய்த்த காதல் இன்பத்தை நினைத்து நினைத்து மகிழ்ந்திருக்கின்றாள். ஆகவே, தலைவியை அவன் மறக்கவில்லை என்பது புலனாகின்றது.*

*திருவள்ளுவர் கள்ளுண்ணுதலைத் கண்டித்துள்ளார். அவர் காலத்தில் பலரும் கள்ளுண்ணும் பழக்கம் உடையவராக இருந்திருத்தல் வேண்டும். அதனாலேயே அவர் கடிந்துரைக்கும் நிலை ஏற்பட்டுள்ளது. அவர் காலத் தலைவன் கள்ளுண்பவனாக இருந்திருப்பான். ஆகையினால், தலைவன் கூற்றாக வரும்போது கள்ளுண்டல் பற்றிக் குறிப்பிடுவது குற்றமுடையதாகாது. உண்மையை வெளிப்படுத்துவதாகும். இதனால் இலக்கியம் வாழ்க்கை கண்ணாடி என்பது தெள்ளத் தெளிவாகிறது.*

*இக்குறள் காலம் காலமாய் தமிழ்ச் சமுதாயத்துக்குக் கூறப்படும் குறளாகும். இக்குறளை ஒட்டிய மற்றுமொரு குறள் கள்ளுண்டலைக் கண்டித்து,*

***'துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்***
***நஞ்சுண்பார் கள்ளுண்ட பவர்'***[21]

*எனக் கூறுவார் வள்ளுவர்.*

## நெஞ்சே

*மது அருந்துபவர்களிடம் 'மது அருந்துவதால் என்ன கிடைக்கிறது' என்று கேட்டால் 'கொஞ்ச நேரம் மகிழ்ச்சியாக இருக்க முடிகின்றது' என்பார்கள். 'இன்னும் கொஞ்சம் அருந்தினால் என்ன கிடைக்கிறது' என்றால், 'வானத்தில் பறப்பது போல இருக்கிறது என்பார்கள்', இன்னும் கொஞ்சம் - தலை சுற்றுவது போல இருக்கிறது என்பார்கள். இன்னும் கொஞ்சம் அப்படியே பேச்சு மூச்சற்று கீழே விழுந்துவிடுவேன் என்பார்கள். அப்படியானால் மது அருந்துபவர்கள் பலமுறை செத்துப்*

பிழைக்கின்றார்கள். பலமுறை செத்துப் பிழைப்பார்கள், ஒருநாள் செத்துப் போவார்கள்.

மது அருந்திவிட்டு பிழைத்தபோதெல்லாம் தூங்கி எழுந்ததைப் போலத்தான் இருக்கும். ஆனால் அது 'சாவதற்கான ஒத்திகை' என்பதை மது அருந்துபவர்கள் அறியமாட்டார்கள். மது நஞ்சு என்றால், தூக்கம் மரணத்தைத் தானே குறிக்கும்.

நெஞ்சே! குடிகாரர் நெஞ்சில் குடியேறி உய்யும் வழி சொல்வாயாக! என்று இன்றைய இலக்கிய வாதிகள் மது அருந்துதல் மரணத்தில் முடியும் என்பதை தன் நெஞ்சிற்கு உரைப்பனவாக புது உத்தியைக் கையாண்டு கூறும் அழகினை வள்ளுவம் வகுத்துத் தந்திருக்கிறது.

**'உள்ளினேன் என்றேன் மற்றுஎன் மறந்தீர் என்றென்னை**
**புல்லாள் புலத்த கனள்'**[22]

நினைத்தேன் என்றேன், நினைப்புக்கு முன் மறுப்பு உண்டு அன்றோ, ஏன் மறந்தேன் என்று ஊடினாள். நாம் ஒருவருடன் பேசிக் கொண்டிருக்கும்போது, சொல்ல மறந்து விட்டேன்' எனக் கூறி புதிய விசயத்தைக் கூறுகிறோம். அது எங்கிருந்து நினைப்புக்கு வந்தது. நினைவிலி மனத்திலிருந்தே என்பது உறுதியளிக்கிறது.

சிக்மன் பிராய்டின் முதலாவது கோட்பாடு இன்று உலகெங்கும் நிலைத்துள்ளது. நனவு மனம் நனவிலி மனம் பற்றிய கோட்பாடாகும்.

## நனவு மனம் மூளையின் சிறிய பகுதி

மனத்தில் அல்லது நமது மூளையில் அமைந்திருக்கும் நனவு மனம் சிறிய பகுதியே ஆகும். நனவிலி மனமே பெரிய பகுதியாகும். அங்குதான் கணினியைப் போல் கண்டவை, கல்வி, கேள்வி யாவையும் சேகரித்து வைக்கிறோம்.

மேலும், தூக்கத்தில் காணும் கனவுகள் ஆயிரக்கணக்கானவற்றை சிக்மண்ட் பிராய்ட் ஆராய்ந்தார். அவை, பெரும்பாலும் உங்கள் விருப்பை ஒட்டிய நிகழ்ச்சிகளாகக் கனவில் தோன்றலாம். விரும்பியவை உடனுடன் தோன்றா, என்றோ, எப்பொழுதோ, கண்டவை துண்டு துண்டாகத் தோன்றலாம். தூங்கி எழுந்தவுடன் மறந்து விடும். தொடர்ச்சியாக நனவில் கொள்ளமுடியாது.

இத்தகைய யதார்த்த நிலையை, அனுபவ ஆய்வு நிலையை வைத்துப் பார்க்கும்போது, கனவு நிலை என குறளில் கூறப்படும் 'நினைவிலி' மனப் படிமங்களே ஆகும்.

## மனித மனத்தின் தனிச்சிறப்பு

மனித இனத்தின் தனிச்சிறப்பு நினைவிலி மனதில் பதிந்திருப்பவற்றை வேண்டிய வேளை மீள எடுத்து அல்லது மீட்டிப் பார்ப்பதாகும். மனதில் ஆங்காங்கே பதிந்திருந்து சம்பவங்களை, அறிவாற்றல், தொடக்கம், கலை, இலக்கிய நிகழ்ச்சிகளையும் மனதில் மீட்டெடுத்துப் பார்ப்பதாகும். இவை இன்ப, துன்ப, நிகழ்ச்சிகள், சம்பவங்களாக இருக்கலாம். மனம் ஒரு பழைய கணிப்பொறி என்றும் கூறலாம்.

வள்ளுவர் காமத்துப்பாலில் பெரும்பாலும் ஆண், பெண் இரு பாலரின் காம நிலையில் ஏற்படும் சம்பவங்கள், பாதிப்புகள் ஆகியவற்றைக் கூறுவார்.

## கனவு என்பது தூக்க நிலை

கனவு என நாம் இன்று கூறுவது தூக்கத்தில் கண்டு, விழுத்தெழுந்ததும் மறைந்து விடும் காட்சிகளாகும். 'பகற்கனவும்' அதே போலத் தோன்றலாம். நடைமுறைக்குச் சாத்தியமற்றவற்றை 'கனவில் கண்டதாகக் கூறுவர்'.

*எதிர்காலச் சம்பவங்கள், நிறைவேறுவதைக் கற்பனையில் சுட்டிக் காண்பதையும் கனவு என்பதாகும்.*

**உள்ளத்துள் மறைந்தவை**

*வள்ளுவர்'*

**'இரத்தலே ஈதலே போலும் காத்தல்**

***கனவிலும் தோற்றதார் மாட்டு'*[23]**

*எனும் குறள்வழி, உள்ளதை மறைத்துக் கூறும் தன்மையை கனவிலும் அறியாதவரிடத்தில் இரந்து கேட்பதும் பிறருக்குக் கொடுப்பது போன்றது என்கிறார். பிறிதோர் குறளில்,*

***'பிறப்பின் எவனாவன் மன்கொல் மறப்பறியேன்***

**வள்ளினும் உள்ளம் சுடும்'[24]**

*என்கிறார். தலைவரை மறவாது இருப்பதனாலேயே உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். மறந்தால் அப்பொழுதே இறந்து விடுவேன். பிரிவுத் துயரம் மிகக் கொடியது. அவர் பிரிந்துள்ளதை நினைத்தாலும் உள்ளம் வருந்தும். ஆகவே, என்றும் அவர் நினைவாக, என்றும் உடன் இருப்பவராகக் கருத்தில் கொண்டு வாழ்ந்து வருகின்றேன்.*

***'எனைந்து நினைப்பினும் காயார் அனைத்தன்றோ***

***காதலர் செய்யும் சிறப்பு'*[25]**

*காதலரை நினைத்துக் கொண்டே உயிர் வாழ்கின்றேன். எவ்வளவு காலம் நினைத்தாலும் அவர் அதற்கு உடன்பட்டவராய் என் நெஞ்சினுள் வந்து குடிபுகுகின்றார். அவர் என்னை வெறுத்து, வெகுண்டு, ஓடுவதில்லை. அவர் செய்யும் இச்சிறந்த உதவியின் சிறப்புத்தான் என்ன? என்கிறாள் தலைவி.*

ஒருவர் நினைப்பதை இன்னொருவர் தடுத்தல் இயலாது. தலைவி நினைப்பதைத் தலைவன் எவ்வாறு தடுத்தல் இயலும்? காதலர் தாம் கூறிய உறுதிமொழியை மறந்து பிரிந்து சென்றுள்ளதை நினைத்து அவரைப் பாராட்டுவது போல் தன் வருத்தத்தைத் தலைவி வெளிப்படுத்துகின்றாள். அவர் உடனே வந்து கூடி இன்பம் செய்து உதவி செய்கிறார் என்பது இக்குறட்பாவின் கருத்தாகும். தலைவி பிரிவுத் துயர் தாளாமல் வருந்தும் நிலையை இக்குறட்பா உணர்த்துகிறது.

**உடலும் உயிரும்**

தலைவன், தலைவன் தன்னிடம் முன்பு உறுதிமொழி கூறினார். 'நீயும் யானும் ஒருவரே' என்று, 'உடலும் உயிரும் ஆவோம்' என்றார். அவ்வாறு கூறியவர் என்னுடன் இருந்து அன்பு செய்யாமல் பிரிந்து சென்றுவிட்டார். என்னை அவர் தம் அருளற்ற இயல்பு! இதை நினைக்க நினைக்க என் உயிர் அழிகின்றது என்று கூறுகிறாள்.

**'விடா அது சென்றாரைக் கண்ணினால் காணப்**

**படாஅதி வாழி மதி'**[26]

'மதி வானில் திரிந்து கொண்டு யாவரையும் நோக்குகின்றது. தலைவனையும் பார்க்கும் தலைவியையும் பார்க்கும். மதியைக் கண்டு தலைவியின் முகத்துடன் உள்ள ஒற்றுமை கருதி, மதியை அவள் முகமாகவே எண்ணி ஆறுதல் அடையும் தலைவனுக்குத், தலைவியை பார்க்க வேண்டும் என்ற விருப்பம் குறைபடும். ஆகவே, மதி அவன் கண்ணில் படாமல் இருந்தால். அவள் முகத்தைக் கண்டு மகிழும் ஆவலுடன் விரைந்து வருவான். ஆதலின் மதி வானில் தோன்றாதிருத்தல் நன்று எனக் கருதி அதனை வேண்டுகின்றாள்.

இக்குறட்பாவில், தலைவனின் அழகை வருணிக்கும் தலைவன் தலைவியின் நினைவு வந்து அவனை வாட்டுகிறது என்பதை உளவியல்

*செய்தியாகக் கூறப்படுகிறது. இன்றைய சினிமா உலகில் கவிஞன் ஒருவன் எழுதுகிறான், ஒரு பெண்ணைப் பார்த்து நிலவைப் பார்த்தேன், நிலவில் ஒளியில்லை'. தலைவியின் அழகு மதியைவிட மிஞ்சியது. பல குறட்பாக்கள் இன்றைய கவிஞனின் நெஞ்சத்தை ஈர்த்தது என்பதில் ஐயமில்லை.*

**கலை இலக்கியங்களில் உளவியல்**

*கலை இலக்கியங்களில் பெரும்பாலும் யதார்த்தத்திலும் பார்க்க கற்பனைக் கூற்றுகளுக்கே கனவு என்ற சொல் பயன்படுத்தப்பட்டு வந்தது. இன்றும் இந்நிலை தொடர்கிறது.*

*காதல் முதன்மை பெறும் இன்றைய தமிழ், பிற இந்திய மொழிச் திரைப்படப் பாடல்களில் காதல் வயப்பட்ட பெண் பஞ்சணை மெத்தையில் புரண்டபடி காதலுடன் பூங்கா, மலைப் பிரதேசங்களில் தனிமையில் ஆடிப்பாடி, கண்டியணைத்து, பாலின்பம் அனுபவிப்பதாகக் காட்டுகிறார்கள். இவை வெறும் கற்பனை என்று கூறிவிடமுடியாது. நினைவிலி மனதில் தன் விருப்புகளை, இன்ப வேட்கையை வரவழைத்து பாலின்ப நுகர்வு பெறுவதாகும். மனித மனத்தின் தனிச்சிறப்பு காம விருப்புகளையும் மீளக் கொணர்வது என்று கூறப்படுகிறது. இது பெண்பாலிற்கு மட்டுமல்ல, ஆணினத்திற்கும் பொருந்துவதாகும்.*

**பிராய்டின் மூன்று துறைகள்**

*கடந்த 19ஆம் நூற்றாண்டில் 'விஞ்ஞான பூர்வமான உளவியல் ஆய்வு முறையை அறிமுகப்படுத்தியவர் பால் நிலைக்கு, காமத்துக்கு முதன்மையளித்த சிக்மண்ட் பிராய்டின் கண்டுபிடிப்பை சுருக்கமாக மூன்று பிரிவுகளில் அடக்கலாம்.*

> ***'1. மனித மனத்தைக் கனவு மனம், கனவிலி மனம் என இரண்டாகப் பிரித்தார்.***

2. **இட் (ID) கோட்பாடு என உடலின்பத்தின் முதன்மையையும் ஆக்கிரமிப்பையும் விளக்குதல்.**

3. **கனவுகளின் விளக்கம்'**[27]

*இந்த மூன்று கோட்பாடுகளும் வள்ளுவரின் கனவு நிலை உரைத்தல், பிரிவாற்றாமை, நினைத்தவர் புலம்பல், புணர்ச்சி மகிழ்தல், நெஞ்சோடு கிளத்தல், நெஞ்சோடு புலத்தல் ஆகியவற்றோடு பொருந்துகிறது.*

## காமத்தின் சிறப்பு

*காம சூத்திரம் கிபி 2ம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாகக் கணிப்பர். இது உடலுறவு சார்ந்த முறைகளையே சாரும். கி.பி. 4ம் நூற்றாண்டு வரை திருவள்ளுவர் முப்பால் நூலாக அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என ஈரடிப் பாடல்களாக எழுதினார்.*

*காமத்தின் சிறப்பை இன்ப, துன்ப உணர்வுகளை எளிமையாகவும் சிறப்பாகவும் யதார்த்தமாகவும் விரித்தார். ஆண், பெண் உறவு என்னும் பொருள் பற்றி எழுதப்பட்ட பண்டை இந்திய நூல்கள் பல உள்ளன. அவற்றுள் சாலச் சிறந்தது, காலத்தால் முப்ட்டதும், வாத்சாயாயனார் என்னும் முனிவரால் எழுதப்பட்டதென வழங்கும் காம சூத்திரம் ஆகும். இது கிறித்து ஆழித்தொடக்கத்தை அடுத்து வந்த நூற்றாண்டுகளில் எழுதப்பட்டது. ஒருவேளை குப்தர் காலத்தில் எழுதப்பட்டதாய் இருக்கலாம். காம வேட்கையைத் தூண்டும் மருத்துவபாக முறைகள் மந்திரங்கள் ஆகியவற்றையும் பண்டைய இந்தியாவின் வாழ்க்கை பற்றிய மிக முக்கியமான செய்திகளையும் தருகின்றது. இதுபோன்ற நூல்களிலிருந்து மேல் வகுப்பு மக்களின் கல்வியொழுக்கம் பற்றிய பல செய்திகளை அறிய முடிகின்றது. திருக்குறளில், நெஞ்சை நோக்கிக் கூறிக் கொண்டிருந்த தலைவி தன் உள்ளத்தை அடக்கி நிறுத்த முடியாத தன்மையைக் கூறி வருந்துதலை,*

**‘காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும்**

**நாணுத்தாழ் வீழ்த்த கதவு’**[28]

*நாணத்தால் தன் உள்ளத்தை அடக்கிக் காதல் வேட்கையைப் பிறருக்கு அறியாது இருந்தாள் தலைவி. இப்பொழுது வேட்கை மிகுதியாகவே வாய்விட்டுக் கூறத் தொடங்கி விட்டாள். நாண் நீங்கி விட்டது.*

*உள்ளத்தை நிறுத்தும் தன்மை கதவாகவும், நாணம் தாழ்ப்பாளாகவும், காதல் வேட்கை கதவை உடைக்கும் கோடரியாகவும் அழகுற உருவகப்படுத்தப்பட்டுள்ளன.*

**‘காமம் என ஒன்றோ கண்ணின்றென் நெஞ்சத்தை**

**யாமத்தும் ஆளும் தொழில்’**[39]

*இரவில் எல்லோரும் அமைதியாக உறங்கும்போது தலைவி மட்டும் தலைவன் நினைவால் உறங்காது விழித்துக் கொண்டுள்ளாள். காதல் வேட்கை அவளை உறங்கவிடாது ஆட்டிப் படைக்கின்றது. ஆகவே, காதல் வேட்கைக்கு இரக்கம் என்பது இல்லை என்று தலைவி கூறி வருந்துகின்றாள். ‘காமம்’ என ஒன்றோ கண் இன்று’ என்பது ஆங்கில மொழியில்* Love is blind *என்பதுடன் ஒத்து உள்ளதை காணலாம்.*

**‘மறைப்பேன்மன் காமத்தை யானோ? குறிப்பினறித்**

**தும்மல் போல் தோன்றி விடும்’**[30]

*என்னால் காம விருப்பத்தை மறைத்து வைக்க இயலவில்லை. எவ்வளவுதான் அதனை வெளியே தெரியாமல் மறைத்து வைக்க முயன்றாலும், தோன்றுவதற்குரிய முன் அடையாளமின்றித் தோன்றி விடுகிறது. யான் என்ன செய்வேன்? எனத் தன் உள்ளத்தை நிறுத்த முடியாத் தன்மையை வெளிப்படுத்தி வருந்துகின்றாள் தலைவி.*

'நாண்என ஒன்றோ அறியலம் காமத்தால்

பேணியார் பெட்ப செயின்'[31]

காதல் காரணமாகக் காதலர் விரும்புகின்றவற்றைச் செய்தால், தடுக்காமல் ஏற்றுக் கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டு விடுகின்றது. நாணம் இடை நின்று தடுத்தல் வேண்டும். ஆனால், அந்நாணமும் மறைந்து விடுகின்றது. காதல் முன்னே நாணம் நிற்றல் இல்லை. எனவே, தலைவி பழைய சீற்றத்தை மறந்து அவனைக் கண்டவுடன் அவன் செய்கின்ற கூற்றுக்கு ஆட்பட்டு விடுகின்றாள். காதலின் தன்மை இதுதான்.

'பாலுணர்விலும் வன்முறை ஊடுருவி நிற்கும். தற்காதல் எனத் தனியாகவே இன்ப வெறியில் இன்பம் காண்பர். இன்பம் முடிந்ததும் வெறுப்பு, சோர்வு இயல்பாகிறது. இன்பம் என்ற போர்வையில் ஒருவரை ஒருவர் துன்புறுத்தி இன்பம் காண்பது போற்றவும் கூடிய காதல் அல்ல என்பார் பிரெஞ்சு நாட்டு உலக அறிஞர் ஜுன் போல் சாத்ரே'.[32]

'சாடிசம் (Sadism) என ஆங்கிலத்தில் கூறப்படுவதை ஆக்ஸ்போர்டு அகராதி condition of state of driving sexual pleasure from inflicting pain, suffering humiliation, enjoying cruelty to other'.[33]

பாலியல் இன்பத்தை அனுபவித்ததுடன் தோல் தூண்டல், செருக்குலைத்தல், தாழ்வுபடுத்தல், கீழ்ப்படுத்துதல், துன்புறுத்தல் இவையே சாடிசம் எனக் கூறுகிறது.

தமிழில் வதைத்துறு மோகம், வதையின்பம் எனலாம். காமத்தில் உடலை வருத்தி இன்பம் பெறுவது இயல்பான ஒரு செயலாகும். காம வெறியை வள்ளுவர், கள் வெறியோடு ஒப்பிடவில்லை. கண்டதும் ஏற்படக் கூடியது காமம். உண்டதும் ஏற்படக் கூடியது வெறி.

உலகப் பெண்களெல்லாம் வன்புணர்ச்சிக்கு உட்படுகின்றனர் என அறிஞர் ஹுவ்லொக் எல்லீஸ் எழுதியுள்ளார். ஆண்களே தாம் விரும்பிய வேளை பாலுணர்வை நாடுகின்றனர். மனிதனின் காமத்திற்கு நேரம், கால எல்லையில்லை. பிற உயிர்களுக்கும் உண்டு.

ஊடல் என்பது காம வெறிச் செயலைத் தற்காலிகமாகத் தடுப்பதன் மூலம் வேகமூட்டுவது என்றும் விளக்கலாம். அது அடுத்த கட்டமான வதைமூலம் இன்பம் தேடுவதே. காம வெறியை நெருப்புக்கு நெய் வார்ப்பதே என்பார் வள்ளுவர்.

**ஊடுதல் காமத்திற்கின்பம்**

ஊடுதல் என்பதும் சாடிசம். வதைத்துறு இன்பம் சார்ந்ததே. முன்னரும் கூறப்பட்டது. பாலின்ப சுகத்தைத் தற்காலிகமாகத் தடுப்பதால் ஏற்படும் துன்பநிலை. அது பின்னர் தீவிரமாகக் கூடித்தழுவுவதற்கு வாய்ப்பளிக்கும் என வள்ளுவரும் கூறுவார்.

**'ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்குஇன்பம்**
**கூடி முயங்கப் பெறின்'**[34]

மேலும், காமத்தில் கூடுவதை விட ஊடுதலிலும் இன்பமுண்டு என்பார் வள்ளுவர். இக்குறட்பாவில் பிராய்டும் வள்ளுவரும் இணைந்தே பயணம் செய்கின்றனர். சாடிசம் என்ற பிராய்டின் கருத்தும் வள்ளுவரின் கருத்தும் ஒரே பொருளைத் தருகின்றது என்பது நோக்கத்தக்கது.

**'ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்**
**கூடியார் பெற்ற பயன்'**[35]

ஊடலும் ஊடிக் கூட வேண்டும் என நினைத்தலுக்கு மீண்டும் புணர்தலும் காமம் இடைவிடாது வேண்டுவர் பயன்.

*ஊடுதல் காமத்திற்கு, காதல் நுகர்ச்சிக்கு இன்பம் தரும். ஊடல் இல்லாத காதல் நுகர்ச்சி மிக்க இன்பம் பயவாது. ஊடலின் பயன் கூடலே யாதலின் ஊடல் இன்பத்தைக் கூடலில் தான் காணமுடியும். ஆகவே, கூடிக் கலவி செய்தலே ஊடலுக்கு இன்பம் என்றார் வள்ளுவர். காதல் இன்பத்தை ஊடலிலும், ஊடல் இன்பத்தைக் கூடலிலும் காணலாம்.*

*ஊடலும் ஊடிக் கூட வேண்டும் என நினைத்தலுக்கு மீண்டும் புணர்தலும் காமம் இடைவிடாது வேண்டுவர் பயன். இது பிராய்டின் கூற்று*

***'ஊடலில் தோன்றும் சிறுதுனி நல்லளி***
***வாடினும் பாடு பெறும்'*** [36]

*ஊடலின் காரணமாக முதலில் சிறு துன்பம் உண்டாகும். தலைவருடைய அன்பு குறைவதுபோல் தோன்றும். ஆனால், அவ்வன்பு மேலும் மேலும் பெருகித் தலைவிக்கு இன்பம் நல்கும்.*

***'புலத்திலின் புத்தேள்நா டுண்டோ நிலத்தொடு***
***நீர்இயைந் தன்னார் அகத்து'*** [37]

*காதலும் காதலியும் ஒன்றுபடுதல் நிலமும் நீரும் ஒன்றாகப் பொருந்தியுள்ளது போன்றதாகும். நீர் நில இயல்புக்கு ஏற்ப நிறமும் சுவையும் மாறும். அது போன்று தலைவன் இயல்புக்கு ஏற்பத் தலைவி இயல்பும் தலைவி இயல்புக்கு ஏற்பத் தலைவன் இயல்பும் அமையும். இவ்வாறு ஒன்றுபட்டாரிடையே தோன்றும் புலவி இருவருக்கும் பேரின்பம் அளிக்கும். இப்பேரின்பத்துக்கு ஈடாகத் தேவருலக இன்பத்தையும் ஒப்பிடல் இயலாது.*

*தேவருலகம் என்பது துன்பம் அற்றது எனவும் பேரின்பமே கொண்டது எனவும் புராண நூல்கள் கூறுகின்றன.*

***'நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று***
***நீரினும் ஆரளவு இன்றே சாரல்***

**கருங்கோல் குறிஞ்சிப்பூக் கொண்டு**

**பெருந்தேன் இழைக்கம் நாடனொடு நட்பே'[38]**

*என்ற குறுந்தொகைப் பாடல் தலைவன் காதலின் ஆழத்தை வெளிப்படுத்தும் பாங்கினை காணமுடிகிறது. ஈடான பாடலாக அமைந்துள்ளதைக் காண முடிகிறது.*

**'ஊடலில் தோற்றவர் வென்றார் அதுமன்னும்**

**கூடலில் காணப் படும்'[39]**

*தலைவனும் தலைவியும் ஊடல் கொண்டிருக்கும் போது, எவர் ஊடலை ஆற்றாது கூடுதற்கு முந்துகின்றாரோ அவர் புணர்ச்சியில் வெற்றி காண்பர். ஊடலை நீட்டித்துக் கொண்டிருக்க விரும்புவர் தோற்றாராவார். புணர்ச்சியில் நிறையின்பம் காணமாட்டார். பாலின்ப நுகர்ச்சி வல்லோர் இதனை நன்கு அறிவர். ஆதலின், ஊடல் கொள்ளும்போது விரைந்து கூடுதற்குரிய நிலைக்குத் தன்னை ஆளாக்கிக் கொள்ளுவாரே புணர்ச்சியில் இன்பம் காண்பார்.*

**'ஊடுக மன்னோ ஒளியிழை யாம்இரப்ப**

**நீடுக மன்னோ இரா'[40]**

*ஊடியிருக்கும் தலைவியை இரந்து வேண்டுவதில் தலைவன் இன்பம் காணுகின்றான். ஆகவே, அவள் ஊடலை நீட்டித்தல் நன்று என்று கருதுகின்றாள். அவள் ஊடலைப் போக்கும் பொருட்டு அவன் முயன்று கொண்டிருக்கும் போது, அவள் ஊடலை விடுதல் கூடாது என்று கருதுபவன், இரவும் நீடித்துக் கொண்டிருக்க வேண்டுமென்று விரும்புகின்றான். இரவு நீடிக்காவிடின் ஊடல் கொண்டிருப்பவளை வேண்டுதல் முடியாது. பொழுது விடியின் காதல் செயல்களுக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டி வரும். ஆதலின் ஊடலும் இராப் போதும்*

*நீண்டு கொண்டே இருக்க வேண்டும் என்று விரும்புகின்றான். சிக்மண்ட் பிராய்டின் ஊடிக் கூட வேண்டும் என்ற கோட்பாடு இக்குறட்பாக்களில் பொருந்துகிறது.*

**இன்பத்தில் துன்புறுத்தல்**

*பாலியல் இன்பத்தை அனுபவிப்பதில் ஏற்படும் தடைகளை வதைத்துறு மோகம் அல்லது வதை இன்பம் எனலாம். மேலும், விரிப்பின் நோவு ஏற்படுத்துதல், துன்புறுத்தல், கீழ்ப்படுத்துதல், தாழ்வு படுத்துதல், செருக்குக் குலைத்தல், அத்துமீறி விருப்பற்றவற்றை செய்யும்படி வற்புறுத்தல் ஆகியவற்றையும் வதை இன்பத்தில் சேர்க்க வேண்டும் என்பது பிராய்டின் கருத்து.*

*பாலுறவில் துன்புறுத்துவதை உடன் தண்டனைக்குரிய குற்றமாக கௌடில்யரின் அர்த்த சாஸ்திரம் கூறும். தன்னைத்தானே தண்டித்து இன்பம் காண்பதை வதைத்துறு மோகம் (*Masochism*) என்பர். ஆண்மையை வதைத்துறு மோகம் பண்புள்ளவராகவும் பெண்மையை வதைந்துறு மோகியாகவும் பிராய்டு கூறுவார்.*

**ஆழ்மன உணர்ச்சியில் பிராய்டும் வள்ளுவரும்**

*உடலியல் வாழ்வுக்குத் தேவையான பசி, தாகம், தூக்கம், காமம் போன்றவை வாழ்வுணர்ச்சியின் பாற்பட்டவை. அதேவேளை வாழ்வுணர்ச்சிக்கு எதிரான உணர்ச்சிகளும் சாவுணர்ச்சி, மூர்க்கம் அல்லது ஆக்கிரமிப்பு, அழிப்பு, சிதைப்புப் போன்றவையும் உள்ளன.*

*காம உணர்ச்சி சார்ந்து வள்ளுவர் பல இடங்களில் சாவுவுணர்ச்சி பற்றிக் கூறுவார். தலைவன் பிரிந்தால் தலைவி இறந்து விடுவாள் எனும் பொருள்படும் குறள் பின்வருமாறு,*

**'செல்லாமை உண்டேல் எனக்கு உரை மற்றுநின்**

**வல்வரவு வாழ்வார்க்கு உரை'**[41]

*தலைவன் தலைவியை விட்டுப் பிரிதற்குக் காரணங்கள், உயர்ந்த கல்வி கற்றல், நாட்டைக் காத்தல், பகையை மாற்றத் தூதராகச் செல்லல், அரசன் சார்பாகச் செல்லல், பொருளீட்டல் என ஐந்தாகும் என்பர்.*

*பிரிவுத் துயர் என்பது தலைவியை உயிரோடு கொல்லுதற்குச் சமமாகக் கருதப்படும் என்ற செய்தியை விளக்குகிறது.*

**'அரிதுஆற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவுஆற்றிய**

**பின்இருந்து வாழ்வார் பலர்'**[42]

*அரிய செயலை செய்து கொண்டு, வரும் துன்பங்களையும் நீக்கிக் கொண்டு, தலைவன் பிரிவில் உண்டாகும் துன்பத்தையும் பொறுத்துக் கொண்டு வாழ்பவர் உளர். ஆனால், என்னால் இயலாது அவர் பிரிவின் உயிர் வாழேன். அவர்கட்கு உள்ளது போன்ற ஆற்றல் எனக்கு இல்லை எனத் தலைவி தனது இயலா வருத்தத்தை கூறி துன்புறுகிறாள்.*

**'வீழுநர் வீழப் படுவார்க்கு அமையுமே**

**வாழுநம் எண்ணும் செருக்கு'**[43]

*காதலிக்கும் காதலரால் என்றும் காதலிக்கப்பட வேண்டும். அங்ஙனம் இடையறாது காதலிக்கப்பட இல்லையேல் அமைதியாகப் பொருந்தி இருத்தல் இயலாது. ஆகவே, துன்பத்தால் வருந்தியுள்ளேன் என வேதனையால் மொழிகிறாள் தலைவி. இதுவும் இறப்புக்கு சமம்தான். காதல் சமன்பட வேண்டும்.*

**'வீழ்வாரின் இன்சொல் பெறாஅது உலகத்து**

**வாழ்வாரின் வன்கணார் இல்'**[44]

*காதலரிடமிருந்து பெறும் இன்சொல்லே காதலியை மிகவும் மகிழ்விக்கிறது. காதல் பயிர் தழைப்பதே காதல் மிகு இனிய சொல்லினால்தான். காதலர் கூறும் இனிய சொல்லைப் பெறாது வாழ்வது என்பது எவராலும் இயலாது. அப்படிப் பெறாமல் ஒருவர் வாழ்வாரானால் அவர் மிகக் கொடியவராகத்தான் இருக்க வேண்டும். ஆகவே, யான் கொடியாள் ஆதல் வேண்டும் என்கிறாள் தலைவி.*

*தலைவன் உதடுகளில் உச்சரிக்கும் இன்சொல் தான் தலைவியைப் பலநாள் உணவின்றி கூட உயிர் வாழ வைக்கும்.*

***'மற்றுயான் என்உளேன் மன்னோ அவரொடுயான்***

***உற்றநாள் உள்ள உளேன்'*** [45]

*அன்று அவரோடு கூடிய ஞான்று பெற்ற இன்பத்தை நினைத்துக் கொண்டு இருப்பதனால் உயிர் வாழ்கின்றேன். அவருடைய நினைவின்றேல் எங்ஙனம், உயிர் வாழ்வேன்? எனத்தலைவன் நினைவாகத் தான் இருப்பதை வெளிப்படுத்துகின்றாள் தலைவி.*

*நினைவுகளே தலைவியை உயிர்பெறச் செய்கிறது. மறந்துவிட்டேன் என்றால் எப்படி உயிர்வாழ்வேன். நான் இறந்து விடுவேன் என்கிறாள் தலைவி.*

***'காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து***

***ஏதிலர் போல வரும்'*** [46]

*காதலருடன் தலைவி இருந்தபொழுது மாலைக்காலம் மிகவும் இன்பம் அளித்தது. மாலை எப்பொழுது வருமோ என்று எதிர்பார்க்குமாறு இருந்தது. ஆனால், தலைவனைப் பிரிந்துள்ள நேரத்தில் மிகவும் துன்பம் அளிக்கிறது. இன்பத்துக்குரிய சூழ்நிலையை மாலை அளித்தபோதிலும் காதலர் இல்லாமையால் அச்சூழ்நிலை துன்பத்தைக் கொடுக்கின்றது.*

*ஆகவே, மாலை கொலைக்களத்தில் கொலைஞர் தோன்றுவதுபோல் தோன்றுகின்றது எனப்பட்டது.*

*மாலைப் பொழுது மனதிற்கு இனிமையையும் அமைதியையும் மகிழ்ச்சியையும் கொடுக்கும் நேரம். அந்தச் சூழலில் பிரிந்து இருக்கும் தலைவனின் நினைவு வந்து வாட்டுவதால் கொலைக் களத்திற்கு ஒப்பாகக் கூறுகிறாள் தலைவி. சங்க இலக்கியங்களில் பெரும்பாலும் புலவர்கள் காதலைப் பற்றிப் பாடும் பொழுது பாடுபொருளாக மாலைப் பொழுதைக் கையாண்டிருப்பதைக் காணலாம்.*

***'மாலை நோய்செய்தல் மணந்தார் அகலாத***

***காலை அறிந்தது இலேன்'[47]***

*காதலருடன் கூடி வாழ்ந்தபோது மாலை இன்பம் செய்தது. பிரியும் போது இவ்வாறு துன்பம் செய்யும் என்று அறிந்திருந்தால் அவர் பிரிந்து செல்வதற்குத் தலைவி உடன்பட்டிராள். அவர் பிரிந்த பின்னர்தான் மாலைபொழுது துன்பம் செய்தலை அறிந்தாள். ஆகவே, இவ்வாறு அவள் இரங்கி வருந்துகின்றாள்.*

*இன்றைய திரைப்படக் கலைஞர்கள் கூட மாலைப் பொழுதைத் தூதுப் பொருளாகவும், அந்திப் பொழுதை மனதை மயக்கும் பொழுதாகவும் வருணித்துத் திரைப்படக் கவிதைகள் நிறைய வெளிவந்துள்ளன. திருக்குறள் பல கவிதைகளுக்கம் பல கவிஞர்களுக்கும் உயிர் தந்துள்ளது.*

***'அழல்போலும் மாலைக்குத் தூதாகி அயன்***

***குழல்போலு கொல்லும் படை'[48]***

*மாலைக் காலம், காதலனைப் பிரிந்துள்ள தலைவிக்குத் துன்பம் தருகின்றது. அத்துன்பம் நெருப்பால் சுடுவது போன்று உள்ளது. அம்மாலை நேரத்தில் வீடுதிரும்பும் ஆயன் இனிமையாகக் குழலை ஊதுகின்றான்.*

இனிய மாலைப் பொழுதில் இனிய குழலோசையும் கேட்க நேர்ந்தால் தலைவியின் துன்பம் மிகுதியாகின்றது. மாலை வருவதற்கு முன்னர்க் குழலோசை வருவதனால் மாலை வருவதை அறிவிக்கும் தூதாகக் குழல் உருவகப்படுத்தப்பட்டுள்ளது.

குழல் இசையும் வருந்துவதினால் குழல் கொல்லும் கருவியாகவும் உள்ளது போலும் எனத் தலைவி வருந்துகின்றாள். உயிரோடு இருந்தும் உயிர் பிரியும் வலி ஏற்படுகிறது என்கிறாள்.

**'பொருள்மாலை யாளரை உள்ளி மருள்மாலை**
**மாயும்என் மாயா உயிர்'**[49]

உயிர் அழிவுற்றதுதான். ஆனால், அவரை நினைத்து நினைத்து மாலைப் பொழுதில் அழிந்துவிடும் என்று தலைவி கருதுகின்றாள். பொருளீட்டுதலையே பெரிதாகக் கருதி அவளைப் பிரிந்து விட்டதாகக் கருதும் தலைவி, அவர் பொருளை நினைத்துப் பொருள் நினைவாகவே என்றும் உள்ளார். அவள் நினைவு அவருக்குக் கிடையாது என்று கருதுவதனால் அவரைப் பொருள் மாலையர் என்று அழைக்கின்றாள்.

மேலே கூறப்பட்ட குறட்பாக்கள் அனைத்தும் சிக்மண்ட் பிராய்டின் சாவுவுணர்ச்சிப் பற்றிக் கூறும். வாழ்வுணர்ச்சியும் சாவுணர்ச்சியும் எதிரிடையானவை. பல்வேறு உந்துதல்களிடையே வாழ்வு, சாவு உணர்ச்சிகள் எழுந்து கொண்டே இருக்கின்றன. காம உணர்ச்சியின் உந்நுதலில் கூட சாவுவுணர்ச்சி முந்துவதை நடைமுறையில் காண்கிறோம்.[50]

நனவு, நனவிலிக்குள்ளே முரண்பாடுகள் உள்ளன. சாவுணர்ச்சி உள்ளுணர்ச்சிகளின், தமிழ் மரபில் யமன் சாவுவுணர்ச்சியின் ஒருகுறியீடு டெவில் (Devil) ஐரோப்பியச் சமயங்களில் உள்ளது. நரகம், ஹெல் (Hell) ஆகியவை சாவையும் அதனால் ஏற்படக் கூடிய துன்பியல்களையும் காட்டும்.

'சாவுணர்ச்சி அழிப்பு உணர்வைச் சார்ந்தது. அழித்தல் மூர்க்க உணர்ச்சியால் எனலாம். மனித உள் உணர்ச்சியாலும் உள்ளது. அநீதி, அக்கிரமம் எனக் கருதப்படும் வேளை வாழ்வா, சாவா என்ற நிலை ஏற்படுகின்றது. இந்த முரன்பட்ட உணர்ச்சிகளை கலை இலக்கியத்திலும் காண்கின்றோம்.'[51]

வள்ளுவர்,

**'இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து**
**கெடுக உலகு இயற்றியான்'[52]**

என்றார். இதுவும் மூர்க்க குணம் சார்ந்ததே. உலகைப் படைத்தவனை அழிப்பேன் என்றார். அழித்தல் உணர்வின் உச்சம். பாரதி தனிமனிதனுக்கு உணவில்லை எனில் உலகத்தை அழிப்பேன் என்றான். மூர்க்க ஏற்றுதல் என்றும் உளவியலார் கூறுவர். பசி, காமம், கொடுஞ்செயல், தீரா நோய் ஆகியன மூர்க்க உணர்ச்சியைத் தூண்டுவன. இதனைப் புராணங்கள், காவியங்கள், கலை இலக்கியங்களிலும் காணமுடிகிறது.

## திருவள்ளுவரும் சிக்மண்ட் பிராய்டும் ஒத்த தன்மையும், வேறுபட்ட தன்மையும்

பிராய்டும் திருவள்ளுவரும் நனவிலி மனம் பற்றி கூறும் கருத்துக்கள் ஒத்த தன்மையுடையனவாக அமைந்துள்ளதைக் காணலாம். நனவு மனம் நனவிலி மனம் (விழிப்பு நிலை, விழிப்பற்ற நிலை) என்பதைப் புரிந்து கொள்ளின் பல்வேறு பொய்மைகளுக்கு விடை தேடி விடலாம். உதாரணமாக இன்று திரைப்பட, கலை இலக்கியங்களில் எல்லாம் முதன்மையாகக் கூறப்படும் காதல் (காமம்) பற்றிய பொய்ம்மையாகும்.

*நனவில் கவர்ச்சியான ஆண்மகனைக் கண்டதும், பெண் இன்பமும் மகிழ்ச்சியும் அடைகிறாள். நனவிலிது மனதில் மீட்டெடுத்து நேரில் கண்டதும் பார்க்கத் தொடர்ந்து இன்ப மகிழ்ச்சியடைகிறாள்.*

*வள்ளுவரின் கருத்தும் இதுவேதான். மனதை நனவு மனம், நனவிலி மனம் எனப்பிரித்து பார்ப்பது சிக்மண்ட் பிராய்டு சென்ற நூற்றாண்டிலேயே விளக்கினார். வள்ளுவர் நனைவிலி மனதை கனவு நிலையாகக் கண்டார். இருவரின் ஒத்தத் தன்மைகள் இவை.*

*வள்ளுவர் இக்கூற்றைப் பெண்ணை முன் வைத்துக் கூறிய போதும் ஆண்களுக்கும் பொருந்துவதே. கனவுக் கன்னி, கனவுக் காதலி என இன்று திரைப்பட நடிகைகளை வைத்துப் பாலுணர்ச்சியைத் தூண்ட வல்லனவாகக் கூறப்படுவதும் நனைவிலி மனதில் பதிந்த கவர்ச்சிப் பெண்ணையே குறிக்கும்.*

*இந்த ஒரு கனவுக் கன்னி என்ன பல்வேறு கவர்ச்சிப் பெண்களையும் நனைவிலி மனதில் படத்திலும் சிறப்பாக பதிந்து வைக்கலாம். இது ஆணுக்கும், பெண்ணுக்கும் சமமானதே. 'கனவுக் கன்னி' என்று கூறப்பட்டது கனவில் அப்பெண்ணை எளிதில் காண முடியாது. நினைவு மனதில் எவ்வேளையும் வரச்செய்து மகிழ முடியும். 'கனவு' என்னும் வார்த்தையை நம்மால் விட்டுவிட முடியவில்லை. விழிப்பற்ற நிலையிலிருந்து விழிப்பு மனதிற்குக் கொணர்வதே யதார்த்த நிலையாகும்.*

**காதல் பொய்ம்மை**

*ஒரு கவர்ச்சிப் பெண்ணைக் கண்டு காதலிக்கிறேன் என்பதும் பொய்மையே. பெண்ணிடம் காதலைக் கூறுவதும் அல்லது பெண் விம்பியவனைப் பார்த்து காதலைச் சொல்வதும் பொருளற்றதே. கலை, இலக்கியம் அல்லது திரைப்பட மொழியாகக் பயன்படுத்துவதே. அவ்வார்த்தை யதார்த்தமானால் திருமணம், குடும்ப உறவுக்கு, காம தீர்வுக்கு*

அழைப்பதாகும் எனக் கொள்வதே உண்மையானது. காம எழுச்சியில் உடலுறவு தேவைக்காகக் கூறப்படுவது என்றும் கூறலாம்.

வள்ளுவர் காமத்துப் பாலில் ஒரு பெண், ஓர் ஆணை முன் வைத்துக் கூறப்படுவது பொதுமையான காம உறவையே கூறும். ஒருதார மணமுறையை வள்ளுவர் காமத்துப்பாலில் சுட்டவில்லை. ஊடல் கூடல் யாவும் காம உறவின்வேளை தற்காலிகமாகக் கூறப்படுவதே ஆகும்..

இல்லறவியலில் இல்வாழ்க்கை, வாழ்க்கைத்துணை, நலம், மக்கட்பேறு, அன்புடைமை, விரும்தோம்பல் ஆகிய குடும்ப உறவுகளின் தேவைகளைக் கூறி அறம், அன்பையே வலியுறுத்துவார் வள்ளுவர்.

சிக்மண்ட் பிராய்டு வாய் இன்பத்திற்கு முக்கியத்துவம் தருவார். 'ஓறல் பிளெஷர்' (Oral pleasure) என ஆங்கிலத்தில் கூறுவார். குடித்தல், மெல்லுதல், கடித்தல், நக்கல், முத்தமிடுதல், சல்லாபம் செய்தல், மௌனம் என வாய் இன்பச்செயல்கள் நீளும். உடல்களும் முதன்மை பெறும்.

வள்ளுவர் கூறும் ஐம்புலன்களிலும் கேட்டல், உண்டு முகர்தலையும் சுவைத்தலையும், பார்க்கலாம். 'சாடிஸ்' (sadist) என்னும் வதைத்துறு இன்பத்தில் கடித்தல். பற்குறி சிறப்புப் பெறுகிறது. மேலும், உறிஞ்சுதல், மெல்லுதல், கடித்தல், நக்குதல் போன்றவையும் வாய்ச் செயல்பாடுகளே. பற்குறி, நக;ககுறி என்பனவும் வதை சார்ந்த பாலியல்பு எனப் பண்டைய இலக்கியங்கள் போற்றும். ஆனால் கண்டிப்பதில்லை. காம வெறியின் தன்மை என ஏற்றுப் பெருமைப் படுத்துவதாக ஆண் திறனாய்வாளர்கள் கூறுவர். ஆனால் மகளிரோ தோழியரிடம் காட்டிப் பெருமைப்படுவதாக பாடியுள்ளார். அவளே காயங்களைத் தடவக் காமச் செயலை நினைத்து இன்புறுவாள் என்பர்.

**காமசூத்திரம்**

*வடக்கிலிருந்து வந்த நூல் கருத்துக்களை வள்ளுவர் அறியாதிருந்தார் எனக் கூறிவிட முடியாது. வள்ளுவரின் அரசியல் கூறும் பொருட்பால் வெறும் கற்பனையல்ல. அதைக் காமத்துப்பால் எனவும் கூறலாம். ஆகவே, அர்த்தசாத்திரம் மட்டுமல்ல, காம சூத்திரத்தையும் அவர் அறிந்திருக்கவில்லை எனக் கூறிவிட முடியாது.*

*காமத்துப்பாலில் பெண்ணிடம் பாலின்பம் பெறும் ஐம்புலன்கள் உள்ளதாக வள்ளுவர் கூறியுள்ளார். அதே வேளையில் குறள் எண் 16ல் 'பொறிவாயில் ஐந்து அவித்தான்' என ஐம்பொறிவாயிலாகப் பிறக்கும் வேட்கையை அறுத்தவன் என்பார். குறள் எண் 24ல் ஐம்பொறிகளைக் காப்பவர் என்றும் வள்ளுவர் கூறுவார். ஐம்பொறிகளைப் பற்றி வள்ளுவர் கூறும் இடங்கள் இவையே.*

*சிக்மண்ட் பிராய்டின் நனவு மனம், நனவிலிமனம் என்று பிரித்த ஆய்வு நடைமுறையாக நிரூபிக்கப்படக் கூடிய கூற்றாகும். மனநலம் பற்றி வள்ளுவரே அக்காலத்திலேயே சிந்தித்திருந்தார். மனத்தூய்மை பற்றியும் கூறினார்.*

*மறந்துவிட்டேன். நினைத்தேன் வந்தாய், போன்றவை மட்டுமல்ல , மொழி, கல்வி, கேள்வி அனைத்தையும் நனவு மனத்தில் கற்று நனவிலி மனத்தில் தேக்கி வேண்டியவை வேளையெல்லாம் நினைவு மனத்தில் கொணர்ந்து பேசுகிறோம். ஒப்புவிக்கிறோம். தேர்வில் எழுதுகிறோம். இவை எல்லாம் வள்ளுவரின் கருத்துக்களோடு பிராய்டின் கருத்துக்கள் ஒத்துள்ளது என்பதை அறிய முடிகிறது.*

*வள்ளுவர் கூறும் காமத்துப்பால் வேட்கை அமைவதிலிருந்தே பெண், ஆண்களின் மனவளர்ச்சி பாலின்பத்திற்குத் தூண்டும் நிலையைக் குறள்கள்*

கூறும் காமத்துப் பாலில் பகுதிக் குறள்கள், பெண்ணினத்தின் பால் வந்தல் மனோ நிலையையும் மறுபகுதிக் குறள்களில் ஆண்களின் காம எழுச்சி உந்தலைக் கூறுவதாகவும் வள்ளுவர் சமன்படுத்திக் கூறியது தனிச்சிறப்பாகும்.

மேலும், பாலுறவின்பத்திற்குப் புலன்களின் திருப்தியையும் பிராய்டு கூறுவார். தக்க உணவு, நீர், பானம், போன்றவற்றையும் குறிப்பிடுவார். நறுமணம், கவர்ச்சி அழகு, அங்கங்கள் ஆகியவற்றையும் கவனிக்கலாம்.

பாலுணர்ச்சி ஓர் உடல் சார்ந்த உள்ளுணர்ச்சி பால் நிலை (sexuality) என்பது பாலுணர்ச்சியின் பண்புகளைக் குறிக்கும். அடுத்தது பாலுணர்ச்சி சார்ந்த செயல், பாலின்பத்தை அடைய பாலுறவு விளங்கினாலும், பாலுறுப்பு அல்லாத பிற உறுப்புகள் வழியாகவும், பாலின்பம் பெறப்படுகிறது என்பார் பிராய்டு.

பாலுறுப்பு அல்லாத பிற உறுப்புகள் மூலம் பாலியல் செயலோடு தொடர்புப்படுத்தலாம். வாய், காது, மூக்கு, கண்கள், குதம், சிறுநீர், நாளம், தசைப்பிடிப்புப் பகுதிகள் போன்றவை பாலின்பத்தில் பெரும்பங்கு கொள்கின்றன என்பார் பிராய்டு.

## ஐந்து உறுப்புகள்

வள்ளுவர் கூறிய ஐம்புலனின்பம் பிராய்டு கூறும் பாலின்ப உறுப்புகளில் அடங்கும்.

கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறிதல், பெண்ணை நோக்கி வள்ளுவர் கூறிய போதும், ஆண் மகனான தன்னுடைய அனுபவத்தையும் கற்றுக் கொண்டவற்றையும் வைத்தே கூறினார். பரிமேலழகர் தம் உரையில் ‘கண்ணால் கண்டும், செவியால் கேட்டும், நாவால் உண்டும், மூக்கால் மோந்தும், மெய்யால் தீண்டியும் அனுபவிப்பது என்பார்’. மு.வ. காலம் தேவைக்கு ஏற்ப கண்டும் கேட்டும் உண்டும், முகர்ந்தும், உற்றும் அறிதல்

*எனப் பரிமேலழகர் உரையைத் தணிக்கை செய்வார். அவயங்களைக் கூறியபோதும் அவற்றிலிருந்து அடையும் பாலுணர்ச்சியாகி புலனுணர்ச்சியை அவர் எழுத்துத் தணிக்கைக்கு உட்படுத்திக் கொண்டார்.*

## வள்ளுவரும் பிராய்டும் வேறுபடும் இடங்கள்

*திருவள்ளுவர் கி.பி. 4ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பர். சிம்ண்ட் பிராய்டு சென்ற நூற்றாண்டில் வாழ்ந்து (1856 - 1939) மறைந்தவர்.*

*சிக்மன் பிராய்டின் 'இட்' கோட்பாடு நார்ஸிசம் எனும் தனித்தனியான தற்காதல் இன்பம் பற்றியே கூறும். வள்ளுவரின் ஐம்புலன் இன்பம் ஆண்பாலரையே தனியாகக் குறிக்கும். பாலுறவிலும் பெண் பெறும் ஐம்புலன் இன்பம் தனியானதே. இதுவே நடைமுறை உண்மை. நார்ஸிசம் தற்காதல், சோர்வுற்ற, மகிழ்ச்சியற்ற நிலையில் தம்மைத் தாமே காமுற்றனர் என்பதை மறந்து வாழ்கின்றனர். இது பலருக்கும் கசப்பான உண்மை. சிக்மண்ட் பிராய்டும் கூறினார். அத்துடன் அவர் கூறிய 'ஈகோ' என்னும் ஆணவமும் ஆணாதிக்க நடைமுறையில் காணலாம்.*

*பிராய்டு உளவியல் ஆய்வை தொடங்கி வைத்தவர். அதைத் தொடர்ந்து லக்கான் என்ற பிரெஞ்சு ஆய்வாளர் நனவிலியை மொழியொடு தொடர்புபடுத்தினார். நனவிலியின்அமைப்பு மொழியின் அமைப்பைப் போன்றது என்ற கருத்தியலை நிறுவினார். ஆனால், வள்ளுவர் நனவு மனம், கனவு மனம் எனத் தனியாக ஆராய்ந்துள்ளார்.*

*பிராய்டின் அணுகுமுறையில் உணர்ச்சிகளுக்கும் எண்ணங்களுக்கும் சமத்துவம் தந்தார். மனிதரின் உடல் வாழ்விலிருந்து உளவாழ்வு வேறுபட்டது. இரண்டுக்கும் பொதுவாகப் பாலுணர்ச்சியையே பிராய்டு முதன்மைப் படுத்தினார். உளப்பால்நிலை ஆண்மை, பெண்மை அமைப்பானது. உடல் உள்ளம் இரண்டையும் ஆழமாக அணுகுவதற்கு*

*பிராய்டின் முறைகளே ஆரம்ப அணுகுமுறை. மனித இனத்தின் அடித்தள இரகசியங்களைக் கண்டறிய பிராய்டின் கோட்பாடுகளே இன்றுவரை உதவுகின்றன.*

*திருவள்ளுவர் எதையும் மறைத்து ஒளித்துக் கூறவில்லை. உள்ளத்தில் தோன்றும் உணர்வுகள், உடலில் தோன்றும் உணர்வுகள் இவை இரண்டையும் தீர்க்க வழி கண்டவர். இதன் மூலம் பிராய்டு காமத்தினை மன உளவியல் முறையிலும், வள்ளுவர் மனித உணர்வுகளின் அடிப்படையிலும் ஆராய்ந்துள்ளனர் என்பதனை அறிய முடிகின்றது.*

## தொகுப்புரை

*மலரினும் மெல்லியது காதல். அக்காதலுக்கு இலக்கணம் கண்ட நூல்கள்தாம் பற்பல. காதற் கண்ணுடன் உலகியலை அணுகிய ஓர் இனம் தமிழினம் மட்டும்தான்.*

*பழங்காலச் சமுதாயத்தில் ஒருவகைக் குடும்ப ஒழுக்கம் போலவும் சமுதாயத் தேவைப்போலவும் ஒழுக்க கேடென்று ன்பது போலவும் அது பரவிக் கிடந்ததையும் அது ஒளிமறைவின்றி இலக்கியப் படுத்தியதும் சங்க இலக்கியங்களையும் திருக்குறளையுமே சாரும் என்றால் அது மிகையாகாது.*

*உளவியற் பகுப்பாய்வு வழியமைந்த இலக்கியத் திறனாய்வில் பிராய்டின் தாக்கம் மிகப் பெரிய அளவில் அமைந்தாகும். பிராய்டு உருவாக்கியளித்த உளவியற் கோட்பாடுகள் உலகெங்கிலும் உள்ள அறிஞர்களின் உள்ளத்தை உலுக்கம் வண்ணம் அமைந்துள்ளது.*

*ஒருவர் நினைப்பதை மற்றொருவர் தடுக்க இயலாது. காதலர் தாம் கூறிய உறுதிமொழியை மறந்து பிரிந்து சென்றுள்ளதை நினைத்து அவரை பாராட்டுவது போல் தன் வருத்தத்தை தலைவி வெளிப்படுத்துவதாக*

உளவியல் நோக்கில் திருவள்ளுவரும் சிக்மண்ட் பிராய்டும் ஒரு சேர கூறியுள்ளனர்.

மனித இனத்தின் தனிச்சிறப்பு நினைவிலி மனதில் பதிந்திருப்பவற்றை வேண்டிய வேளை மீட்டிப் பார்ப்பதுதான் என்பது உளவியல் செய்தியாக கூறப்பட்டுள்ளது.

# இயல் 3

## குறிப்புகள்

1. *வ. சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், ப. எண். 05.*
2. *மேலது, ப. எண். 25.*
3. *சிக்மண்ட் பிராய்டு, உளப்பகுப்பாய்வு அறிவியல், ப. எண். 535.*
4. *மேலது, ப. எண். 536.*
5. *மேலது, ப. எண். 537.*
6. *திருக்குறள், பா. எ. 1211.*
7. *மேலது, பா. எ. 1212.*
8. *மேலது, பா. எ. 1215.*
9. *மேலது, பா. எ. 1216.*
10. *மேலது, பா. எ. 1218.*
11. *மேலது, பா. எ. 1220.*
12. *மேலது, பா. எ. 402.*
13. *மேலது, பா. எ. 420.*
14. *மேலது, பா. எ. 440.*
15. *சிக்மண்ட் பிராய்டு, உளப்பகுப்பாய்வு அறிவியல், ப. 257.*
16. *திருக்குறள், பா. எ. 1281.*
17. Kaplan and Kloss, The Unspoken Motive, p. 163.
18. *திருக்குறள், பா. எ. 1296.*
19. *மேலது, பா. எ. 1297.*
20. *மேலது, பா. எ. 1201.*
21. *மேலது, பா. எ. 926.*
22. *மேலது, பா. எ. 1316.*
23. *மேலது, பா. எ. 1054.*
24. *மேலது, பா. எ. 1207.*
25. *மேலது, பா. எ. 1208.*
26. *மேலது, பா. எ. 1210.*

27. பிராய்டு, பக்.122.

28. திருக்குறள், பா. எ.1257.

29. மேலது, பா. எ.1252.

30. மேலது, பா. எ.1253.

31. மேலது, பா. எ.1257.

32. திருவள்ளுவரும் சிக்மண்ட் பிராய்டும், ப. எ. 71.

33. மேலது, ப. எ. 72.

34. திருக்குறள், பா. எ.1330.

35. மேலது, பா. எ.1109.

36. மேலது, பா. எ.1322.

37. மேலது, பா. எ.1323.

38. குறுந்தொகை, பா. எ. 3.

39. திருக்குறள், பா. எ.1327.

40. மேலது, பா. எ.1329.

41. மேலது, பா. எ.1151.

42. மேலது, பா. எ.1160.

43. மேலது, பா. எ.1193.

44. மேலது, பா. எ.1198.

45. மேலது, பா. எ.1206.

46. மேலது, பா. எ.1224.

47. மேலது, பா. எ.1226.

48. மேலது, பா. எ.1228.

49. மேலது, பா. எ.1230.

50. திருவள்ளுவரும் சிக்மண்ட் பிராய்டும், ப. 75.

51. மேலது, ப. எ. 77.

52. திருக்குறள், பா. எ.1062.

# இயல் 4

# திருக்குறள், காமத்துப்பாலில் உளவியல்

*உலகியல் வாழ்கைக்கு அடித்தளமாகக் காதல் வாழ்க்கை அமைகிறது. திருக்குறளில் காமத்துப் பாலில் காதல் வழி வாழ்க்கை நிலை, இன்பமும் காமமும் வேறுபடுகின்ற விதம், அன்பு நிலை வெளிப்படல், கற்பு நிலை ஆகியவை தெளிவாகவே விளக்கப்பட்டிருகிறது.*

*தூய உள்ளுணர்வால் ஒருவரையொருவர் உணர்ந்து பழகிய உயர்ந்த அன்பு வாழ்க்கையை இன்பமாக வாழ வழிகாட்டுகின்ற அன்பு நெறியே காமமாகும். அது ஒத்த வயது, ஒத்த உயர்வு, ஒத்த நிறைவு என்ற அடிப்படையில் அரும்பி மலர்ந்து கனிந்திடும் நிலையை வலியுறுத்துவதாக விளங்குகிறது. அத்தகைய தூய அன்பு வாழ்க்கை களவு வாழ்க்கை, கற்பு வாழ்க்கை, என இருவகைப்படும். களவு வாழ்க்கையானது உணர்வுகளால் உந்தப்பட்டுப் புறக் காரணங்களால் தள்ளப்படாத ஒத்த நிலையாகும். இதற்கு நிலப்பாகுபாடோ, திணைப் பாகுபாடோ கிடையாது. பேதமற்ற கடவுள் நிலைபோலும் காதலில் களவு நிலை எனலாம்.*

*சாக்ரடீஸ் என்னும் அறிஞர் காதலுக்கு விளக்கம் தருகிறார். ஆதியில் ஆணும் பெண்ணும் சேர்ந்த அர்த்த நாரீசுவரர் வடிவம் ஒரே உடம்பு பெற்று இருப்பதை இறைவன் அந்த வடிவத்தை பிளந்து ஆண் வேறாகவும், பெண் வேறாகவும், தனித்தனியே இரு வடிவங்களாக ஆக்கியதை கூறுகிறார். ஒரு உயிர் தங்கிய உடல், உடலளவில் இரண்டாகி விட்டது. ஆதலால் மீண்டும் இரண்டும் ஒன்றாக இணைந்து ஒருயிராக இரண்டும் ஒன்றாக இணைந்து ஒருயிராக வேண்டுமென்று துடிப்பதாகும். அந்த துடிப்பே காதல் என்று விளக்குகிறார்.[1] ஆகவே, ஆணின்றி பெண்ணில்லை, பெண்ணின்றி*

ஆணில்லை என்று கருத்தொருமித்த இன்ப வாழ்வு பற்றி காமத்துப்பால் விளக்குகிறது.

**திணை கூறும் காதல் நிலை**

காதல் வாழ்க்கை அன்பின் ஐந்திணையாகக் கொண்டு ஐந்து நிலப்பொருள்களின் வழியே பாகுபடுத்தியுள்ளார் தொல்காப்பியர். அன்பின் ஐந்திணை வழியே செயற்படும் அகமாவது ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியும் உள்ளம் ஒன்றுபட்டுக் கூடுதல், பின்னர் அக்கூடுதலின் தோன்றும் இன்பம் எத்தகையது என்று அனுபவித்து எவரானும் புலப்படக் கூற இயலாததாய் உள்ளத் தளங்களில் உணர்ந்து போற்றும் திறந்ததுவாய் அகத்தே நிகழ்வதாகும். இதனைத் தொல்காப்பியம்,

> **'பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு**
> **உருவு நிறுத்த காமவாயில்**
> **நிறையே அருள் உணர்வோடு திருவென**
> **முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே'[2]**

என்று கூறுகிறது. அதன் வழியே குறள்கூறும் அகத்திணை மாந்தர்கள் குறிக்கோள் கொண்ட தலைமக்களாகப் பிணி, மூப்பு, இறப்பு என்பன சுட்டப்படாதவர்களாக உள்ளனர்.

பிணி, மூப்பு, இறப்பு சுட்டப்படாததால் இல்லது எனவும், உருவும் திருவும் ஒத்தனவாய் இருப்பதால் நல்லது எனவும் இயம்புவர். இப்படி இல்லது, இனிய நல்லது எனப் போற்றும் காதல் வாழ்க்கையே உலகந்தழுவிய உயர்ந்த வாழ்க்கைக்கு அடித்தளமாக அமைகிறது.

காமம் என்ற காதல் வாழ்க்கை பொருள் சேர்த்தலும், அகப்பொருளின் துணை கொண்டு அறம் பெருக்குதலும், அதன் வழியே அன்புடன் இல்லற வாழ்வு நடத்துதலும் ஆகும். இதன் இயல்பைத் தொல்காப்பியம்,

**‘இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**
**அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்**
**காமக் கூட்டம் காணும் காலை**
**மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்**
**துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே’[3]**

என்று இயம்புகிறது. புணர்தல் உணர்த்தும் குறிஞ்சித் திணையும், பிரிதல் உணர்த்தும் பாலைத் திணையும், இருத்தல் உணர்த்தும் முல்லைத் தினையும், இரங்கல் உணர்த்தும் நெய்தலும், ஊடல் தரும் மருதமும் அன்பொடு புணர்ந்த ஐந்திணையாய் அமைதலே குறள் கூறும் காதல் வாழ்க்கையின் அன்புக் களங்கள் ஆகும்.

அன்பின் ஐந்திணை வழிபட்ட காதல் வாழ்க்கையின் களமாக இருப்பது, களஞ்சியமாக இருப்பது திருக்குறள் உரைக்கும் காமத்துப்பால். அது காதலின் மேன்மையைச் சொல்லும். காதலின் அருமையைச் சொல்லும். காதலின் பெருமையைச் சொல்லும், காதல் போயின் சாதல்[4] என்ற சிறப்பை உணர்த்தும்.

உடலில் இரத்தம் ஓடிக்கொண்டே இருப்பதால் உடல் இயங்கிக் கொண்டே இருப்பதுபோல இன்ப உணர்வோட்டங்கள் நரம்புகளிலே இடையறாது ஓடிக்கொண்டே இருப்பதால்தான் உலக இயக்கம் சீராக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது எனலாம். இன்பம் என்பது எல்லா உயிர்களுக்கும் பொதுவானது. இதனைத் தொல்காப்பியம்,

**எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**

**தான் அமர்ந்து உருஉம் மேவற்றாகும்'[4]**

என்று உரைக்கின்றது. வீசிக் கொண்டிருக்கும் காற்றைப் போல இன்ப அலைகள் உணர்வுகளைப் பின்னிக் கொண்டே இருக்கும். அந்த நம்பிக்கையில் தான் வாழ்க்கை ஓடிக்கொண்டு இருக்கிறது.

## காமத்துப்பாலில் காதல் வாழ்க்கை

வாழ்க்கை என்பது பிறரை அடக்கி வென்றால்தான் அவர்களுடன் வாழமுடியும் என்ற நிலையில் இயங்கிக் கொண்டிருக்கும் உலகத்தில் அன்புடையவர்களிடம் அடங்கித் தோன்றுவதே நன்மை என்பதை உணர்த்தும் காதல் வாழ்க்கையைக் காமத்துப்பால் காட்டுகிறது. அது காதலிக்கும் உள்ளங்களுக்குக் கையேடாகும். தன்னிடம் குற்றங்கண்டு காதலி ஊடும்போது காதலன் எதிர்த்து வெல்ல முடியாமல் மாறாகப் பணிந்து காதலிக்கு வெற்றியளிக்க முந்துவதாகும். குற்றங்கண்டு ஊடிய காதலியின் நெஞ்சம் கசிந்து உருகுகிறது. பல பொய்கள் வல்ல கள்வனான காதலனுடைய பணிவான மொழிகளே அவள் கட்டிக்காத்து வந்த பெண்மையாகிய அரணை அழிக்கும் படையாகும். ஊடல் தேனூறல் ஆகிய ஆடல் புரிகிறது. அதனால் ஊடலை விடுத்து உள்ளம் நெகிழ்கிறாள் தலைவி இதனை,

**'பண் மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்**

**பெண்மை உடைக்கும் படை'[5]**

என்று காமத்துப்பால் காட்டும். இதனால் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்துப் போகும் வாழ்க்கையால் அமைதி தழைக்கும். இன்பம் கொழிக்கும். அதுவே சமுதாய வாழ்க்கையின் சாரமாக அமையும். இந்த சிறந்த பண்பைக் காதல் வாழ்க்கையில் அல்லாமல் வேறு எங்கு கற்க முடியும்

என்பதை சுட்டிக் காட்டுகிறது. இதையே வெளியுலகில் அன்புடையவர்களிடம் மட்டும் அன்றி அன்பு இல்லாதவர்களிடம் செயல்படுத்தும்போது அது சால்பு என்னும் சான்றாண்மையாக அமைகின்றது. இதனையே,

**'சால்பிற்குக் கட்டளை யாதெனின் தோல்வி**
**துலையல்லார் கண்ணும் கொளல்'**[6]

என்று குறள் கூறுகிறது.

## காமத்துப்பாலில் இன்பமும் காமமும்

'இன்பம் என்பதற்கு அகமகிழ்ச்சி, இனிமை, காமம், கல்யாணம், சொல்லினும் பொருளினும் சுவைப்படுவதாகிய குணம் என்னும் ஐவகைப் பொருளைத் தருகின்றது'[7] என்று தமிழ்ப் பேரகராதி கூறுகிறது.

'காமம் என்பதற்கு விருப்பம், உறுதிப் பொருள்களுள் ஒன்றான இன்பம், புணர்ச்சி, இன்பம், காமநீர், விரும்பிய பொருள், இலக்கணத்துக்கு ஏழாமிடம் என்னும் ஆறுவகைப் பொருள்களைத் தருகின்றது'[µ].

'திருக்குறள் காமத்துப்பாலில் ஆண், பெண் என்னும் இருவரிடத்து நிகழும் அன்பு நிலையே காதல் ஆகும். வள்ளுவர் தொல்காப்பியர் முதல் வழங்கிவரும் தமிழ் இன்ப அன்பு மரபுகளையே கூறுகிறார்'[9] என்கிறார் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார்.

'காமம் என்பது கணவன் மனைவியரிடத்திதேயே அல்லது ஆண் பெண் இருபாலரிடையே நிகழக் கூடிய சிறப்பு வகைநேயம். கணவன் மனைவியர் இல்லற இன்பம் துய்த்ததற்குக் காரணமான நேயம் என்னும் பொருளிலேயே காமம் என்னும் சொல்லை ஆண்டு, இன்பத்துப் பாலை காமத்துப்பால் எனக் குறித்தனர் வள்ளுவர்'[10] என்கிறார் ஞா. தேவநேயன்.

திருக்குறளில் காமம் என்பது விருப்பம் புணர்ச்சி, இன்பம் என்னும் பொருள்களில் வழங்கப்பட்டுள்ளது.

**‘இன்பம் கடல் மற்றுக்காமம் அஃ்தடுங்கால்**

**துன்பம் அதனிற் பெரிது’**[11]

என்னும் குறள் வழி அறியமுடிகிறது.

## அன்பு நிலை வெளிப்படல்

அன்பு என்பது வல்லமை நிறைந்ததாகும். வல்லமை ஒன்றே வெற்றிக்கு வழியென்று உலகம் சொல்கிறது. ஆனால் வல்லமை இகழ்ந்து அல்லவை விடுத்து நல்லவை நாடும் மென்மையை மேற்கொண்டு, இணங்கி நடப்பதால் வாழ்க்கை சிறக்கும் என்று காதல் கூறுகின்றது. காதல் வாழ்க்கையில் இந்தப் பயிற்சியைப் பெற்றவர்கள் அக்குணத்தை வெளியுலகிலும் மேற்கொண்டு வாழும் போது அருளுடையவர்களாகவும், சினமற்றவர்களாகவும், இன்னா செய்யாதவர்களாகவும், போற்றப் படுகிறார்கள். காதலில் தலைவனாக இருந்தவன் மக்கள் தலைவனாக மாறுகிறான், மதிக்கப்படுகிறான். துதிக்கவும் படுகின்றான். அவனும் மக்களை நேசிக்கத் தெரிந்தவனாகின்றான். அந்த நேசம் சமுதாயப் பாசமாக மாற்றுகிறது.

புறக்கணித்தவர்களை மீண்டும் மீண்டும் நாடும்போது அன்பு மலர்கிறது. அன்பு மலர்ந்த நெஞ்சில் நெருப்புக்கு இடமில்லை. கருப்புக்கும் இடமில்லை. நெருப்பும் நீராகிறது. கருப்பும் வெண்மையாகிறது. வெறுப்புக் கொண்டு அகன்றாலும் விருப்பங் கொண்டு நெருங்குகிறது. இதையே,

**‘செற்றார் எனக்கை விடல் உண்டோநெஞ் சேயாம்**

**உற்றால் உறாஅ தவர்’**[12]

என்று குறள் இயம்புகின்றது. இக்குறள், காதலாகி, கற்பிக்கும் நிலையாக மாறுகிறது. இந்த ஆற்றல் காதல் வாழ்க்கைக்கு மட்டுமே உரியதாகும்.

*வானம் பொழிகிறது. மழையாக வாழுகிறது. காதலாகிக் கற்பிக்கும் நிலையாக மாறுகிறது. வெவ்வேறிடத்தே வீழ்ந்த நீரும் இணைகிறது. உலகம் புரக்கும் சுனையாகிறது. அதுபோல் தாய் யாரே, தந்தை யாரோ, அவர்கள் எவ்வழியில் உறவுடையவரோ தெரியாது. ஒருவரையொருவர் அறியாத வண்ணம் எதிர்ப்படுகின்றனர். வெவ்வேறிடத்து நீரும் ஒன்று கலந்தது போல இருவரும் கலக்கின்றனர். காலம் அவர்களை இணைக்கின்றது. அதுவே காதல் வாழ்க்கையாகும். இதனை,*

***'யாயும் யாயும் யாராகியரோ***
***எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்***
***யானும் நீயும் எவ்வழி அறிதும்***
***செம்புலப் பெயர் நீர்போல***
***அன்புடை நெஞ்சந் தாங் கலந்தனவே'[13]***

*என்று குறுந்தொகை ஓவியமாக்கிக் காட்டுகின்றது. கலப்படமற்ற காதல் வாழ்க்கையை உலக மக்கள் அறிய இயல்கின்றனர். சமுதாயம், நாடு, உலகம் என ஒன்றிப் போகின்றனர். இந்த உயர்ந்த நிலையை அளிப்பது காமம் என்ற காதல் வாழ்க்கை ஆகும்.*

*செய்யுந் தொழிலே தெய்வம் என்ற பாரதியின் கூற்றிற்கிணங்க ஒருவன் தான் செய்யும் தொழிலை மறக்காமல் போற்றி இடையறராது ஒழுகுவதுடன் தான் கொண்ட காமத்தையும் விரும்பி செயல்படுத்துவதாகும். அவனேதான் உற்றார் உறவினருக்கு வரும் துன்பத்தைப் போக்கித் தாங்கும் தூண்போல இருப்பான் என்று குறள் வலியுறுத்துகின்றது.*

***'இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்***
***துன்பந் துடைத்தூன்றுந் தூண்'[14]***

*காட்சியும், காட்சியால் வியப்பும், வியப்பால் எண்ணத்தை அறிதலும், எண்ணத்தை அறிந்தபின் புணர்ச்சியும், புணர்ச்சியின் பின் நலம் உரைத்தலும்,*

*பிரிதலும், பிரிந்தபின் அவர் தூற்றலும், பிரிதலை ஆற்றாத வருத்தமும், வருத்தமுறுதலால் உடல் பசப்பு கொண்டு மெலிதலும், தூக்கங் கெடுதலும் இவற்றிடையே மீண்டும் காண வேண்டும் என்ற அவாவும், ஒருவரையொருவர் நினைத்துப் புலம்பலும், கனவிலும் கண்டு உரைத்தலும், பொழுது கண்டு இரங்குதலும், ஒருவர் குறிப்பை மற்றவர்க்கு உரைத்தலும், விரைந்து காண முந்துதலும், நெஞ்சோடு ஊடுதலும், நேருக்கு நேர் ஊடுதலும், ஊடல் நீங்கிக் கூடுதல் செய்வதும் காம வாழ்க்கையின் கட்டமைப்பாகும். இது காதல் வாழ்க்கைக்கு மட்டும் தானா? இல்லை இணைந்து வாழப் பழகுகின்ற சமுதாய வாழ்க்கைக்குந் தான். வாழப் பழகுவதும், வாழ்ந்து ஒழுகுவதும் உலகியல் வாழ்க்கையின் உயிரோட்டமாக முரண்கின்ற மானிட வாழ்க்கையின் முன்னோட்டமாக அமைகின்றது. காதல் மனிதனை மனிதனாக வாழச் செய்கிறது.*

**கற்புநிலை**

*ஒரு பெண்ணிற்குத் தன்னுடைய கற்பா? தன் கணவனுடைய உயிரா? என்று நிலை வரும்போது தன்னுடைய கற்பைக் காத்துக் கொள்வதே தலையாய கடமை. அதன் பின்னரே மற்றவர்களைக் காப்பாற்ற வேண்டும். அப்படி அவள் தன்னைக் காத்துக் கொள்ள கற்பே தலையானது. இதனை,*

***'தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற***
***சொற்காத்துச் சோர்விலாள் பெண்'***[15]

***'சிறைகாக்கும் காப்புவென் செய்யும் மகளிர்***
***நிறைகாக்கும் காப்பே தலை'***[16]

*என்று திருக்குறள் வழிகாட்டுகிறது. ஆபத்தான நிலையில் முதலில் தன்னைக் காத்துக் கொள்ளவேண்டும். தன்னைக் காத்து கொண்டு நிலைப்பட்ட பிறகு மற்றவர்களைக் காப்பாற்ற முயல வேண்டும் என்ற உலகியல் உண்மை*

புலப்படுகின்றது. தனக்கே நிலையில்லாதபோது பிறருக்காக எப்படி போராடுவது. தன்னை நிலைநிறுத்திக் கொண்டு பிறருக்காகப் போராடுவதே மனித இயல்பாகும் என்ற கருத்தைக் குறள்கள் மூலம் அறியமுடிகின்றது.

'தீதும் நன்றும் பிறர் தர வாரா'[17] என்பது புறநானூறு. ஒருவருக்கு வரக்கூடிய நல்லதும் அல்லதும் வெளியில் இருந்து வருவதில்லை. தனக்குத் தானே திருத்திக் கொண்டு தீதும் நன்றும் திறனறிந்து ஒழுகுதல் வேண்டும். அதன்பின்னரும் தன்னால் பிறருக்குத் தீங்கு நேரின் தானே அத்தீங்குகளை அகற்றுதல் வேண்டும். எவ்வாறெனின் அழகிய மங்கையைப் பார்த்த அகத்தால் முடம்பட்ட ஒருவனின் முடத்தை அம்மங்கையே நீக்கிடல் வேண்டும் என்பது போல திருக்குறள்,

**'பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை**
**தன் நோய்க்குத் தானே மருந்து'**[18]

என்ற வழி உறுதிப்படுத்துகிறது. ஒருவன் தனக்கு வந்த நோய்க்குத் தானே மருந்தாவது போல தன்னால் வந்த துன்பங்களையும் தானே போக்க முயல வேண்டும் என்பதைக் கூறுகின்றது.

## ஐம்புலன்கள்

உடல் என்பது மண், விண், காற்று, நீர், தீ என்னும் ஐம்பூதத்தால் ஆனது. அவற்றின் வழியே மெய், வாய், கண், மூக்கு, செவி என ஐம்புலன்களை உடையது. அந்த ஐம்புலன்களின் வழியே நுகரப்படும் இன்பங்களும் ஐந்து வகையானவை. ஐம்புலனும் ஒருங்கே நுகர்கின்ற ஐவகை இன்பமும் ஒரே பொருளிடம் ஒரு சேரக் கிடைக்கும் என்றால் அந்தப் பொருள் ஒரு மங்கையே ஆவாள். அந்த மங்கையே ஓர் இன்பக் களஞ்சியம் ஆகிறாள். இதனை வள்ளுவர்,

**‘கண்டுகேட்டு உண்டு உயர்த்து ஊற்றியும் ஐம்புலனும்**

**ஒண்டொடி கண்ணேயுள’[19]**

*என்று வரம்பு காட்டுகிறார். அவனே ஐந்து நிலங்களின் வழி அமையும் ஐவகை ஒழுக்கங்களாகவும் இருக்கிறாள். ஆகவே, அன்பின் ஐந்திணைக்கு அவளே படிமப் பொருள் ஆகிறாள் என்பதை,*

| | | |
|---|---|---|
| *தோள் (மூங்கில்)* | - | *குறிஞ்சி* |
| *நாற்றம் (முல்லைமலர்)* | - | *முல்லை* |
| *மேனி (மாந்தளிர்)* | - | *மருதம்* |
| *முறுவல் (முத்து)* | - | *நெய்தல்* |
| *உண்கண் (வேல்)* | - | *பாலை* |

*இப்படி ஐவகை நிலக் கருப்பொருளாய் மங்கை இருக்கிறாள் என்பது மட்டுமல்ல, அவளைக் கொண்டே ஐவகை ஒழுக்கங்களும் அமைகின்றன. இதனை,*

**‘முறைமேனி முத்தம் முறுவல் வெளிநாற்றம்**

**வேல் உண்கண் வேய்ந்தோள் அவட்டு’[20]**

*என்று காலத்தால் அழியாத காவியமாக்கிக் காட்டுகிறது. ஐம்பூதங்களும் ஐம்புலன்கள் வழி ஐவகை நிலங்களாகி ஐவகை ஒழுக்கங்களாகி ஐந்து விரல்களுக்குள் அடங்குகின்ற நிலையே ஒருமைப்பாடு. அந்த ஒருமைப்பாட்டின் சின்னமே ஆரணங்கு. அந்த ஆரணங்கின் வழியே அகிலம் நிலை பெறும் நெறியாகும்.*

*தென் புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல் தான் என்ற ஐவகையினர்க்கும் பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும் பெருமையும் அவர்கட்கேயுண்டு. அவளால் அடையும் இன்பமானது சொந்த வீட்டிலிருந்து சொந்த முயற்சியில் பொருளை ஈட்டி சுற்றத்தோடு*

*பகிர்ந்துண்ணும் இல்லற இன்பத்தை ஒக்கும் என்கிறான் தலைவன். எனவே தான்,*

***'தம்மில் இருந்து தமதுபாத் துண்டற்றால்***

***அம்மா அரிவை முயக்கு'***[21]

*என்று இன்பத்தின் வழியே இயக்கத்தைக் காட்டுகிறார் வள்ளுவர்.*

**ஊடல் நிலை**

*அறுசுவை உணர்விற்கும் சுவையை அளிப்பது உப்பு. உப்பு மிகுந்தாலும் குறைந்தாலும் உணவு பாழே. அதுபோல் காதல் வாழ்க்கையில் ஊடல் அளவோடிருந்தால் வாழ்க்கை என்றும் இன்ப மயமே. அளவான பிணக்கோடு அழகான இணக்கம் காணும் காதல் வாழ்வே வாழ்வு. இதனை வள்ளுவர்,*

***'உப்பமைந்தற்றால் புலவி அதுசிறிது***

***மிக்கற்றால் நீள விடல்'***[22]

*என்பார். அதுபோல யார்பக்கம் எனினும் ஒருவருக்கொருவர் அன்பால் விட்டுக் கொடுத்து இணைந்து வாழப் பழகிவிட்டால் உலகத்தார் அனைவரும் சுற்றத்தாரே என்பதை குறள் வலியுறுத்துகிறது.*

**களவு பற்றி விளக்கம்**

*'களவு என்பதற்குப் பிறர்க்குரிய பொருளை மறையிற் கோடல் என்று பொருள் கூறுவர்'*[23] *இளம்பூரணர்.*

*அறநிலை வழுவாமல் காதலர்கள் கரந்து ஒழுகுவதைக் களவு என்று பண்புடையோர் கூறுகின்றனர்.*

*‘களவு நெறியாவது வாழ்நாள் காணும் ஒருயிர் தன் காதல் செல்லுதற்குரிய மறுபாலுயிரைத் தானே தேர்ந்து கொள்ளும் இயற்கை நெறி’*[24] *என்கிறார் வ.சுப. மாணிக்கம்.*

**களவின் வகைகள்**

*காதலர் மேற்கொள்ளும் களவு வாழ்க்கையின் நிகழ்ச்சிகளை, நான்காகப் பகுத்துக் கூறுகிறார், அவை,*

1. *காமப்புணர்ச்சி*
2. *இடந்தலைப் பாடு*
3. *பாங்கொடு தழால்*
4. *தோழியற் புணர்வு*

*இந்நான்கு பாகுபாடுகளையும் மறையென மொழிதல் மறையோர் அறே என்கிறது தொல்காப்பியம்.*

**காமப்புணர்ச்சி**

*பாலதாணையால், தலைமகனும் தலைமகளும் ஒருவரை ஒருவர் எதிர்ப்பட்டு அன்பால் கூடும் தலைநாள் கூட்டத்தை காமப்புணர்ச்சி என்பர். இது கைக்கிளை, உளப்புணர்ச்சி, மெய்யுறுபுணர்ச்சி என்னும் மூவகைப் படிநிலையைக் கொண்டது.*

**கைக்கிளை**

*கைக்கிளை என்பது ஒருதலை அன்பு இதனைப் புறத்திணைக் கைக்கிளை என்றும், அகத்திணைக் கைக்கிளை என்றும் இரண்டாகப் பகுப்பர். புறத்திணை கைக்கிளை என்பது ஒருதலை அன்பு. அகத்திணைக் கைக்கிளை என்பது ஒருவர் ஒருத்தியினை விரும்பும் நிலை என்பர்.*

தொல்காப்பியர் காணும் சமுதாயம் ஆண் வழிச்சமுதாயம். ஆதலால், ஆணினும் பெண் தாழ்ந்தவள் எனக் கருதியமை உண்டு.

கற்பு என்பது பெண்களுக்கு மட்டுமே உரியதாக்கி ஆடவர்க்கு வலியுறுத்தாமை. ஒரு பெண் ஒருவனை உள்ளத்தால் நினைத்து அவனை அடைய இயலாது போய் விடின் கற்பிழந்தவள் ஆகின்றாள் என்னும் சமுதாயக் கட்டுப்பாட்டு நெறி,

ஆடவர்க்கும் பெண்களுக்கு உரிமைகளைச் சமமாகத் துணியாத ஆடவர் மன இயல்பாகும் எனத் தொல்காப்பியர் கூறுகின்றார்.

**காட்சி**

காட்சி என்பது தலைமகனும் தலைமகளும் ஒருவரை ஒருவர் எதிர்ப்பட்டுக் காண்பதாகும். தொல்காப்பியம் சுட்டும் காட்சியை திருக்குறள்,

**'நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு**

**தானைக் கொண்டன்னது உடைத்து'[24]**

என்ற குறள் மூலம் புலப்படுத்துகின்றது.

**ஐயம்**

தலைமகன், தலைமகனின் உருவப் பொலிவு முதலியன கண்டு அவனை ஐயுறுவது ஐயம் எனப்படும். ஆடவனின் உள்ளத்தில் எழுவதாகும். ஐயம் இருவகைப் படும் என்கிறார் தொல்காப்பியர்.

ஒருவனுடைய உணர்வுகள் மேலோங்கிய நிலையில் செயற்படுங்கால் ஐயம் எழுவது சிறந்தது.

ஒருவனுடைய உணர்வுகள் பண்படாநிலையில் எழும் ஐயம். பாலுணர்வைக் கீழ்மையான நிலையில் செயற்படுத்தும் போது எழும் ஐயம் விலங்குணர்வோடு ஒத்தது இழிந்தது. இதனை,

**‘சிறந்துழி ஐயம் சிறந்த தென்ப**

**இழிந்துழி இனிபே சுட்டலான’[26]**

என்னும் தொல்காப்பிய நூற்பா நுட்பமாக வெளிப்படுத்துகின்றது. இதனை,

**‘அணங்கு கோல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை**

**மாதர்கொல் மாலுமென் நெஞ்சு’[27]**

எனும் குறளுடன் ஒப்பிடலாம்.

கனத்த குழையைக் காதிலே அணிந்துள்ள இவள் சோலையில் வாழும் தெய்வமோ? சிறந்த மயிலோ? அல்லது மக்கள் இனத்தைச் சேர்ந்த பெண் தானோ? இவள் இன்ன வகையைச் சார்ந்தவள் எனத் துணிந்து சொல்ல முடியாமல் மனம் மயங்குகின்றதை, தலைமகன் ஐயப்பாட்டிலிருந்து மெல்ல மெல்ல விடுபடுவதை இக்குறள் வெளிப்படுத்துகின்றது.

## களவில் மெய்யுறு புணர்ச்சி

உள்ளத்தால் புணரும் புணர்ச்சி உள்ளப் புணர்ச்சி. அதுபோல காதலால் கட்டுண்ட காதலர்கள் உடலால் புணரும் புணர்ச்சி மெய்யுறு புணர்ச்சியாகும்.

**‘அல்குல் தைவரல் அணிந்தவை திருத்தல்**

**இல்வலி யுறுத்தல் இருகையும் எடுத்தல்’[28]**

எனத் தொல்காப்பியம் சுட்டும் மெய்யுறு புணர்ச்சியாக அமைகின்றது. வள்ளுவர் இதனை,

**‘தம்மில் இருந்து தமதுபாத்து உண்டாற்றல்**

**அம்மா அரிவை முயக்கு’[29]**

*அழகிய மாநிறமுடைய இவ்வழகிய மங்கையினது சேர்க்கை, தம் வீட்டிலிருந்து தம்முடைய முயற்சியால் வந்த பொருளைத் தமக்கு உரியவர் யாவருக்கும் பகிர்ந்து கொடுத்து தாமும் தமக்குரிய பாகத்தை உண்டு இன்புறுவது போன்ற இன்பத்தைத் தருவதாகும் என்கிறார் வள்ளுவர்.*

**'வீழும் இருவர்க்கு இனிதே வளியிடை**

**போழப் படாஅ முயக்கு'[20]**

*ஒத்த அன்புடைய இருவரும் ஒருவரையொருவர் விரும்பிச் சேர்தல் காதலருக்கு இனிமையுடையதாக விளங்குவதை வள்ளுவர் தெளிவாகச் சுட்டிக் காட்டியுள்ளார்.*

## இடந்தலைப்பாடு

*காமப் புணர்ச்சியில் திளைத்து நீங்கிய தலைமக்கள் உள்ளத்தில் காமம் சிறந்து விளங்கும். வேட்கை மிகுதியால் தம்மையே இழந்து நிற்பர். இதனைத் தொல்காப்பியம் இடந்தலைப்பாடு என எடுத்துரைக்கிறது.*

*புணர்ச்சி மகிழ்தல் என்னும் அதிகாரத்தில் வேட்கை மிகுதியை உணர்த்துவதாக,*

***'அறிதோறும் அறியாமை கண்டற்றால் காமம்***

**செறிதோறும் சேயிழை மாட்டு'[31]**

*என்ற குறள் அமைந்துள்ளது. சிறந்த ஆபரணங்களை அணிந்த இவளைச் சேருந்தோறும் இவள் காதல் புதுமையானது. மென்மேலும் மிகுந்த இன்பம் தரக்கூடியது என்ற கருத்தை இக்குறள் வலியுறுத்துகிறது.*

*'காதற் சிறப்புரைத்தல்' என்னும் அதிகாரத்தில் தலைவனின் மனநிலை வெளிப்படுகிறது.*

**‘கருமணியால் பாவாய் நீ போதாயாம் வீழும்**

**திருநுதற்கு இல்லை இடம்’[32]**

‘என் கண்ணில் கருமணியில் தங்கி உள்ள பாவையே என்னால் விரும்பபப்டுகின்ற அழகிய நெற்றியையுடைய இவள் தங்கி இருப்பதற்கு வேறு இடம் இல்லை. ஆகையால் நீ தங்கியிருக்கும் அவ்விடத்தை விட்டு வெளியே வருவாயாக’ என்று தலைவனின் காதல் மனநிலையைக் இக்குறள் புலப்படுத்துகின்றது.

**பாங்கொடுதழால்**

இடந்தலைப்பாட்டிற்குப் பின் தலைமகனைக் கூடுவதற்குப் பாங்கனின் உதவியைத் தலைமகன் நாடுவதாகக் கொள்வது புலனெறி வழக்கு. பாங்கனால் தலைமகன் கூட்டம் பெற்று மகிழ்வான்.

தொல்காப்பியம் இதனைப் ‘பாங்கொடு தழால்’[33] எனக் கூறுகின்றது.

தலைமகனை நெறிப்படுத்துபவனாகப் பாங்கன் விளக்குகின்றான். மேலும், தலைமகனின் காதல் உள்ளத்தைத் தெளிவாக அறிந்த வழி அவனுக்குத் துணையாக நிற்பான். தலைமகனுக்குப் பாங்கன் உரைப்பனவாக குறள் அமையவில்லை. ஆனால், பாங்கனுக்குத் தலைமகன் உரைப்பனவாக அமைகின்றன. தலைவன் தலைவியின் மேல் உள்ள அன்பு வேட்கையை வெளிப்படுத்துகின்றான் என்பதனை,

**‘தாழ் வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்**

**தாமரைக் கண்ணான் உலகு’[34]**

தாமரை மலர் போன்ற கண்களையும் திருமால் எழுந்தருளியுள்ள வைகுந்தத்திற் பெறும் இன்பம் ஒருவர் தாம் விரும்பும் பெண்ணினுடைய

மெல்லிய தோளிடத்தே தூங்குவதைக் காட்டிலும் இனியதாக இருக்கும் என்று கூறுவதாக அமைந்துள்ளது.

## தோழியற் புணர்வு

தோழி என்பவள் செவிலித்தாயின் மகள் ஆவாள். அவள் நுண்ணறிவு உடையவள், அன்புணர்வும் கடமையுணர்வும் மிக்கவள். அஞ்சா நெஞ்சமும் அடக்கமும் உடையவள். நாவன்மை மிக்கவள். இலக்கியத்தில் இவள் பங்கு மிக இன்றியமையாததாகக் கருதப்படுகின்றது. காதலால் அலைபோதும் காதலர்களின் ஆற்றாமையைப் போக்கி அவர்களைக் கூட்டுவிக்கின்றாள். களவொழுக்கத்திலேயே காதலர்கள் நீடித்து நில்லாமல், கற்பு வாழ்க்கையினை மேற்கொள்ள ஆற்றுப்படுத்துவளாக விளங்குகின்றாள் என்ற கருத்தைத் தொல்காப்பியம் மூலம் அறிய முடிகிறது. வள்ளுவர் இதனை,

**'ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்**
**காதலார் கண்ணே யுள'[35]**

புறத்தே அயலார் நோக்குவது போல அன்பில்லாது பொது நோக்கால் நோக்குதல் அகத்தே காதல் கொண்டவரிடம் உள்ள ஓர் இயல்பு ஆகும் என்ற கருத்தை இக்குறள் வலியுறுத்துவதாகவும் அமைகின்றது என்பதை இக்குறள் வெளிப்படுத்துகிறது.

## காமத்துப்பாலில் களவில் நிகழும் கூற்றுகள்

திருக்குறளின் காமத்துப்பால் நாடக வழக்கில் அமைந்துள்ளது. அகத்திணைக் காட்சிகளை நாடக வழக்கிலும், உலகியல் வழக்கிலும் கூறுவதைத் தொல்காப்பியர் சுட்டியுள்ளார்.

**'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**
**பாடல் சான்ற புலனெறி வழக்கம்**

*கலியே பரிபாட்டு ஆயிரு பாவனும்*

*உரியதாகும் என்மனார் புலவர்'*[36]

*இந்நூற்பாவில் நாடக வழக்கு என்பதற்கு இளம்பூரணர் நாடக வழக்காவது சுவைபட வருவன எல்லாம் ஓரிடத்து வருவனவாகத் தொகுத்துக் கூறுதல் என்பார்.*

*கூற்றுக்கு உரியவர்களாகத் தலைவன், தலைவி, தோழி ஆகியோர் இடம் பெற்றுள்ளனர்.*

*சிறந்த நாடகத்தில் வரும் மாந்தர் பேசும்போது ஒருவரையறைக்குள் நின்றுதான் பேசுவர். ஒரு கட்டுப்பாட்டினுள் இருந்து பேசுமாறு தான் நாடக ஆசிரியன் அவர்களை இயக்குவான். அதுபோலவே நாடக வழக்காகப் புலவன் படைத்து மொழிந்த ஐந்திணை நெறியில் காணும் மாந்தரும் ஓர் எல்லைக் கோட்டினுள் நின்றுதான் பேசுவர். அவை நாடகக் கூற்றுக்கள் எனப்படும். அகத்திணைக் காட்சிகளை கூறுகின்ற கற்பனை நாடகத்தில் நாடக மாந்தர்களின் கூற்றுக்கள் நிகழ்வது இயல்பாகும்.*

## தலைவன் கூற்று நிகழும் இடங்கள்

*உருவு முதலியன முன் கண்டு அறிவன அன்றி சிறந்தவையின் அவளை ஐயுற்ற இடத்தும் தலைவியை மானுடர் பெண்ணாகத் தெளிந்தபோது அவள் நோக்கினைக் கண்ட இடத்தும் அவள் உறுப்புகள் வருத்தும் இடத்தும் அவள் குறிப்பினை அறிந்த இடத்தும் தோழி தன்னை சேட்படுத்திய வழி தோழியின் குறிப்பினை அறிந்த இடத்தும் இயற்கை புணர்ச்சி இறுதிக் கண்ணும் பாங்கற் கூட்டத்து இறுதிக் கண்ணும் தோழி தன்னிடம் வரைவு கடாவிய போதும் உடன் போக்கினை மறுத்த போதும் மடலேறுதல் குறித்தும் பகற்குறி, இரவுக்குறி இடையூறுதல் இட்டபோதும் பிரிவினை உணர்த்துகின்ற காலத்தும் வினைமுடிந்து வீழும் காலத்தும்*

*உணர்ப்பினவயின் வாரா. ஊடற்கண்ணும் தலைவன் கூற்றுக்கள் நிகழும் இதனைத் தொல்காப்பியர்,*

*‘மெய் தொட்டுப் பயிறல் பொய் பாராட்டல்*
*இடம் பெற்றத் தழாஅல் இடையூறு கிளத்தல்*
*நீடு நினைந்து இரங்கல் கூடுதலுறுதல்*
*சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழித்*
*தீராத் தோற்றம் உளப்படத் தொகைஇப்*
*பேராச் சிறப்பின் இரு நான்கு கிளவியும்*
*பெற்றவழி மகிழ்ச்சியும் பிரிந்த வழிக்கலங்கலும்*
*நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைப்பினும்*
*குற்றங் காட்டிய வாயில் பெட்பினும்*
*பெட்ட வாயில் பெற்றிரவு வலியுறுப்பினும்*
*ஊரும் பேரும் கெடுதியும் பிறவும்*
*நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறித்*
*தோழியைக் குறையுறும் பகுதியும் தோழி*
*குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறலும்*
*தண்டா திருப்பினும் மற்றைய வழியும்*
*சொல்லவட் சார்தலிற் புல்லிய வகையினும்*
*அறிந்தோன் அயர்ப்பினும்வழி மருங்கில்*
*கேடும் பீடும் கூறலும் தோழி*
*நீக் கலினாகிய நிலைமையும் நோக்கி*
*மடல்மா கூறும் இடனுமா ருண்டே’*[37]

*இது தலைவன் மடலேறும் செய்தியினைக் கூறுகின்றது.*

*‘மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற*
*படல் ஒல்லா பேதைக் கெண்கண்’*[38]

தலைவன் மடலேறுதல் செய்தியினை இக்குறள் உணர்த்துகிறது. தலைமகன் இயற்கைப் புணர்ச்சியில் தன் நயப்பு உணர்த்தியதை குறள்,

**‘பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி**

**வால் எயிறு ஊறிய நீர்’[39]**

எனக் காட்டுகிறது.

பாலும், தேனும் கலந்துழி அக்கலவை இன்னது என்று அறியலாகாத இன்சுவை தருவதாகும்.

தலைமகன் தலைவியிடத்து இருந்து தூது வரப்பெறாத நிலையில் நெஞ்சிற்குச் சொல்லியதாக,

**‘உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் கடலைச்**

**செறாஅ அய்வாழிய நெஞ்சு’[40]**

என்ற குறள் அமைந்துள்ளது.

## தலைவி கூற்று

தன்னைப் பிறன் ஒருவன் மணந்து கொள்ள வந்தால் அதனை மாற்றுதற் கண்ணும் தலைவன் புணர்ச்சி இல்லாத போது குறிவழிச் செல்லாது தலைவன் மேல் மிகுந்த அன்பு கொள்ளுதற் கண்ணும் தோழி தலைமகனைக் குற்றம் கூறியபோது அவன் குற்றமிலன் என இயற்பட மொழிகின்ற போதும் தலைவி கூற்று நிகழும்.

தலைவி, தலைமகன் நிலத்தினை புனைந்து உரைப்பவளாகவும் காதல் மிகுதி கூறுபவளாகவும், ஒரு வழித்தனப்பின் கண் தலைமகனைத் தோழி இயற்பழிக்கும் என அஞ்சி அதனைத் தன்னுள் மறைப்பவளாகவும் அறதொடு நிற்கும் பொருட்டு தோழியிடத்தில் நகையாடிப் புலந்தவளாகவும், தலைவன் பிரிந்து செல்லும் பொழுது அதனைக் கண்டு கலக்கம் அடைகிறவளாகவும் உள்ளாள். தன் தோழியிடத்தில் காமநோயை வெளிப்படுத்தி படர்மெலிந்து

இரங்குபவளாகவும் காமத்தால் இன்பமும் துன்பமும் வரும் என்றவழி தோழிக்கு உரைப்பவளாகவும் பிரிவு ஆற்றாமையால் தன் காதலரை இயற்பழியில் அவர் கொடுமையை மறைப்பவளாவும் அழகும், நாணும் அழியாமல் நின் ஆற்றல் வேண்டும் என்று தோழிக்கு உரைப்பவளாவும் கனவு நிலையினை தோழியிடத்தில் உரைப்பவளாகவும் பொழுதொடு புலந்து கூறுபவளாகவும் புணர்ச்சி விதும்பலில் பிரிதற்குறிப்பினன் தலைவனோடு நீ புலவாமைக்குக் காரணம் யாது? என நகையாடிய தோழிக்குத் தலைவி உணர்த்துபவளாகவும் நெஞ்சோடு புலத்தவளாகவும், பரத்தையிடத்து சென்று வந்த தலைவனைப் புலந்து கூறுபவளாகவும் புலவி நுணுக்கம் பெற்றவளாகவும் தலைவி கூறப்பெறுகிறாள். தலைவி தன் நெஞ்சிற்குள்ளே சொல்லுவதாக,

**'நெஞ்சத்தார் காதலராக வெய்து உண்டல்**

**அஞ்சுதும் வேண்டாக்கு அறிந்து'**[41]

என்ற குறள் அமைந்துள்ளது.

என் காதலர் அப்பொழுதும் என் நெஞ்சினுள் இருக்கின்றார். ஆதலால் சூடான பொருளை உட்கொண்டால் அவர் மேனி வெந்துவிடும் எனவும், அதனால் சூடான பொருளை உட்கொள்வதில்லை என்றும் தலைவன் பிரிவை நினைத்து தன்னுள்ளே சொல்லுவதாக இக்குறள் அமைகின்றது.

**'கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்**

**அழுதேம் கரப்பாக்கு அறிந்து'**[42]

என் காதலர் என் கண்ணுள்ளே இருப்பதால் என் கண்ணிற் அஞ்சனம் தீட்டுவதில்லை. அவ்வாறு தீட்டினால் அவர் மறையக் கூடும் என்று எண்ணி அஞ்சனம் தீட்டுவதில்லை. அதோடு மட்டுமில்லாது கண் இமைத்தால் கூட என் காதலர் மறைந்து போவார். அங்ஙனம் மறைந்தால் என் மேல் அன்பு

இல்லாதவர் என ஊர் ஏசும். ஆகையால், கண் இமைகளை மூடுவதில்லை. இந்நிலையில் தலைவி தன் நெஞ்சிற்குள்ளே நினைத்து துன்புறுவாள். இவ்வாறாக இக்குறள் அமைந்துள்ளது. தலைவனிடத்தில் மிகுந்த அன்பு உடையவளாக,

**'வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே**

**வாழுநம் எண்ணும் செருக்கு'[40]**

தலைவன் தலைவி என்ற இருவருக்கும் இடையே ஆழ்ந்த அன்பு நிலவுதல் வேண்டும். பொருள் ஈட்டவும், கல்வி பயிலவும், பிரியும் பிரிவு கூட அன்பின் பாற்பட்டதேயாகும். இத்தகைய பிரிவுகூட தலைவிக்கு வருத்தம் உண்டாவதாக அமைகிறது. உள்ளத்தில் ஒரு விதமான செருக்கும், தருக்கும் தலைவனிடத்தில் காணப்படும். அது அவள் தன் கணவன் மேல் கொண்டிருக்கும் அன்பைப் பொறுத்ததாகும்.

## தோழிக்கூற்று

தோழி என்பவள் தலைவன், தலைவியின் காதல் வாழ்க்கையில் பெரும்பங்கு வகிப்பவள். இவள் தலைவியுடன் நெருங்கிய நெஞ்சுடையவள். தலைவியின் செயல் எல்லாவற்றினையும் நன்கு அறிபவள். தலைவியார் பெரிதும் விரும்பபப்படுபவள் செவிலியின் மகளாகக் கருதப்படுபவள். இவள் பிரிவு ஆற்றாமையால் வாடிய தலைவிக்கு ஆறுதல் கூறுபவளாகவும் இருவரும் திருமணம் செய்துகொள்ள முன் நின்று செயல்படுபவளாகவும், தலைவியின் நிலையைத் தலைவனுக்கு எடுத்து கூறி கற்பு வாழ்க்கைக்கு முனைப்படவும் புணர்ச்சி விதுப்பு அறிந்த தலைமகற்கு உரைப்பவளாகவும் விளக்கப்படுகிறாள்.

தோழி தலைவி உயர்வே தன் உயர்வு என்று கருதுபவளாகவும், தலைவன் தலைவிக்கிடையே புலத்தலும் ஊடலும் காரணமாக மனம் சிறிது

*வேறுபட்டால் தலைவனிடத்தில் பணிவான மொழிகளை அந்நிலையில் தோழி கூறுவதாகவும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.*

*தலைவனைக் காணாமல் ஆற்றாமை மிகுதியான்வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியதாக,*

***'சிறுமை நமக்கொழியச் சேண்சென்றார் உள்ளி***
***நறுமலர் நாணின் கண்'***[44]

*என்ற குறள் அமைகிறது.*

*இவ்வாற்றாமை நம் கண்ணே நிற்பதாம். சேணிடைச் சென்ற காதலரை நீ நினைத்து அழுதலால், நின் கண்கள் ஒளியிழந்து முன் நமக்கு நாணிய நறுமலர்க்கு இன்று தாம் நாணிவிட்டன.*

***'தொடி நோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி***
***அஃகு ஆண்டு அவள்செய்தது'***[45]

*தொடி நோக்கி அவர் பிரியான் ஈண்டிருப்பின் இவை நில்லா எனத் தன் தொடியை நோக்கி மென் தோளும் நோக்கி அதற்கு ஏதுவாக இவை மெலியும், எனத் தன் மென் தோள்களையும் நோக்கி, அடி நோக்கி பின் இவ்விரண்டும் நிகழாமல் நீர் நடந்து காத்தல் வேண்டும் எனத் தன் அடியையும் நோக்கி ஆண்டு அவள் செய்தது. அஃது அங்ஙனம் அவள் செய்த குறிப்பு உடன் போக்காயிருந்தது. இவ்வாறு இக்குறள் குறிப்பிடுகிறது.*

*தலைமகள் புணர்ச்சி விருப்பு அறிந்த தோழி தலைமகற்கு உரைப்பவனாகவும் கூறப்படுகிறாள்.*

***'இனித்தக்க இன்னா செயினும் களிந்தாக்குக்***
***கள்ளற்றே கள்வநின் மார்'***[46]

*இக்குறள் மேற்கூறிய கருத்தை விளக்குகிறது. காதல் என்பது ஒருவர் மற்றொருவரிடம் பேசும் அன்பின் வெளிப்பாடாகும். வள்ளுவர்*

காமத்துப்பாலில் காதல் உணர்வைப் பற்றி எளிமையான முறையில் சுட்டிக் காட்டியுள்ளார். தொல்காப்பியர் திணையில்கூறும் காதல் வாழ்க்கையைப் பற்றிப் புரியும் வகையில் எடுத்துரைத்துள்ளமையை அறிய முடிகின்றது.

பெண் என்பவள் தன் கணவன் மேல் மிகுந்த அன்பு இருந்தாலும் அவன் உயிரை விட, தன் கற்பை உயர்வாகக் கருதும் நிலையை அறிய முடிகின்றது. தலைவன், தலைவி சந்திப்பிற்குத் தோழியின் பங்கு முதன்மையானதாகும். தலைவன் தலைவியின் மேல் உள்ள வேட்கை மிகுதியால் அவளுடைய ஐம்புலன்களை உயர்வாகக் கருதும் நிலையை உணரமுடிகிறது.

## காமத்துப்பாலா ? இன்பத்துப்பாலா ?

அறம், பொருள், இன்பம் எனக்கூறுதலே மரபாதலின் குறளின் மூன்றாம் பாலை இன்பத்துப்பால் என்று கூறுவதே பொருந்தும் எனக் கருதுவர் சிலர். தம் கருத்திற்கேற்பக் காமத்துப்பாலை இன்பத்துப்பால் என மாற்றியுள்ளனர். இன்பம் எனப் பொதுவாகக் கூறும்போது காமம் இன்பத்தைக் குறிக்காமல் துன்பத்துக்கு மாறாயது என்ற பொருளையே தரும்

**‘அறத்தான் வருவதே இன்பம்’**[47]

**‘மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம்’**[48]

**‘ஒருத்தார்க்கு ஒரு நாளை இன்பம்’**[49]

**‘ஈத்துவக்கும் இன்பம்’**[50]

**‘இழிவறிந்து உண்பான் கண் இன்பம்’**[51]

*முதலிய இடங்களில் இன்பம் என்பது காம இன்பத்தைக் குறிக்காமல் வேறான குறிப்பிட்ட ஓர் இன்பத்தை உணர்த்துதலைக் காணலாம். காமமும் இன்பமும் குறளில்*

**'ஊடுதல் காமத்திற்கு இன்பம்'**[52]

*என வெவ்வேறு சொல்லாக ஆட்சி பெறுகின்றன.*

*காமம் காரணமாகவும், இன்பம் காரியமாகவும் பொருள் கொள்வதாக அமைகிறது. காமத்துப்பாலை இன்பத்துப்பால் என மாற்றியதற்குக் காரணமாகக் காமம் வடசொல் என்றும் அது இழிபொருளில் வழங்குகிறது என்றும் உரைப்பர். காமம் என்னும் தமிழ்ச்சொல் நீண்டு காமம் ஆயிற்று. 'கமம்' என்ற சொல்லுக்கு நிறை, போதல், வழி, விளைநிலம், வெட்டாலை, வயல், உழவும் தொழில் என்று அகராதி பொருள் கூறுகிறது.*

*காமத்துப் பாலிலேயே 'காமம்' என்ற சொல் 38 இடங்களில் ஆட்சி பெறுகின்றது. 'பொழிதிடை தெரியின் பொய்யே காமம்'*[53] *எனக் குறுந்தொகையிலும் 'காமக் கூட்டம் காணுங்காலை'*[54] *எனத் தொல்காப்பியத்திலும் காமச்சொல் பயின்று வருகிறது. காமச் சொல் குறட் காலத்தே உயர்ந்த பொருளில் வழங்கியது. அதனால்தான்,*

**'மலரினும் மெல்லியது காமம்'**[55]

*எனக் குறள் இயம்புகின்றது. காம இன்பத்தை மட்டும் புலப்படுத்தாது. எல்லா இன்பத்தையும் புலப்படுத்துவதாகும். காமம் தமிழ்ச்சொல்லே. இன்பத்துப்பால் எனப் பெயர் மாற்றுவதினும் காமத்துப்பால் எனக் கூறுவதே பொருத்தமாகும்.*

**காதலும், காமமும்**

தொல்காப்பியத்தில் உயர்பொருளில் வழங்கிய ‘காமம்’ என்னும் சொல் பிற்காலத்தே இழிபொருள் உணர்த்தலாயிற்று. தொல்காப்பியம் காமக் கூட்டம் என்னும் சொல்லால் தலைவனையும் குறித்தது. அகநானூறும்

**‘மெய்யில் தீரா மேவருகாமம்’[56]**

என்னும் அடியில் வரும் காமம் என்னும் சொல்லால் மெய்யுறு புணர்ச்சியைச் சுட்டியது. ‘விருந்தே காமம் பெருந்தோளோயே’[57] என்னும் குறுந்தொகை அடியில் வரும் காமம் சொல்லும் உயர் பொருளினதே. அதனால் தான் குறளும் மூன்றாம் பாலுக்குக் காமத்துப்பால் எனப் பெயரிட்டது.

‘காதல் என்னும் சொல்’ விருப்பம் என்னும் பொருளில் வழங்கியது. அது அழிபொருட்பேறு எய்தவில்லை என்று குறள் கூறுகிறது. ஆனால் காமம் என்பது தற்காலத்தில் இழிபொருளுக்கு வந்து விட்டது. இதனை காமம் மிகு பெருங்காமத்தினன் என்ற ஆன்றோரின் வாக்கின் மூலம் அறியலாம்.

காதல் உள்ளத்தைப் பொறுத்து உயர்ந்தது. காமம் உடலைப் பொறுத்தது, இழிந்தது, என்னும் நிலையை உணர்த்துகிறது. வள்ளுவர் காலத்தில் காமம் உயர் பொருளினது என்பதை அறியமுடிகிறது.

காதல் உள்ளப் புணர்ச்சி குறித்தது. காமம் உடற் புணர்ச்சியைக் குறித்தது. உள்ளப் புணர்ச்சையையும் உடற்புணர்ச்சியையும் சேர்த்துக் ‘காதற் காமம்’ என்ற சொல்லைப் படைத்தனர்.

**‘காதற்காமம் காமத்துச் சிறந்தது**

**விருப்போ ரொத்த மெய்யுறுபுணர்ச்சி’[58]**

*என்னும் நல்லந்துவனாரின் பரிபாடல் அடிகள் அச்சொல்லாட்சியையும் அதன் பொருளையும் விளக்கும். இதற்கு காதல் நிரல் நிறையாகவும், காமம் விருப்போர் ஒத்தல் என்றும், மெய்யுறு புணர்ச்சி என்றும் இயைத்துப் பொருளாக அமைந்துள்ளது.*

**புலவி, ஊடல், துனி**

*மருதத் திணையின் உரிப்பொருள் குறித்துப் புலவி, புலவி நுணுக்கம், ஊடலுவகை என்று மூவதிகாரங்கள் காமத்துப்பாலில் உள்ளன. ஊடுதல் காமத்திற்கின்பம் என்னும் குறள் காமச்சிறப்பினை நன்குணர்த்தும் புலவி, ஊடல், துனி மூன்றும் ஒரு பொருளை போலத் தோன்றினும் அவை தம்முள் வேறுபாடு உண்டு. துனி இன்பத்திற்கு மாறாக துன்பந்தரும் முதிர்ந்த காதற் பூசல், புலவி காற்பூதலின் தொடக்கநிலை, ஊடல் அதற்கு அடுத்த நிலை, நிலம் புலந்து இல்லாளின் ஊடிவரும்' என்னும் குறளால் புலவியின் முதிர்ச்சியே ஊடல் என்று உய்த்துணரலாம்.*

*காமத்திற்குத் துனி வேண்டா, புலவியும் ஊடலும் வேண்டும். 'துனி நனி கற்றிடின் காமம் கெடூஉம்'[59] என்னும் பரிபாடல் அடியால் அறியலாம்.*

*'துனியும் புலவியும்'[60] என்னும் குறள் காமத்திற்குத் துனியில் லாயின் களியற்று. புலவி இல்லாயின் கருக்காய் (பிஞ்சு) அற்று எனக் கூறும். ஆகவே, காமத்திற்குத் துனியின்மையும், புலவியும் வேண்டும் என்பது அக்குறட் கருத்தாகும்.*

*'புலவி, ஊடல் என்னும் சொற்கள் தமக்குரிய சிறப்புப் பொருளை இழந்து காதற்பூசல் என்ற பொதுப் பொருளில் ஆட்சிப் பெறுகின்றன. புலவி அதிகாரத்தில் 'ஊடல்' என்ற சொல்லும் 'ஊடல் வகை' அதிகாரத்துப் புலத்தல்' என்ற சொல்லும் ஆளப் பெறுதல் அதற்குச் சான்றாகும்.*

*சங்க அகத்திணைப் பாக்கள் போல ஊடலைப் பாடப் பரத்தையற் பிரிவைப் பயன்படுத்தாமல் வள்ளுவர் கற்பனை மிளிர இலக்கிய நயம் செறியப்பாடியிருத்தல் அவர்தம் நுண்மான் நுழைபுலத்துக்குச் சான்றாக மிளிர்கிறது. தலைவியின் மதி நுட்பத்தையும், சொல்லாண்மையையும் காட்டுவனவாக ஊடல் குறித்த குறள்கள் அமைந்துள்ளன. ஊடலுக்கு உண்மைக் காரணங்களைக் காட்டாமல் தலைவியின் புலமை நயத்தைப் பற்றிக் கூறப்பட்டுள்ளன.*

## காமத்துப்பாலில் அறம்

*காமத்தைப் பற்றிக் கூறும் பகுதியாயினும், காமத்துப்பாலில் சில அறச் செய்திகள் காணப் பெறுகின்றன. தலைவன் இல்லாத ஊரில் வாழ்தல் துன்பந்தரும்', காமத்தை மறைக்க மறைக்க அது பெருகிக் கொண்டே போகும் என்ற செய்தியை உணர்த்துகிறது பின்வரும் திருக்குறள்.*

*உணவுக்கு உப்புப்போல் புலவி காதலர்களுக்குள் அளவாக அமைதல் வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது.*

*திருக்குறளில் முதற்பகுதிகளில் கூறிய அறங்களையும் சிறப்புக் கருதிக் காமத்துப்பாலில் எடுத்துரைப்பதுண்டு.*

***'பாத்தூண் மருவுதல்'***[61]

***பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்'***[62]

*என்னும் குறள்களால் பலருக்கும் பகுத்துக் கொடுத்தலை வற்புறுத்துவர் காமத்துப்பாலில்', 'தம்மில் இருந்து'*[63] *என்னும் குறளால் பகுத்துண்டலால் வரும் ஈத்துவக்கும் இன்பத்தைச் சிறப்பிப்பர். 'இழிவறிந்து உண்டான கள் இன்பம்போல் நிற்கும்'*[64] *என்னும் குறள் அளவறிந்து உண்பதை வற்புறுத்தும். உணவு செரிப்பது உடலுக்கு நல்லது. அதுபோல காமவேட்கையில்*

கூடுவதை விட ஊடுவது நல்லது என்ற கருத்தை உணர்த்துகிறது இத்திருக்குறள்.

> **‘உணலினும் உண்டது அறலினது காமம்**
> **புணர்தலின் ஊடல் இனிது’[65]**

என்னும் குறளாலும் வலியுறுத்தும் முன்கூறாது புது அறநெறியையும் காமத்துப் பால் அறிவிப்பதுண்டு.

> **‘அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்**
> **செறிதோறும் சேயிழை மாட்டு’[66]**

என்னும் குறள் அறிய அறியாமை தோன்றுமாறு போலத் தலைவியோடு தொடங்கும், இல்லறம் தலைவனுக்குப் பலப் பல வாழ்வியல் கூறுகளை காட்டும் என்னும் புதுச் செய்தியைக் குறிப்பில் புலப்படுத்துகின்றது. ‘இல்லறமும், துறவறமும் வேறுபட்டன அல்ல, இல்லற முதிர்ச்சியே துறவு நெறியாகும். இளமை முதிர்ச்சி முதுமையாதல் போலவே இல்லறம் படிப்படியாக வளர்ந்து துறவு என்னும் முதிர்நிலை எய்தும்’ எனத் தமிழ்க்காதல் விளக்கியுரைக்கும் மனைவி மக்களைப் பிரிந்து காடு சென்று தவமியற்றுமாறு பண்டைப் பனுவல்கள் நுவலவில்லை. மனைவி மக்களுடன் வாழ்ந்து பற்று நீங்கிச் சீரிய செயல்கள் புரிவதே துறவற நெறியாகும்.

> **‘காமஞ் சான்ற கடைக் கோட்காலை**
> **ஏமஞ்சான்ற மக்களொடு துவன்றி**
> **அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்**
> **சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே’[67]**

என்பது தொல்காப்பியம் நூற்பா. சமண இலக்கியங்கள் நிலையாமையைக் காட்டித் துறவை வலியுறுத்தச் சங்க இலக்கியங்களோ நிலையாமையைக் காட்டி இல்லற இன்பத்தை வலியுறுத்தும். இளமை கழிந்து விட்டால்

அதனைத் திரும்ப பெறுதல் இயலாது. செல்வத்தை நாடோறும் ஈட்டலாம். ‘இளமையும் காலமும் ஒருங்குப் பெற்றோர் வளமை விழைதக்கதுண்டோ’[68] எனக் கலித்தொகை வினவும். இங்ஙனம் இளமை நிலையாமைக் காட்டி இன்பம் பெறச் செயதலைச் சங்க அகத்திணைப் பாக்கள் பலவற்றில் காணலாம். வள்ளுவரும் இன்பத்தைத்தந்து அதிகாரம் அமைத்துக் காமத்துப்பால் பாடியதற்கு அவ்வின்பச் சிறப்பே காரணம்.

காதல் வேட்கை உடற்பசி போல, இயற்கையாக எழும் உயிர்ப்பசியாகும். அஃது அறத்திற்குப் புறம்பானதன்று, வள்ளுவர் அதனை விலக்கக் கருதின் கள், சூது ஆகியவற்றுக்கு அதிகாரம் வகுத்திருப்பது போலக் காம விலக்கிற்கும் அதிகாரம் வகுத்திருப்பார். அளவான உணவு இன்பத்திற்குக் காரணமாய் உடலின்பம் பயத்தல் போல அளவான காதலும் இன்பத்திற்குக் காரணமாய் உடல் நலம் பயக்கும். அளாவுவதே கலவி மனநலம் தருவதோடு மண்ணுயிர்க்கு ஆக்கமும் தரும்.

**‘உறுதோறும் உயிர் தளிர்ப்பத் தீண்டல்’[69]**

எனக் குறள் கூறுகிறது. ‘செயற்கை முறையால் காமத்தை அடக்கினால் தீங்கு பல நேரும். மனக்கவலை அச்சம், மன இறுக்கம் முதலிய கேடு வரும். நரம்பு மண்டலம் கெட்டு, நரம்புக் கோளாறு முதலிய நோய்கள் உண்டாகும்’ என்பார் உளநூலறிஞர் பிராய்டு. எனவே மலரினம் மெல்லியதாய காமத்தைச் செவியறிந்து துய்க்க வேண்டும் காமம். ஐம்புல இன்பங்களையும் ஒரு சேர நல்குவது. அது மேலும் உயிர் தளிர்க்கச் செய்யும் இயல்பினது. காம இன்பத்திற்குக் காரணமாகிய புலவியின்பத்தைப் புத்தேள் நாட்டினும் பெறமுடியாது. ஒத்த இயல்பு வாய்த்த காதலர் தம் புணர்ச்சி இன்பம் செங்கண்மால் உலக இன்பத்திலும் இனிது. புதுப்புது அனுபவங்களைக் காட்டி அறிவு வளரச் செய்வது. அன்பு அரும்பி, ஆர்வம், நட்பு என வளர்ந்து அருளாக மலர்வது ஈத்துவக்கும் இன்பம் எய்த அடிப்படையாக அமைவது.

தன்னலம் கெடுத்துப்பிறர் நலம் ஓம்ப வழிவகுப்பது. மன்பதை அழிவுபடாமல் தொடர்ந்து வரக் காரணமாக இருப்பது. இங்ஙனம் பல்வகைச் சிறப்பிற்கு ஏதுவாக இருத்தலின் வள்ளுவர் காமத்துப்பால் என ஒரு தனிப்பாலைப் படைத்தார். காமத்துப்பாலை கற்பதற்கு இல்லற இயலையும் சேர்த்துத் தொடர்புறக் கற்பின் இல்லற மாண்பின் இன்பச் சிறப்பை நன்கறியலாம். இவற்றுள் பரத்தையிற் பிரிவைக் குறள் கூறவில்லை. களவுகற்பு எனக் கைகோள் இரண்டெனப் பகுத்து அவற்றைத் தொல்காப்பியம் விளக்குகிறது. களவில் கூற்று நிகழ்த்வதற்குரியோர் யாவர் என்பதை அது தொகுத்துரைக்கிறது. இவை பற்றிய செய்திகள் குறளில் இல்லை. ஆனால், பரிமேலழகரோ இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு முதலிய களவு வகைகளைக் குறளுக்கு இயைத்து உரை கண்டுள்ளார். அவர் பரத்தையிற்பிரிவும் குறளில் உண்டெனக் கொண்டு சில குறளுக்கு விளக்கம் தந்துள்ளார். அகத்திணைச் செய்திகளை நிரல்படக் கோவையாகக் கூறாமல் காதலுணர்வு, பண்பியல் முதலியவற்றைப் புலப்படுத்தும் வகையில் குறட்போக்கு அமைந்துள்ளது. அகத்திணை பாடக் கலியும், பரிபாடலும் ஏற்புடையன எனத் தொல்காப்பியம் கூறுகிறது. ஆனால், காமத்துப்பால் குறள் வெண்பாவினால் யாக்கப்பெற்று, கூற்று வகைகளுள் தலைவன், தலைவி, தோழி முதலிய சிலரின் கூற்றுக்களே அமைந்துள்ளன.

காமத்துப்பாலில் நிலப்புனைவு காலப் புனைவுகளும் காண்டல் அரிது. ‘பொழுது கண்டிரங்கல்’ என்னும் அதிகாரத்தில் மட்டும் மாலைப் பொழுதின் புனைவு சிறிது காணப்பெறும். தொல்காப்பியம் உணர்த்தும் எல்லாப் பிரிவுகளும் குறளில் குறிப்பிடப் பெறவில்லை. காளிங்கர்,

**‘உரன் நசைஇ உள்ளம் துணையகச்**

**வரல்நசைஇ அன்னம்உளேன் சென்றார்’[70]**

என்னும் குறளை ஓதற்பிரிவு சுட்டுவதாகக் கொள்வர். உரன் என்பதற்கு அவர் அறிவு எனப் பொருள் கொண்டு, கல்வி வேட்கையில் ஊக்கம் துணையாகப் பிரிந்த தலைவர் என அக்குறட்குப் பொருள் அமைந்துள்ளார்.

காமத்துப்பால் என்பதற்குப் பரிமேலழகர் விளக்கம் தரும்போது,

**'பொருளைத் துணைக் காரணமாக உடைத்தாய**
**இம்மையே பயத்தால் இன்பம் கூறுவான்**
**எடுத்துக் கொண்டார், ஈண்டு இன்பம் என்றது**
**ஒரு காலத்து ஒரு பொருளான் ஐம்புலனும் நுகர்தற்**
**சிறப்புடைதாய காம இன்பத்தினை'[71]**

என விளக்கம் கூறியுள்ளார்.

தொல்காப்பியர்,

**'இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**
**அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்**
**காமக் கூட்டங் காணுங் காலை**
**மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்**
**துறையமை நல்யாழத் துணைமையோர் இயல்பே'[72]**

என்ற நூற்பாவில் தலைவன் தலைவியர் உறவைக் காமக் கூட்டம் எனக் குறிப்பிட்டுள்ளார்.

**'காமம் காமம் என்ப காமம்**
**அணங்கு பினியும் அன்றே, நுணங்கிக்**
**கடுத்தலும் தணிதலும் இன்றே, யானை**
**குளகுமென் றான்மதம் போலப்**
**பாணியும் உடைத்து காணுநர்ப் பெறினே'[73]**

என்ற குறுந்தொகைப் பாடல் காமம் என்பதற்கு உரியரைக் காணும் பொழுது ஏற்படும் இன்பம் என்ற பொருளைத் தருகிறது.

காலப் போக்கில் உயர்வான உயர்ச்சியைக் சொல்லப் பயன்பட்ட காமம் என்ற சொல் இழிவான விலங்குணர்ச்சியைக் குறிக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டது. வாழ்வியல் உண்மைகளை இலைமறை காய்மறையாகப் பாடுகின்ற சங்க இலக்கிய மரபில் இருந்து மாறுபட்டு அறம் பாடுகின்ற மரபில் தோன்றியது திருக்குறள் ஆயினும். தமிழர் போற்றிவந்த இல்லறத்தை நல்லறமாக அது போற்றியது.

இல்லற இன்பத்தினை இல்வாழ்க்கையின் மிக நுட்பமான மன உணர்வுகளைப் புலப்படுத்த எழுந்ததே வள்ளுவரின் காமத்துப்பால். அதில் கூறப்பெறுகின்ற இன்பம் பொதுவான இன்பத்தினின்றும் சிறப்புப் பெறுவது அதனை விளக்கும் வகையில்,

**‘ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கு இன்பம்**
**கூடி முயங்கப் பெறின்’**[74]

என்ற குறள் அமைந்துள்ளது. எனவே இன்பம் என்பதை வள்ளுவர் காம இன்பமாகக் கொண்டு அதனைக் காமத்துப்பாலாக ஆக்கித் தந்துள்ளார் என்பது பெறப்படுகின்றது.

**காமத்துப்பால் அமைப்பு**

காமத்துப்பால் களவு, கற்பு எனக் கூறப்பெறும் இரு கைக்கோள்களைக் கொண்டது. முதலில் அமைந்துள்ள களவியலில் தகை அணங்குறுத்தல் முதலாக ஏழு அதிகாரங்கள் இடம் பெற்றுள்ளன. தலைமகளைக் கண்ணுற்ற தலைமகன் அவள் அழகில் தன்னை வருத்துவதாகச் சொல்வதை தகை அணங்குறுத்தல் காட்டுகிறது.

*அவள் அழகால் வருத்தமுற்ற தலைமகன் தலைமகள் குறிப்பினை அறிதலும், தலைமகளோடு ஒன்றித் தோன்றும் தோழி குறிப்பினை அறிதலும் குறிப்பிடுகின்ற நிகழ்வைக் குறிக்கும். குறிப்பறிதல், தகையணங்குறுத்தலின் பின் இடம் பெற்றுள்ளது.*

*குறிப்பறிந்த தலைவன் தலைவியைக் கூடி மகிழ்ந்து கூறுவதும், அவளைப் பாராட்டுவதும் அடுத்தடுத்து அமைந்துள்ளன.*

*புணர்ச்சி மகிழ்ந்து நலம் கூறிய தலைமகள் தன் காதல் நிலையையும் தலைவி தன் காதல் நிலையையும் கூறுவது அடுத்து இடம் பெற்றுள்ளது.*

*காதல் மிகுதியின் பின் தலைமகள் ஆற்றாத நிலையில் நாணுத்துறவும், ஊர் அலரும் அவ்அலரை அறிவுறுத்தலுமாக நாணுத்துறவு உரைத்தல், அலர் அறிவுறுத்தல் ஆகியவை இடம் பெற்றுள்ளன.*

*இரண்டாவது கைகோள் இடம் பெறுகின்ற கற்பியல் 18 அதிகாரங்களைக் கொண்டுள்ளது. அதில் அறம், பொருள், இன்பங்களின் பொருட்டுத் தலைவன், பிரிகின்ற காலத்துத் தலைவியிடத்து நிகழ்கின்ற நிகழ்வுகள் முதற்கண் இடம் பெற்றுள்ளன.*

*பிரிவு ஆற்றாமை, படர் மெலிந்து இரங்கல், கண் விதுப்பு அழிதல், பசப்புறு பருவரல், தனிப்படல் மிகுதி, நினைத்தவர் புலம்பல், கனவு நிலை உரைத்தல், பொழுதுகண்டு இரங்கல், உறுப்புநலன் அழிதல், நெஞ்சோடு கிளத்தல், நிறையழிதல், அவர் வயின் விதும்பல், குறிப்பு அறிவுறுத்தல், புணர்ச்சி விதும்பல், நெஞ்சொடு புலத்தல், புலவி, புலவி நுணுக்கம், ஊடல் வகை எனக் கற்பியலின் அதிகாரங்கள் முறைப்படுத்தப் பெற்றுள்ளன.*

*தோழியானவள் தலைவியை இரவுக் குறிக்கண் சந்தித்த தலைவனைக் கண்டு உரைப்பதாகக் குறள் அமைந்துள்ளது.*

**'மதியும் மடந்தை முகனும் அறியா**

**பதியுன் கலங்கிய மீன்'**[75]

*விண்மீன்கள் தங்களையும் இவளுடைய முகத்தையும் வேறுபாடுகண்டு அறியமுடியாமல் தம் நிலையில் நிற்காமல் கலங்கித் திரிகின்றன. இவ்வாறு தோழியற் கூட்டத்தில் தோழி உரைப்பதாக அமைத்துக் காட்டப்படுகிறது.*

*தலைமகன் தோழியின் மாட்டுத் தன் குறையைத் தலைவியிடத்துக் கூறுதல் போன்ற இடங்களில் தோழி செயல்பயன் உள்ளதாக அமைகின்றது. வள்ளுவர்,*

**'வேட்டப் பொழுதின் அவையவை போதுமே**

**தோட்டார் கதுப்பினாள் தோள்'**[76]

*மலரணிந்த கூந்தலை உடைய இவள் தோள்கள் நாம் எவ்வெவற்றை விரும்புகின்றோமோ அவையெல்லாம் இன்பத்தினைத் தருவனவாக அமையும் எனக் கூறுகிறார்.*

*இவ்வாறாகத் தோழியற் கூட்டத்தில் தோழியானவள் எடுத்துக் காட்டப் படுகிறாள். கற்பியல் தலைவன் தலைவியர் உறவுகளைக் காட்டுகிறது. இது பெரும்பாலும் பிரிவின்கண் நிகழும் நிகழ்ச்சியாகக் கூறப்படுகின்றது.*

*தலைவனைப் பிரிந்த தலைவியானவன் தலைவனை நினைந்து வருத்தம் கொள்ளுதல், தலைவனின் பிரிவைத் தாங்காமல் தோழியிடம் புலம்புதல் ஆகியன இதில் எடுத்துக் கூறப்பெற்றுள்ளன.*

*கற்பியலில் 18 அதிகாரங்களைக் கூறுகிறார் திருவள்ளுவர். இதில் முதல் அதிகாரத்திலேயே பிரிவு பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன.*

*தலைவனைப் பிரிந்து தலைவியானவள் எவ்வாறெல்லாம் துன்பப்படுகிறாள் என்பதும் தோழியிடத்தில் கூறிப்புலம்பும் காட்சியும் இடம் பெறுகின்றது.*

*வள்ளுவர் கற்பியலில் கூறியதாவது, பிரிவு ஆற்றாமை, படர் மெலிந்து இரங்கல், கண் விதுப்பு அழிதல், பசப்புறு பருவரல், தனிப்படர் மிகுதி, நினைந்தவர் புலம்பல், கனவுநிலை உரைத்தல், பொழுது கண்டு இரங்கல், உறுப்பு நலன் அழிதல், நெஞ்சொடு கிளத்தல், நிறை அழிதல், அவர் வயின் விதும்பல், குறிப்பு அறிவுறுத்தல், புணர்ச்சி விதும்பல், நெஞ்சொடு புலத்தல், புலவி, புலவி நுணுக்கம், ஊடல் வகை முதலியன.*

*கற்வில் தலைவன் தலைவி பிரிவு பற்றியே பல அதிகாரங்களில் வள்ளுவர் கூறியுள்ளார். மேலும், தலைவியானவள் பெரிதும் தலைவனை எண்ணித் துன்பப்படுகின்ற செய்தியினைத் தோழியானவள் தலைவனிடத்தில் கூறுகிறாள். தலைவி தன் ஆற்றாமையால் படும் துன்பத்தினைத் தன் தோழியிடத்தில் கூறுவதாகக் குறள் அமைந்துள்ளது.*

**'தொடியோடு தோள்நெகிழ நோவல் அவரைக்**
**கொடியா எனக்கூறல் நொந்து'**[77]

*இக்குறளில் இயற்பழித்த தோழிக்குத் தலைவி உரைத்ததாகத் திருவள்ளுவர் கூறியுள்ளார்.*

*கற்பியலின் பிரிவினை அடுத்து ஊடல், உணர்வுகள் இடம் பெற்றுள்ளன. அப்பகுதி உளவியல் நுணுக்கம் நிறைந்த பகுதியாக அமைந்துள்ளது.*

***'துனியும் புலவியும் இல்லாயின் காமம்***
***கனியும் கருக்காயும் அற்று'***[78]

என வள்ளுவர் துனி புலவி ஆகியவற்றைத் தலைவி தலைவியற்கிடைய இருக்கின்ற ஊடல் நிகழ்வுகளைக் கூறியுள்ளார். வள்ளுவர் காமத்துப் பாலில் தலைவன் வேறு மகளிரைக் கலந்தானாகக் கருதித் தலைவி ஊடியதாகக் கூறும் குறள்கள் யாவும் அவர் மாட்டு அச்செயல் நிகழ்ந்ததோ என்ற ஐயத்தால் நிகழ்ந்ததோ என்ற அச்சத்தால் தலைவி சொல்லியனவே அன்றிப் பிற நூலகள் போல் உண்மையாதல் நிகழ்ந்ததாகக் கண்டு தலைவனை இழித்துக் கூறும் கருத்துடையன ஆகாமை உய்த்துணரத் தக்கது.

வள்ளுவர் அனைவரும் ஏற்கும் வண்ணம் காமத்துப்பாலை கூறியுள்ளமையால் அவர் பரத்தையற் பிரிவு பற்றியும் அதன் காரணமாக நிகழும் ஊடல் பற்றியும் குறிப்பிடவில்லை. ஆயினும் ஊடல் இல்லையாயின் இல்லறம் சுவைக்காது என்பதை,

**‘இல்லைதவற வர்க்கு ஆயினும் ஊடுதல்**
**வல்லது அவர் அளிக்குமாறு’**[79]

என வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். எனவே, ஊடல் தலைமகளுக்கும், தலைமகனுக்கும் மகிழ்ச்சி தருவதாக அமைகின்றது. துனி, புலவி என்ற சொல்லோடு ஊடல் என்ற சொல்லும் ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்பு உடையதாகும்.

‘புலவி அண்மை காலத்தது ஊடல் அதனின்றும் மிக்கது’ என இளம்பூரணர் குறிப்பிட்டுள்ளார். ‘உணர்தல் என்பது ஊடலை அளவறிந்து நீக்குதல்’ என்று பரிமேலழகர் கூறியுள்ளர்.

கற்பில் இவை சிறந்த பகுதிகளாக அமைகின்றன. புலவியும் ஊடலும் பெரும்பாலும் தலைவிக்கு உரியனவாகவே அமைந்துள்ளன. ஆயினும் தலைவனும் சில சமயங்களில் ஊடல் நிகழ்த்துதல் உண்டு. இப்புலவி காமச்

*சிறப்பைத் தரவல்லது என்றாலும் அது சிறிது கூடினாலோ கசப்பைத் தரும் என்கிறார்.*

*புலவியின் இறுதியில் தலைவி தலைவனைக் கூடுதல் வேண்டும் என்பது பெறப்படுகிறது. தொல்காப்பியர்,*

***'தாய்ப்போல் களர் கழித்துக் கோடல்***

***ஆய்மனைக் கிளத்திக்கும் உரித்தென மொழிப***

***கவவொடு மயங்கிய காலையன'[80]***

*எனக் குறிப்பிட்டுள்ளார்.*

## காமத்துப்பாலில் இளிவரல் சுவை

*'ஓர் பாட்டினைப் படிக்கும்போது கண்ணீர் அரும்பல், மெய்ம்மயிர் சிலிர்த்தல் போன்ற வெளிப்பாடு தோன்றுமாறு அதனைப் படைப்பது'[74] என்று விளக்கம் தருகின்றார் பேராசிரியர். அடுத்து பொருளை நேரில் கண்டது போல் பாடும் தன்மையை மெய்ப்பாடு என்று விளக்குகிறார்.*

*இக்கருத்துக்கள் செய்யுளை இயற்றும்போது மெய்ப்பாட்டுறுப்பு அமையச் செய்யுள் இயற்ற வேண்டும் என்ற இன்றியமையாமையை புலப்படுத்துகிறது.*

***'கண்ணினும் செவியினும் திண்ணிதின்உணரும்***

***உணர்வுடை, மாந்தருக்கு அல்லது தெரியின்***

***தன்மைப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே'[81]***

*இந்நூற்பா இலக்கியத்தை அனுபவிப்போரைப் பொறுத்து மெய்ப்பாடு அமையும் என்கிறது. இது மெய்ப்பாட்டியலில் இறுதி நூற்பாவாகும். 'இம்மெய்ப்பாட்டெல்லாம் ஆயுங்கால் கண்ணாலுஞ் செவியானும் விளங்க உணரும் அறிவுரை மாந்தர்கள் என்று கருதுதல் அரிது' என்று பொருள் தருகிறார் இளம்பூரணர்.*

*இளிவரல் மெய்ப்பாடு நான்கு ஆகும். அவை மூப்பு, பிணி, வருத்தம், மெய்மை ஆகியவை. இளிவரல் உயிர்வாழ ஒல்லாமல் மானம்குன்ற வரும் பழி நிலையைக் குறிப்பது ஆகும். இதில் மூப்பு காமத்துப்பாலில் எங்கும் காணப்பெறவில்லை. சங்க இலக்கியங்களிலும் பிற நூல்களிலும் காணப்படுகிறது. மூப்பு என்பது தான் மாட்டுத் தோன்றினும், பிறர் மாட்டுத் தோன்றினும் நிகழும்.*

*பிணி என்பது இளிவரல் மெய்ப்பாட்டில் இண்டாவதாக வருவது. காமத்துப்பாலில் ஏற்பட்டிருக்கும் நோய் தலைவன் வரவால் தலைவிக்குப் பிரிவாற்றாமையின் காரணமாக ஏற்பட்டிருக்கும் காம நோய் ஆகும். இதனைக் களவியலில் மூன்றாவதாக அதிகாரமான 'புணர்ச்சி மகிழ்தல்' என்ற அதிகாரம் தொடங்கிச் சில அதிகாரங்களில் சில குறட்பாக்கள் மூலம் காட்டுகிறார்.*

***'பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை***
***தன் நோய்க்கு தானே மருந்து'[82]***

*இக்குறட்பாவில் கருத்து உவமையின்கண் பிறந்த 'பிணி' என்றே எண்ணத் தோன்றுகிறது.*

*பெண்கள் நிறை பண்பு உடையவர்கள். அன்பு காட்டத் தக்கவர்கள். ஆகவே, அவர்களிடம் இரக்கம் காட்ட வேண்டும் என்று கருதாமல் காதல் நோயானது அவர்கள் மறைத்து வைத்தாலும் அறநிலையையும் மீறி, பலர் அறிய மன்றத்தில் வெளிப்படவே செய்கின்றது என்று தலைவி கூறுவதாக அமைந்துள்ளன பின்வரும் குறட்பாக்கள்,*

***'கடல்அன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப்***
***பெண்ணிற் பெருந்தக்கது இல'[83]***

**‘நிறைஅரியர் மன்அரியர் என்னாது காமம்**

**மறை இறந்து மன்றுபடும்’[84]**

‘பிரிவு ஆற்றாமை’ என்ற அதிகாரத்தில் ‘காமநோய்’ என்னும் ‘அல்லல் நோய்’ என்றும் குறிப்பிடுகின்றார். ‘நெருப்பானது அதனைத் தொட்டால்தான் சுடும். அதனைத் தொடாமல் நீங்கி விட்டால் அது சுடாது’ என்றும் ஆனால், ‘காதல்’ நோயோ என்றால் காதலரை விட்டு நீங்கினாலே சுடுகின்றது’ என்றும், நெருப்பைக் காட்டிலும் காதல் நோய் அவ்வளவு கொடுமையானது என்றும் தலைவி கூறுவதாக அமைந்துள்ளது.

காதலர் பிரியும்போது அதற்கு உடன்படுதலாகிய செயலைச் செய்து, பிரியும்போது ஆற்றாமைத் துன்பத்தையும் பொறுத்துக் கொண்டிருந்து, பின்னரும் உயிர் வாழக்கூடிய மகளிர் பலர் உலகத்தில் இருக்கக் கூடும். ஆனால், நான் உயிர் வாழ்வதற்கில்லை’ என்று தலைவி கூறவதாக அமைந்துள்ளன கீழ்க்காணும் குறள்கள்.

**‘தொடின்கடின் அல்லது காமநோய் போல**

**வடின்கடல் ஆற்றதுமோ தீ’[85]**

**‘அரிது ஆற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவுஆற்றிப்**

**பின்இருந்து வாழ்வார் பலர்’[86]**

தலைவி தலைவன் பிரிவால் தனக்கு ஏற்பட்டுள்ள ‘காதல் நோயை மறைக்கப் பலவாறாக முயன்றாலும் மறைக்க முடியாமல் அல்லல்படுவதாக கூறும் ‘படர்மெலிந்து இரங்கல்’ என்ற அதிகாரத்தில் அமைந்துள்ள பாடல்கள் உணர்த்தும் பண்பை,

*‘மறைப்பேன்மன் யான்இஃதோ நோயை இறைப்பவர்க்கு*

*ஊற்றுநீர் போல மிகும்’*[87]

இஃதோ நோயை எனும் இச்சொல் காதல் நோயைக் குறிக்கின்றது.

*‘சுரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் செய்தார்க்கு*

*உரைத்தலும் காணுத் தரும்’*[88]

*காமமும் நானதும் உயிர்காவாத் தூங்கும்என்*

*கோனா உடம்பீயின் அகந்து’*[88]

இக்குறளில் கருத்திற்கு ஒப்ப கலித்தொகை பாடல் அமைந்துள்ளது.

*‘காமக் கடும்பகையற் றோன்றினேற் காமம்*

*எழினுதல் ஈத்த இம்மா’*[90]

வலிமை இல்லாத என் உடம்பில் உயிரையே காவடியாக கொண்டு காதல் நோய் ஒரு பக்கமும் வெட்கம் இன்னொரு பக்கமும் தொங்குகின்றன என்று தலைவி கூறுவதாக அமைந்துள்ளது. இதனை,

*‘இன்பம் கடல் மாற்றுக் காமம் அஃது அடுங்கால்*

*துன்பம் அதனின் பெரிது’*[91]

*‘காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்*

*யாமத்தும் யானே உளேன்’*[92]

‘தனிப்படர் மிகுதி’ என்ற அதிகாரத்திலும், ‘பிணி’ என்ற இளிவரல் மெய்ப்பாடு சுட்டப்பட்டுள்ளது.

*‘உறாஅர்க்கு உற்றுநோய் உரைப்பாய் கடலைச்*

*செறாஅ அய் வாழிய நெஞ்சு’*[93]

*அன்பு இல்லாத காதலருக்குத் தான் உற்ற துன்பத்தை உரைக்கின்றதைக் காட்டிலும், அந்த துன்பத்தைக் நீக்குவதில் ஈடுபடுவது எவ்வளவோ மேல் என்றும் நலம்பயக்கும் என்றும், தலைவி தலைவனிடமிருந்து எந்தவொரு தூதுச் செய்தியும் வராத நிலையில் தன்னுடைய நெஞ்சுக்குத் தானே கூறிக் கொள்கிறாள்.*

## கள்ளும் காமமும்

*அர்த்தசாத்திரத்தில் மதுபான வணிகம் செய்வதை வள்ளுவர் எதிர்த்தார். மற்றும் சூது, இறைச்சிக்கடை, விபச்சாரம், மது ஆகியவற்றையும் பண வருவாய்க்காக நடத்துவதையும் சமண மதக் கொள்கை சார்ந்து அரசியலில் ஒதுக்கினார்.*

*கள் உண்ணாமை என்ற 93வது அதிகாரத்தில் கள் உண்பதை வள்ளுவர் கண்டித்தார். புகழை இழந்து பகைவர் பயம் நீங்காமை, சான்றோர், தாயார் வெறுப்பர். நாணயம் போகும், உடம்பு கெடும், அறிவு மயங்கும், ஊரவர் சிரிப்பார், உடற்சோர்வு, மயக்கம் தரும் என்பார்.*

## வள்ளுவரின் கூற்று

*வள்ளுவர் காமத்துப்பாலில் கள் உண்டவரிடத்து அல்லாமல் கண்டவரிடத்திலும் காமம் ஏற்படக்கூடியது என*

**‘உண்டார்கண் அல்லது அடுநறாக்காமம் போல்கண்டார்**

**மகிழ் செய்தல் இன்று’** [94]

*மற்றும் கள் உண்டு மயங்க மயங்க கள் உண்பதையே விரும்பவது போன்றது காமம்*

**‘கவ்வையால் கவ்விது காமம்’**[95]

*என்பார்*

*நினைத்ததும் களிப்பும் கண்டதும் மகிழ்ச்சியும் காமத்துக்கு உண்டு கள்ளுக்கு இல்லை.*

***'உள்ளம் களித்தலும் காண மகிழ்தலும்***
***கள்ளுக்கு இல்லை காமத்துக்கு உண்டு'***[96]

*எனக் காமத்தையும் பாராட்டுவார், சிக்மண்ட் பிராய்டு.*

*கள்ளும் காமமும் மயக்கம் தருவன என்பதை வள்ளுவர் மறுப்பதற்கில்லை. 'இரண்டும் சமூகத்தில் தவறு செய்வதைத் தூண்டலாம் என்பதை நாள்தோறும் ஊடகங்கள் கூறுகின்றன.*

*காம நெருப்பைச் சிறிது தணிப்பதுபோல, காதல் காதல் நெருப்பு எனப் பாரதி பாடினான். வள்ளுவர் கள்ளைக் கண்டித்தது போல காமத்தைக் கண்டிக்கவில்லை. இயல்பானது, இயற்கையானது என விட்டுவிட்டார். இரண்டும் இன்பம், மயக்கம் தருவன என்பதை ஏற்பார். பொருட்பாலில் கள் உண்பதை நஞ்சுண்பது என்பார்.*

**காம உணர்வும் சாவுணர்ச்சியும்**

***'பாலோடு தேன்கலந் தற்றே பணிமொழி***
***வால்எயிறு ஊறிய நீர்'***[97]

*மென்மையான மொழி பேசுபவளின் தூய பற்களில் ஊறிய நீர் பாலுடன் தேன் கலந்தது போலாயிற்று.*

***'உடம்பொடு உயிரிடை என்னமற்று அன்ன***
***மடந்தையொடு எம்மிடை நட்பு'*** [98]

*உடம்புக்கும் உயிருக்கும் உள்ள நட்பு போல கூடிய இன்பம் அவருடன் கூடியது.*

***'கருமணியில் பாவாய்நீ போதாய்யாம் வீழும்***

***திருநுதற்கு இல்லை இடம்'***[99]

*கண்ணின் கருமணியுள் உறையும் பெண்ணே போய்விடு. நான் விரும்பும் இவளுக்கு என் கண்ணில் இருக்க இடம் வேண்டும்.*

***'வாழ்தல் உயிர்க்கு அன்னள் ஆயிழைசாதல்***

***அதற்கு அன்னள் நீங்கும் இடத்து'***[100]

*புணரும்போது இவள் உயிர் போன்றவள். பிரியும் போது உயிர்க்குச் சாவு போன்றவள்.*

*மேற்கண்ட குறள்கள் சிக்மண்ட் பிராய்டின் சாவுணர்ச்சியையும் சாவுணர்ச்சி எண்ணத்தையும் பிரதிபலிப்பதை உணரலாம். காமம் மரண உணர்ச்சியை ஏற்படுத்தக் கூடியது என்பதை உணர முடிகிறது.*

***'வள்ளுவன் மன்யாண் மறப்பின் மறப்பறியேன்***

***ஒள்ளமர்க் கண்ணாள் குணம்'***[101]

*மறப்பதும் நினைப்பது என்பவை நினைவிலி மனதையும் நனவு மனதையும் பிரித்துக் காட்டும். பிராய்டின் நனவு, நனவிலி மனக் கோட்பாடு பற்றி இதில் பேசப்படுகிறது.*

***'கண்உள்ளின் போகார்; இமைப்பின் பருவரார்;***

***நுண்ணியர்எங் காத லவர்' (1126)***[102]

*கண்ணிலிருந்து போக பாட்டார். இமைத்தால் துன்பமடைவதில்லை. அவர் நுட்பமான காதலர்.*

***'கண் உள்ளார் காதலவராகக் கண்ணும்***

***எழுதேம் கரப்பார்க்கு அறிந்து' (1127)***[103]

*எப்போதும் கண்ணுள் உள்ளார். மை எழுதினால் அவர் மறைவதை எண்ணி எழுந்தேன்.*

***'உவந்து உறைவர் உள்ளத்துள்என்றும், இகந்துஉறைவர்***
***ஏதிலார் எண்ணும்இவ் வூர்' (1130)*** [104]

*அவர் என் நெஞ்சில் என்றும் மகிழ்ந்து உறைவர். அன்பில்லாதவர் என இவ்வூரார் அவரைப் பழிப்பர்.*

*காமம் தரும் தீவிர மகிழ்ச்சியை முதலில் கூறிய வள்ளுவர் பின்னர் இன்பத்தைச் சுவைத்து மகிழ்ந்தவன் சமூகத்திற்குத் தன் செயலை நீதிப்படுத்துவதாகவும் கூறப்படுவதை அறிய முடிகிறது.*

**காமத்துப்பாலில் தலைவன்**

***'நாணொடு நல்லாண்மை பண்டுஉடையேன் இன்றுஉடையேன்***
***காமுற்றார் ஏறும் மடல்'*** [105]

*நாணமும் ஆண்மையும் பெற்றிருந்தேன். காமத்தால் இன்று மடலேறுதல் துணையாயிற்று என்று கூறுகிறான்.*

***'காமக் கரும்புனல் உய்க்குமே நாணொடு***
***நல்லாண்மை என்னும் புணை'*** [106]

*காமநோயுடன் புயலைக் கடக்க முடியாது. வெட்கமும் ஆண்மையும் என்னும் தோணிக் கொண்டு என மொழிகிறான் தலைவன்.*

***'தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு***
***மாலை உழக்குந் துயர்'*** [107]

*காமம் என்னும் மாலை நேரத் துன்பத்தை வளையல் அணிந்தவள் தந்தாள் என தலைவன் புலம்புகிறான்.*

**‘மடல்ஊர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற**

**படல்ஒல்லா பேதைக்குஎன் கண்’**[108]

*மடல் ஊர்தல் துன்பத்தை நள்ளிரவிலும் நினைக்கின்றேன். காதலியின் காரணமாக என் கண்கள் உறங்குவதில்லை.*

*காமத்தின் வன்மையை மேற்கண்ட பாடல்கள் உணர்த்துகின்றன. மடலேறும் துன்பம் வதை இன்பம் போல் சிக்மண்ட் பிராய்ட் ‘இட்’ கோட்பாடு லிபிடோ என்னும் பாலின்பத்தையும் ஆக்கிரமிப்புத் துன்பத்தையும் கூறும். ஊடியது அதன் ஒரு பகுதி என்பதும் சிந்திக்கத்தக்கது. இரண்டும் காம நிலை சார்ந்து கூறப்படுவதே ஆகும்.*

**புணர்ச்சிப் பிரிவால் வருந்தும் கூற்று**

**‘செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்**

**வல்வரவு வாழ்வார்க்கு உரை’** [109]

*பிரியாமை உண்டாயின் எனக்குச் சொல், பிரிந்து போய் விரைந்து வருதல் எனின் அப்போது உயிர் வாழத் தக்கவருக்குக் கூறு.*

**‘இன்கண் உடைத்தவர் பார்வல்; பிரிவுஅஞ்சும்**

**புன்கண் உடைத்தால் புணர்வு’ *(1152)***[110]

*பார்வை முன்பு இன்பம் தருவதாக இருந்தது. இன்பத்தை உடைத்து புணர்ந்திருக்கும் இருப்பு பிரிவாரே என்று அஞ்சப்படும் துன்பத்தை உடையது.*

**‘தொடின்கடின் அல்லது காமநோய் போல**

**விடின்கடல் ஆற்றுமோ தீ’ *(1159)*** [111]

*தீ சுட்டால் சுடுமே அல்லாமல் காமநோய் தன்னை விட்டுப் போகும் போது கூட வல்லது.*

*'அரிதுஆற்றி அல்லல்நோய் நீக்குப் பிரிவுஆற்றிப்*

*பின்இருந்து வாழ்வார் பலர்' (1160)* [112]

காமநோயை விளக்கிப் பிரிந்திருப்பதைப் பொறுத்துக் கொண்டிருப்பது பின் அவருடன் கூடி வாழ்பவரே பலர்.

காம புணர்ச்சியில் ஈடுபட்டவர் பிரிவது பெருந்துன்பம். ஆயினும் பலர் மீள வந்ததும் கூடி வாழ்கின்றனர். காமத்தின் இயல்பினையும், காமச் சிறப்பினையும், காமநோய் வந்ததால் ஏற்படும் துன்பத்தையும் கூற்று அடிப்படையில் ஆராயப்பட்டுள்ளது.

## தொகுப்புரை

தூய உள்ளுணர்வால் ஒருவரையொருவர் உணர்ந்து பழகிய உயர்ந்த அன்பு வாழ்க்கையை இன்பமாக வாழ வழிகாட்டுகின்ற அன்பு நெறியே காமமாகும்.

உடலில் இரத்தம் ஓடிக் கொண்டே இருப்பதால் உடல் இயங்கிக் கொண்டே இருப்பதுபோல, இன்ப உணர்வோட்டங்கள் நரம்புகளிலே இடையறாது ஓடிக்கொண்டே இருப்பதால்தான் உலக இயக்கம் சீராக நடைபெற்றக்கொண்டிருக்கிறது. இன்பம் என்பது எல்லா உயிர்களுக்கும் பொதுவானது.

வாழ்க்கை என்பது பிறரை அடக்கி வென்றால்தான் அவர்களுடன் வாழமுடியும் என்ற நிலையில் இயங்கிக் கொண்டிருக்கும் உலகத்தில் அன்புடையவர்களிடம் அடங்கித் தோன்றுவதே நன்மை என்பதை உணர்த்தும் காதல் வாழ்க்கையை காமத்துப் பாலில் காண முடிகிறது.

*ஒருவரோடு ஒருவர் இணங்கி மனம் ஒத்து நடந்து கொள்வதால் காதல் வாழ்க்கை சிறக்கும் என்ற உண்மை உளவியல் ரீதியாக அறியப்படும் உண்மை செய்திகள்.*

*வெறுப்புக் கொண்டு அகன்றாலும் விருப்பங் கொண்டு நெருங்குகிறது என்ற அகச் செய்திகள் நிரம்பியதுதான் காதல் வாழ்க்கை.*

*இணைந்து வாழப் பழகுகின்ற சமுதாய வாழ்க்கையைத் தான் வாழப் பழகுவதுடன், வாழ்ந்து ஒழுகுவதும் உலகியல் வாழ்க்கையின் உயிரோட்டமாக முரண்கின்றனர். மானிட வாழ்க்கை மனிதனை மனிதனாக வாழச் செய்கிறது.*

# இயல் 4

## குறிப்புகள்

1. *திருவள்ளுவரும் சிக்மண்ட் பிராய்டும், ப. 15.*
2. *தொல். பொருள், நூ. 269.*
3. *தொல். பொருள். நூ. 29.*
4. *மேலது, ப. 219.*
5. *திருக்குறள், 1258.*
6. *மேலது, 986.*
7. *தமிழ் பேரகராதி, தொகுதி. ப. 368.*
8. *மேலது, ப. 368.*
9. *தொ.பொ. மீனாட்சி சுந்தரனார், வள்ளுவர் கண்ட நாடும் காமமும், ப. 161.*
10. *ஞா. தேவநேயர், தமிழா திருமணம், ப. 8.*
11. *திருக்குறள், 1166.*
12. *மேலது, 1245.*
13. *குறுந்தொகை, பா. 40.*
14. *திருக்குறள், 615.*
15. *மேலது, 56.*
16. *மேலது, 57.*
17. *புறநானூறு, பா. எண். 192.*
18. *திருக்குறள், 1102.*
19. *மேலது, 1101.*
20. *மேலது, 1113.*
21. *மேலது, 1107.*
22. *மேலது, 1302.*

23. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், பக். 204.

24. மேலது, பக். 29.

25. திருக்குறள், 1082.

26. தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ. 91.

27. திருக்குறள், 1081.

28. தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ. 259.

29. திருக்குறள், 1107.

30. மேலது, 1108.

31. மேலது, 1110.

32. மேலது, 1123.

33. தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ. 490.

34. திருக்குறள், 1103.

35. மேலது, 1099.

36. தொல்காப்பியம், நூ. 56.

37. மேலது, நூ. 99.

38. திருக்குறள், 1136.

39. மேலது, 1121.

40. மேலது, 1200.

41. மேலது, 1128.

42. மேலது, 1127.

43. மேலது, 1193.

44. மேலது, 1231.

45. மேலது, 1279.

46. மேலது, 1288.

47. மேலது, 39.

48. மேலது, 65.

49. மேலது, 156.

50. மேலது, 228.

51. மேலது, 946.

52. மேலது, 1330.

53. குறுந்தொகை, பா. எண். 32.

54. தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ. 1037.

55. திருக்குறள், 1289.

56. அகநானூறு, பா. எண். 28.

57. குறுந்தொகை, பா. 9.

58. பரிபாடல், பா. எண். 204.

59. மேலது, பா. எண். 120.

60. திருக்குறள், 1306.

61. மேலது, 227.

62. மேலது, 322.

63. மேலது, 1107.

64. மேலது, 946.

65. மேலது, 1326.

66. மேலது, 1110.

67. தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ. 190.

68. கலித்தொகை, பா. எண். 81.

69. திருக்குறள், 1106.

70. மேலது, 1263.

71. தொல். பரிமேலழகர் உரை, ப. 65.

72. தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ. 89.

73. குறுந்தொகை, பா. எண். 204.

74. திருக்குறள், 1330.

75. மேலது, 1116.

76. மேலது, 1105.

77. மேலது, 1236.

78. மேலது, 1306.

79. மேலது, 1326.

80. தொல்காப்பியம் பொருளதிகாரம், நூ. 32.

81. மேலது, நூ. 120.

82. திருக்குறள், 1102.

83. மேலது, 1137.

84. மேலது, 1138.

85. மேலது, 1159.

86. மேலது, 1150.

87. மேலது, 1161.

88. மேலது, 1162.

89. மேலது, 1163.

90. கலித்தொகை, பா. எண். 13, வரி. 24,25

91. திருக்குறள், 1166.

92. மேலது, 1167.

93. மேலது, 1200.

94. மேலது, 1090.

95. மேலது, 1144.

96. மேலது, 1281.

97. மேலது, 1121.

98. மேலது, 1122.

99. மேலது, 1123.

100. மேலது, 1124.

101. மேலது, 1125

102. மேலது, 1126.

103. மேலது, 1127.

104. மேலது, 1130.

105. மேலது, 1133.

106. மேலது, 1134.

107. மேலது, 1135.

108. மேலது, 1136.

109. மேலது, 1151.

110. மேலது, 1152.

111. மேலது, 1159.

112. மேலது, 1160.

# முடிவுரை

*சங்க இலக்கியம் எனப்படுவன பத்துப்பாட்டும், எட்டுத் தொகையும் ஆகும். சங்க இலக்கியங்கள் சொல்லாட்சி, பொருள், நயம், உவமை நலன், கற்பனை என்னும் பல்வேறு சிறப்பியல்புகளைக் கொண்டு விளங்குகின்றது. இலக்கியச் சிறப்பு, இலக்கியத் தோற்றம் ஆகியவற்றை முதன்மையாகக் கொண்டு விளங்குகின்றது சங்க இலக்கியங்கள். அச்சங்க இலக்கியங்கள் ஐந்திணைகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. அகம் ஐந்திணைகளுள் மருதத் திணைப் பாடல்கள் மட்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. 'சங்க இலக்கிய மருதத் திணைப் பாடல்களும் வள்ளுவரின் அக உளவியல் கூறுகளும் என்னும் தலைப்பின் அமைந்த இவ்வாய்வேடு நான்கு இயல்களைக் கொண்டு விளங்குகிறது. மருதத் திணைப் பாடல்களோடு வள்ளுவரின் அக உளவியல் செய்திகள் பகுத்து ஆயப்பட்டுள்ளது.*

*உளவியல் உலகின் தந்தையெனப் போற்றப்படும் சிக்மண்ட் பிராய்டின் உளவியல் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு ஆய்வு செய்யப் பெற்ற வகையில், உளவியல் பற்றின செய்திகள் அனைத்தும் உளவியலார் சிக்மண்ட் பிராய்ட் கூறும் கருத்துகளும் பிற தத்துவாதிகளின் கருத்துக்களும் உளவியல் இன்றைய கலை, இலக்கியங்களில் கையாளப்பட்ட இடங்களையும் விளக்கி சொல்லப்பட்டிருக்கிறது. உளவியலின் வளர்ச்சியும் வரலாறும் பற்றியும் பேசப்பட்டுள்ளது.*

*மருதநிலத்தில் மருதம் என்ற சொல் எவ்வாறு வழக்கில் ஏற்பட்டது என்பது பற்றியும் மருதத் திணை மக்களின் வாழ்வியல் ஒழுகலாறுகள், வள்ளுவன் கண்ட அகம், பிரிவு ஆற்றாத தலைவி, பிரிவின் வருத்தம், ஆண்,*

பெண், காம வெளிப்பாட்டை உணர்த்தும் விதம் பிராய்டின் பாலியல் கருத்து, மன இறுக்கம் ஆகிய பற்றி விளக்கும் வகையில் அமைந்துள்ளது.

மனிதன் தோன்றிய காலந்தொட்டு உளவியலும் வளர்ந்துள்ளது. ஆயினும் உளவியல், மனம் குறித்த சிந்தனைகள் பதினாறாம் நூற்றாண்டில் இருந்து தொடங்குகின்றன. மருத்துவ இயலின் தந்தை எனப்படும் ஹிப்போகிரேட்டஸ் காலத்தில் மனநல மருத்துவம் தோன்றியதை அறிய முடிகிறது. உளவியல் ஓர் அறிவியல் துறையாகச் சிறந்த விளங்கியது. ஆல்பிரட் ஆட்லர், யூங், லக்கான் போன்ற உளவியல் அறிஞர்கள் காலத்தில் தோன்றிய சிக்மண்ட் பிராய்டு உளவியலின் தந்தையெனப் போற்றப்படுகிறார். அவரது உளப்பகுப்பாய்வுமுறை (Psycho Analysis) சமூகத்தில் காணப்படும் உளநோய்களைக் குணப்படுத்தக் காரணமாயிற்று.

திருவள்ளுவரும் சிக்மண்ட் பிராய்டும் எந்தெந்த இடத்தில் ஒத்துப் போயினர் என்பதை விரிவாக எடுத்தரைக்கப்பட்டுள்ளது. நனவு மனம், நனவிலி மனம் பற்றி சிக்மண்ட் பிராய்டின் கருத்தக்களம் திருவள்ளுவரின் உளவியல் செய்திகளும் ஒன்றோடொன்று தொடர்புடையன என்பவை பற்றியும் வேறுபட்ட தன்மைகள் பற்றியும் விரிவாக வகைப்படுத்திக் கூறப்பட்டுள்ளது.

இயற்கை வலியது, முற்றாக வெல்ல முடியாதது. சமூகப் பண்பாடு, வளர்ந்து வரும் விஞ்ஞானம், தொழில் நுட்பம் மூலம் பலவற்றைக் கட்டுப்படுத்த முயல்கின்றோம் காமம் உட்பட. காதல் என்ற பிரச்சாரம் மூலம், கலை இலக்கியங்கள் ஆக்கப்படுகின்றன. காமத்தை ‘காதல்’ உணர்வாகவே பண்பாடு என வெளிப்படுத்துகிறோம். காம உணர்வை வள்ளுவர், சிக்மண்ட் பிராய்டு தயக்கமின்றி வெளிப்படுத்தினர். சமூகப் பண்பாட்டு முறைகள் நம்மைக் கட்டுப்படுத்துகின்றன. நவீன கலை

*இலக்கியம், சினிமா, டிவி போன்ற ஊடகங்கள், காம நோயைத் தணிக்க வாய்ப்பளிக்கின்றன, தீர்க்க அல்ல. இந்த உண்மை நிலையை நாம் பேசுவதில்லை, எழுதுவதில்லை. நடைமுறையில் அனைவரிடமும் உண்டு. பண்பாடான 'காதல்' என்ற வார்த்தையை நாம் பயன்படுத்துகிறோம்.*

*காமத்தைக் கட்டுப்படுத்துவதாக சட்டவிதிகள், அறநெறிகள், சமய போதனைகள் முயலுகின்றன. ஆயினும் இவை மீறப்படுவதை நாள்தோறும் ஊடகங்கள் கூறுகின்றன. ஆனால் சங்க இலக்கியங்களும் திருக்குறளும் காமத்தை மறைத்தோ, ஒளித்தோ பேசவில்லை என்பதை இவ்வாய்வேடு நிரூபிக்கிறது. சங்க அகநூல்களையும் திருவள்ளுவரது குறளையும் பின்வரும் ஆய்வாளர்கள் உளவியல் கண் பொருத்தி ஆய்வுகள் நிகழ்த்தலாம்.*

# பொருளடக்கம்

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரம்


டாக்டர் தே. ஆண்டியப்பன் – குறள் கண்ட நாடும் வீடும்
வானதி பதிப்பகம்
தி. நகர், சென்னை.

தி.கு. இரவிச்சந்திரன் – சிக்மண்ட் ஃப்ராய்ட்
உளக்குபகுப்பாய்வு அறிவியல்
அலைகள் வெளியீட்டகம்
சென்னை – 600 024.

நா. சஞ்சீவி – சங்க இலக்கிய ஆராய்ச்சி
அட்டவணைகள்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை – 1968.

சண்முகம், தா.எ. – தமிழ் இலக்கியத்தில் உளவியல்,
திறனாய்வு அணுகுமுறைகள்
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னை – 13,

தமிழண்ணல் – சங்க மரபு
தமிழண்ணல்
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை – 1.

முவ. பரணன் – தமிழ் ஐந்திணை
திமிழருவிப் பதிப்பகம்
பி. 23, தமிழருவி
அதியமான் நகர், திருச்சி – 620 013.

கு.வெ. பாலசுப்ரமணியம் – சங்க இலக்கிய கொள்கை
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை – 1.

இரா. மணிமேகலை – சங்கத் தமிழ் காதல்
சபாநாயகம் பிரிண்டர்ஸ்
சிதம்பரம்.

மூதறிஞர் வ.சுப. மாணிக்கம் – தமிழ்க்காதல்
மெய்யப்பன், தமிழாய்வகம்
53, புதுத்தெரு, சிதம்பரம் – 608 001.

கி.வா. ஜெகந்நாதன் – திருக்குறள் ஆராய்ச்சி பதிப்பகம்
ஸ்ரீராமகிருஷ்ணா மிஷன் வித்யாலயா
கோவை ஜில்லா, அமுத நிலையம்
தேனாம்பேட்டை, சென்னை – 18.

## துணைமைச் சான்றாதாரம்

அந்தணிஸ்டோர் மணி, சி. – ஃப்ராய்ட்– மிகச் சுருக்கமான அறிமுகம்
அடையாளம் வெளியீடு, 2005
கருப்பூர் சாலை, புத்தாநத்தம் – 613 316.

முனைவர் பெரி அழகம்மை – சிலம்பில் மக்கள் வாழ்வும் வழிபாடும்
உயிரெழுத்து பதிப்பகம்
கருமண்டபம், திருச்சி – 1.

அலெக்சிஸ் காரல், நடராசன் (மொ.ஆ) – மனிதன் புரியாத புதிர்
முல்லைப் பதிப்பகம்
323/10, கதிரவன் காலனி
அண்ணாநகர், மேற்கு சென்னை – 10.
முதற் பதிப்பு, டிசம்பர் 2005.

முனைவர்கி. இராசா – தினம் ஒரு திருக்குறள்
பார்த்திபன் பதிப்பகம்
திருச்சிராப்பள்ளி.

முனைவர் கி. இராசா – தொல்காப்பியம் பொருளதிகாரம்
பாவை பப்ளிகேஷன்ஸ்
இராயப்பேட்டை, சென்னை – 600 014.

பாஞ். இராமலிங்கம் – மானிட உளவியல்,
சாரதா பதிப்பகம், சென்னை – 600 014.

மு. இராசமாணிக்கம் – உளவியல் துறைகள் தொகுதி
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
சென்னை.

இலக்குவன், செ. – உளவியல் நிபுணர் கையேடு
திருக்குறள் பதிப்பகம், பெரியார்தெரு
எம்.ஜி.ஆர் நகர், சென்னை – 78.
முதல்பதிப்பு, டிசம்பர் 2003.

இலக்குவன், செ. – மனச்சிறகை விரித்து
திருக்குறள் பதிப்பகம்
பெரியார் தெரு, சென்னை – 8.
முதல்பதிப்பு, டிசம்பர் 2003.

சி. இலக்குவனார் – வள்ளுவர் கண்ட இல்லறம்
மீனா புத்தக நிலையம், சென்னை – 4

ஏப்ரகாம். ஜே.எஸ். – உளவியல் ரீதியாக உருவாகும் நோய்கள்
ஒ ருவிளக்கம்
நர்மதா பதிப்பகம், சென்னை.
முதல்பதிப்பு, 2003.

ஔவை துரைசாமிப்பிள்ளை – ஐங்குறுநூறு, அண்ணாமலைப்
பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர்,
சிதம்பரம்.

செ. கணேசலிங்கம் – திருவள்ளுவரும் சிக்மண்ட் ப்ராய்டும்
காமத்துப்பால் சார்ந்த ஒப்பீடு
குமரன் பப்ளிசர்ஸ், சென்னை – 6.

கலைமணி, என்.வி. – சிக்மண்ட் ஃபிராய்டின் நம்மை
மேம்படுத்தும் எண்ணங்கள்
சாந்தி நிலையம், சென்னை – 600 017.
முதல்பதிப்பு, பிப்ரவரி 2001.

சண்முகம், தா.ஏ. – உளநலவியல்
தமிழ் வெளியீட்டுக் கழகம்
சென்னை.
பதிப்பு – 1970.

சந்திரமோகன் – சிந்தனையாளர் ஃபிராய்டு
அரு. இராமநாதன் (ப.ஆ.) பிரேமா பிரசுரம், ஆற்காடு சாலை
கோடம்பாக்கம், சென்னை – 600 024.
ஏழாம் பதிப்பு, மே. 2005.

டாக்ர். ம.பொ. சிவஞானம் – சிலப்பதிகாரத் திறனாய்வு
பூங்கொடி பதிப்பகம்
14, சித்திரைக் குளம் மேற்குத் தெரு
மயிலாப்பூர், சென்னை – 600 004.

சிவராஜ், து. – சங்க இலக்கியத்தில் உளவியல்
சிவம் பதிப்பகம், வேலூர் – 632 002.
முதல் பதிப்பு – 1994.

சிவலிங்கனார் – தொல்காப்பியம் உரைவளம்
பொருளதிகாரம் (கற்பியல்)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை – 600 113.

முனைவர் நா. சிவாஜி கபிலன் – கண்ணதாசன் நாவல்களில் உளவியல்
குகன் பதிப்பகம், வி.கே.கே. பில்டிங்
வடுவூர் – 614 019.
மன்னார்குடி, திருவாரூர், ஏப்ரல் 2012.

ந. சுப்புரெட்டியார் – அகத்திணைக் கொள்கைகள்
பாரி நிலையம்
சென்னை, 1981.

சோமசுந்தரம் – மனநோயும் இன்றைய மருத்துவமும்
ஓ. ஜெயராமன் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட்
கிருஷ்ணன், தி லிமிடெட், சென்னை.
மூன்றாம் பதிப்பு, 1986.

| | | |
|---|---|---|
| தூரன். பெ. | – | அடிமனம்<br>அமுத நிலையம், சென்னை – 600 017.<br>பதிப்பு 1957. |
| தொல்காப்பிய இலக்கிய கோட்பாடுகள், கருத்தரங்கக் கட்டுரைகள் | – | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>சி.ஐ.டி. வளாகம்<br>தரமணி – சென்னை – 13. |
| நலங்கிள்ளி, அரங்க. | – | இலக்கியமும் உளப்பகுப்பாய்வும்<br>184, பிராட்வே, பாரிநிலையம்<br>சென்னை – 600 001. |
| நாகூர் ரூமி | – | கனவுகளின் விளக்கம்<br>ஸ்நேகா 348, டி.டி.கே. சாலை,<br>இராயப்பேம்டை, சென்னை – 600 014.<br>முதற்பதிப்பு, டிசம்பர் 2004. |
| அ. பாண்டுரெங்கன் | – | தொகை இயல்<br>தமிழரங்கம், புதுச்சேரி – 8. |
| சி. பாலசுந்தரம் | – | தொல்காப்பியம் பொருளதிகாரம்<br>(அகத்திணையியல், புறத்திணையியல்<br>ஆராய்ச்சிக் கட்டுரை)<br>தாமரை வெளியீட்டகம், தஞ்சாவூர். |
| பெசன்ட் கிரீப்பர் ராஜ் | – | பித்தரின் உலகம்<br>தமிழ் வெளியீட்டுக் கழகம்<br>சென்னை, பதிப்பு 1965. |
| இராம. பெரியகருப்பன் | – | சங்க மரபு<br>மீனாட்சி புத்தக நிலையம்<br>48, தானப்ப முதலி தெரு<br>மதுரை – 625 001. |
| பெருமாள், அ.நா. | – | இலக்கியத் திறனாய்வில் உளவியல்<br>அணுகுமுறைத் திறனாய்வு<br>அணுகுமுறைகள், உலகத் தமிழாராய்ச்சி<br>நிறுவனம், சென்னை – 600 113.<br>முதற் பதிப்பு மார்ச் 1989. |

| | | |
|---|---|---|
| போவாஸ் ஜி.டி.<br>வரதராஜுலு, அ. (மொ. ஆ) | – | பொது உளவியல்<br>தொகுதி – 1<br>தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம்,<br>சென்னை. பதிப்பு – 1972. |
| மணி. என். | – | மனநலம் – மகிழ்ச்சி தரும் உண்மைகள்<br>கே.எஸ். அறக்கட்டளை, கே.எஸ்.<br>மருத்துவமனை, மடத்துத் தெரு,<br>கும்பகோணம்.<br>முதல் பதிப்பு, அக்டோபர் 2005. |
| முனைவர் பொ. மணிவண்ணன் | – | காமத்துப்பால்<br>காதல் குறட்பாக்கள்<br>சீதைப் பதிப்பகம், சென்னை – 600 004. |
| முனைவர் சி.இ. மறைமலை | – | இலக்கியமும் உளவியலும்<br>மணிவாசகர் பதிப்பகம்<br>56, லிங்கத் தெரு, சென்னை – 600 001. |
| முனைவர் சா. மீனா ஜெயக்குமார்<br>முனைவர் பா. தனபாக்கியம் | – | மண்ணும் மனித உறவுகளும்<br>முதுகலைத் தமிழ்த்துறை<br>புனித சிலுவை தன்னாட்சிக் கல்லூரி<br>திருச்சிராப்பள்ளி – 2. |
| டாக்டர் மு. மோகனராசு | – | தொல்காப்பியமும் திருக்குறளும்<br>சென்னை பல்கலைக்கழகம்<br>1986. |
| டாக்டர் மு. வரதராஜன் | – | திருவள்ளுவர், வரதராஜன்<br>காக்ஸ்மன் பதிப்பகம்<br>சென்னை – 600 108. |
| மு.வ. வரதராசனார் | – | திருக்குறள் அல்லது வாழ்க்கை<br>விளக்கம்<br>பாரி நிலையம், சென்னை – 8. |

வாசு. கண்ணன் – உள்மன ஆற்றல்கள்
நர்மதா பதிப்பகம், ராஜ பாதர் தெரு
பாண்டி பஜார், தி. நகர், சென்னை – 17.
பதிப்பு – 2005.

ச. வின்சென்ட் – ஃபிராய்டு
எதிர் வெளியீடு, பொள்ளாச்சி – 2.

மு. விஜயலெட்சுமி – திருக்குறள் மூலமும்
பரிமேலழகருரையும்
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
திருநெல்வேலி, சென்னை – 18.

முனைவர் இரா. ஜெகதீசன்
முனைவர் க. முருகேசன்
முனைவர் வேல் கார்த்திகேயன் – பத்துப்பாட்டு ஆய்வுக்கோவை
பெரும்பனாற்றுப்படை
குறிஞ்சி பதிப்பகம்
24, செங்குந்தர் முதல் வீதி
ஆம்பூர் – 635 802.

இரா. ஜெகதீசன் – நற்றிணை ஆய்வுக்கோவை
இரண்டாம் தொகுதி
சங்க இலக்கிய ஆய்வு மையம்
மதுரை.

ஜேம்ஸ் ஆலன்,
நடராஜன், இரா. (மொ. ஆ) – மனம்தான் மனிதன்
கண்ணதாசன் பதிப்பகம்
23, கண்ணதாசன் சாலை, தி. நகர்
சென்னை – 17.
இரண்டாம் பதிப்பு, டிசம்பர் 2005.

ஜேம்ஸ் டி. பேஜ்
(தமிழில் பெசன்ட் கிரீப்பர் ராஜ்) – பிறழ்நிலை உளவியல்
தமிழ் வெளியீட்டுக் கழகம்
சென்னை, பதிப்பு 1965.

ஸ்வாமி – மன இயல் – அதன் அறிவியல்
அறிவாலயம் – 38, கௌடியாமடம்
சாலை, இராயப்பேட்டை, சென்னை–14,
இரண்டாம் பதிப்பு, நவம்பர் 1999.

ஸ்ரீனிவாசன் ராமலிங்கம் – பயன் தரும் மனோதத்துவம்
நர்மதா பதிப்பகம், 10 நானா தெரு
பாண்டிபஜார், தி. நகர், சென்னை – 17.
பதிப்பு – 2000.

## ஆங்கில நூல்கள்

Colman James - Psychology and Effective Behaviour
D.B. Tarapore Vela Sons & Co.
Private Ltd., Bombay
First Reprint in India, 1971.
(USA 1960).

Henry James - Theory of Fiction, Perry Biss
Honghten Miffinoo, Boston, 1920.

Lawrence, D.H. - Why the Novel Matters
Phonemic House, Londo, 1961.
National Publishing House.

Robert B. Whites
Robert M. Gilliland - Elements of Phychopathology
The Mechanisms of Deference Grune and Stratton, New York, 1975.

Encyclopedia - The New Encyclopedia Britannica
Vol. 7, and Vol. 18, Chicago, 1973 - 74.

## கட்டுரைகள்

சண்முகம், தா.ஏ. – தமிழ் இலக்கியத்தில் உளவியல்,
திறனாய்வு அணுகுமுறைகள்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை – 600 113
முதற்பதிப்பு மார்ச் 1989.

திருநாவுக்கரசு, க.தா. – உளவியல் அணுகுமுறைகள் திறனாய்வு அணுகுமுறைகள்
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்
சென்னை – 600 113.
முதற் பதிப்பு மார்ச் 1989.

பெருமாள், அ.நா. – இலக்கியத் திறனாய்வில் உளவியல் அணுகுமுறை திறனாய்வு அணுகுமுறைகள்
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்
சென்னை – 600 113.
முதற் பதிப்பு மார்ச் 1989.

## அகராதிகள்

கலைக்களஞ்சியம் – தொகுதிகள் 8, 10, தமிழ்நாட்டு பாடநூல் நிறுவனம், சென்னை.

க்ரியா – க்ரியாவின் தற்காலத் தமிழகராதி
க்ரியா, சென்னை – 14.
ஜுன் 1992.